29.05.97

# கல்வி



महानं ब्रह्म

இயற்றியவர்

சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

*திருப்பராய்த்துறை-639 115*

*திருச்சி மாவட்டம்.*

1996



# பொருளடக்கம்



அத்தியாயம் — பக்கம்





# கல்வி

## 1. கல்வியின் விளக்கம்

மனிதன் ஆயுள்முழுதும் கற்றுக்கொண்டே
இருக்கவேண்டும்.
கற்க மறுப்பவன் வாழ மறுப்பவன் ஆகிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

### மனதைச் சீர்ப்படுத்துதல்

*கல்லுதல் என்பதன் பொருள் தோண்டுதல். கல் என்னும் அடிச் சொல்லிலிருந்து கலப்பை என்ற கருவிப் பெயரும் கல்வி என்ற பண்புப் பெயரும் வந்தன. நிலத்தைக் கிளறுதற்குக் கலப்பை பயன்படுகிறது. கல்வி கல்லுதல் என்பது மனதைக் கிளறித்திருத்திப் பண்படுத்துவதாம். நிலத்தை உழுது ஒழுங்குப் படுத்தாவிட்டால் அது வேளாண் மைக்கு உதவாது. கல்வி பயின்று மனதை மாண்புடைய தாக்காவிட்டால் அது நல்வாழ்வுக்கு உதவாது. தரிசு நிலத் துக்கும் உழுது உரம்போட்ட நிலத்துக்கும் எவ்வளவு வேற்றுமையோ, அவ்வளவு வேற்றுமை கல்லாதவனுக்கும் கற்றவனுக்கும் இடையில் உண்டு. பயன்படக்கூடிய பாங்கு பூமியில் இருந்தும், அதைப் பாழிடமாக விட்டுவிடுவது பேதைமையாகும். விளைவுக்கு ஏற்றதாக அதை வைத்திருப் பதும், வேண்டியவாறு அதினின்று விளைவு எடுப்பதுமே பொருத்தம். மக்களுள் பலபேர் பாமரராகப் பின்னணியில் கிடக்கின்றனர். கல்வியின்மையே அதற்குக் காரணம். விலங்குக்கும் மனிதனுக்கும் எவ்வளவு வித்தியாசமோ, அவ்வளவு வித்தியாசம் கற்றவனுக்கும் மற்றவனுக்குமிடை*

யில், என்றார் பேரறிஞர் ஒருவர். ஒருவேளை அவருடைய கூற்று மிகைப்பட்டதாயிருக்கலாம். ஆனால், அதில் அடங்கியுள்ள உண்மை மறுக்க முடியாதது. மக்களில் பெரும்பான்மையோருக்குப் போதியவளவு கல்வி வசதியில்லை. கல்வி வசதியிருந்தும் அதைப் பயன்படுத்திக் கொள்ள எல்லாரர்க்கும் விருப்பம்வருவதில்லை. ஆதலால் எத்தனையோ பேர் கிட்டத்தட்ட விலங்கின் நிலைமையிலேயே இவ்வையகத்தில் இருந்துவிடுகின்றனர். விலங்குத் தன்மையை மக்கள் தன்மையாக மாற்றியமைப்பதற்குப் பயன்படும் பயிற்சிகளனைத்தையும் கல்வி என்று பகரலாம்.

## இக்காலத்திய கல்வி

ஜன சமுதாயத்திற்கு இருப்பிடமாய் அமைந்திருப்பது இத்தொல்லுலகம். இதில் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறுவித நாகரிகங்களுடன் மக்கள் பண்டைக்காலத்திலும் வாழ்ந்திருந்தனர்; இக்காலத்திலும் வாழ்ந்து வருகின்றனர். அவர்களுடைய நாகரிகத்துக்கும் கல்விப்பயிற்சிக்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. அவரவர் பண்புக்கும் சூழ்நிலைக்கும் ஒப்ப வெவ்வேறு விதமான கல்வித்திட்டங்களை மக்கள் ஆங்காங்குத் தோற்றுவித்திருக்கின்றனர். அத்திட்டங்களனைத்தையும் தொகுத்தெடுத்து ஆராய்ச்சி பண்ணுவது இயலாத காரியம். எனினும் அத்தனை விதமான திட்டங்களும் நாளடைவில் ஒன்றோடொன்று இணைக்கப்பெற்றவைகளாயின. அந்தந்த நாட்டுக்குரிய கல்வித்திட்டமென்று பாகுபடுத்த முடியாத ஒற்றுமை நிலை இன்றைக்கு உலகெங்கும் உண்டாய் விட்டது எனலாம். நவீனக் கல்விமுறை என்று இயம்பினால் அது கிட்டத்தட்ட உலக முழுதுக்குமே பொதுவானதாய் இன்றைக்கு இருந்து வருகிறது. அத்த

கைய பொதுத்திட்டத்தை இப்பொழுது சுருக்கமாக ஆராய்வோம். வாசித்தல், எழுதுதல், கணக்குப் போடுதல் ஆகிய மூன்றும் உலகில் இன்றைக்கு எல்லா நாடுகளுக்கும் பொதுவானவைகளாயிருந்து வருகின்றன. ஆங்கிலத்தில் இவைகளை **Three R-s** என்பார்கள். அதாவது **Reading, Writing, Arithmetic.** இக்கொள்கைக்கு ஒப்ப தமிழ் நாட்டில் 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்னும் முதுமொழி உண்டு. ஈண்டு எண் கணக்கையும், எழுத்து மொழியையும் குறிக்கின்றன. நவீனக்கல்வி முறைப்படி இன்றைக்கு அமைந்துள்ள கலாசாலை ஒன்றை விளக்குவோம். அதில் படிக்கின்ற மாணாக்கர்கள் நன்குவாசிக்கத்தெரிந்தவர்களாக இருக்கிறார்கள். எழுத்து வேலையும் அவர்களுக்கு ஏராளமாக உண்டு. மாணாக்கன் ஒருவன் தனது படிப்பைப் பூர்த்தி பண்ணுவதற்கு முன்பு எத்தனையோ ரீம் பேப்பர்களை எழுதுதற்கென்று பயன்படுத்திவிடுகின்றான். தனக்குரியபுஸ்தகங்கள் பலவற்றை அவன் வைத்திருக்கிறான். தான்குறிப்பு எழுதி ஆயத்தப்படுத்திய கையெழுத்துப்பிரதிப் புஸ்தகங்கள் பலவற்றை அவன் அடுக்கடுக்காக வைத்திருக்கிறான். புஸ்தகங்கள் இல்லாத மாணாக்கனையோ, அவை இல்லாது கல்வி பயின்ற முதியோனையோ இந்நாளில் காணமுடியாது. இனி, ஒவ்வொரு கலாசாலைக்கும் உரிய நூல் நிலையம் **(Library)** இருக்கிறது. அதில் ஆயிரக்கணக்கான புஸ்தகங்கள் அடங்கியிருப்பதில் வியப்பொன்றுமில்லை. உலகில் சில ஸ்தாபனங்கள் சேகரித்து வைத்திருக்கிற புஸ்தகங்களை வரிசையாக அடுக்கினால் பல மைல் தூரம் அவைகள் தொடர்ந்து நின்று கொண்டிருக்கும் என்று கணக்கிடுகின்றனர். இக்காலத்திய கல்வித் திட்டத்தில் நமக்குக் கண்கூடாக விளங்கும் காட்சி இதுவேயாம்.

## ஆதியில் ஏற்பட்ட கல்வி

இனி, உலகிலேயே மிகப் பழமையதாயிருந்த கல்வித் திட்டம் ஒன்றை நினைவுக்குக் கொண்டு வருவோம். உலகிலுள்ள நூல்களுள் மிகப் பழையது ரிக்வேதம். அதற்கு முந்தைய நூல் ஏதேனும் இருந்ததாக ஆராய்ச்சிக்காரர் யாரும் கண்டு பிடிக்கவில்லை. பல ஆயிரம் ஆண்டுகளாக ரிக்வேதம், அதைத் தொடர்ந்து வந்த சாமவேதம், யஜுர்வேதம், அதர்வணவேதம் ஆகியவைகள் நம் நாட்டிலே மக்களுள் ஒரு சிறுபான்மையோரால் கசடறக் கற்கப்பட்டன. அவைகளை அக்காலத்திய மக்கள் நூல்களாக எழுதி வைத்துக் கற்கவில்லை. குரு ஓதுவதைக்கேட்டு சிஷ்யர்கள் அதே ஸ்வரத்துடன் ஓதிப்பழகினர். அப்படி ஓதிய வேதங்கள் அவர்களுடைய ஞாபகசக்தியில் இடம் பெற்றிருந்தன. வேதம் ஓதிய மனிதன் ஒருவன் தானே தனது மன அமைப்பில் அந்த வேத சொரூபமாக இருந்தான். இப்படி ஞாபக சக்தியில் நான்கு வேதங்களும் ஆயிரக்கணக்கான வருஷங்களுக்குப் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தன. அவ்வளவு காலம் அவைகளினுள் பாடபேதமோ, கருத்து வேற்றுமையோ, ஸ்வர வேற்றுமையோ உண்டாகாது அவைகளைப் பாதுகாத்து வைத்திருந்தது வியப்புக்குரிய செயலாகும். அத்தகைய கல்விமான்களை இக்காலத்தில் காணவே முடியாது. ஒருவேளை அந்த வேதியர்களுக்கு எழுத்து எழுதத் தெரியாமலேயே இருந்திருக்கலாம். ஆயினும் ஞானக் களஞ்சியங்களாக அவர்கள் திகழ்ந்து இருந்தனர். இரவில் ஆனாலும் சரி, பகலில் ஆனாலும் சரி, எந்த இடத்தில் ஆனாலும் சரி தங்கள் ஞாபக சக்தியினின்றே அவர்கள் ஞானத்தை மக்களுக்கிடையிலே ஓயாது வழங்கி வந்தனர். அத்தகைய கல்வித்திட்டம் ஒன்று பண்டொரு காலத்தில் நம் நாட்டில்

இருந்தது என்பதையும் அதுதான் கல்வித் திட்டங்களுள் உலகிலே முதன் முதல் தோன்றிய திட்டம் என்பதையும் நாம் மறந்து விடலாகாது. ஆதியிலேற்பட்ட அந்தத் திட்டத்தையும் அண்மையில் நடைமுறையிலிருக்கும் இக்காலத்திய கல்வித் திட்டத்தையும் இரண்டு எல்லைகளாக வைத்துக் கொண்டு இவ்விரண்டுக்குமிடையிலே உள்ள கல்வியின் வெவ்வேறு பகுதிகளைப் பாங்குடன் ஆராய்ச்சி பண்ணுவது நம் கடமையாகும்.

## பயிற்சியால் இயல்பை மாற்றலாம்

மக்கள் தங்களுடைய பிறவிக்குணத்தை மாற்ற முடியாது என்னும் கொள்கை இடைக்காலத்தில் நம் நாட்டில் ஆழ்ந்து இடம் பெற்றுவிட்டது. 'குலத்தளவேயாகுமாம் குணம்' என்கின்ற கூற்றும் அக்கொள்கையினின்று உதிப்பதாயிற்று. பிறக்கும் பொழுதே வெவ்வேறு இயல்புகளில் குழந்தைகள் அமைந்திருப்பது உண்மை. ஆனல் நல்ல கல்விப்பயிற்சியின் மூலம் பிறவியில் அமைந்துள்ள குணத்தை அறவே மாற்றிவிடலாம். இரண்டு சான்றுகளை ஈண்டு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்வோம். ஐரோப்பியர்கள் நாய்ப்பண்ணை வைத்து விதவிதமான ஜாதி நாய்களை வளர்க்கின்றனர். ஒழுங்குப்பாடான வாழ்க்கை அவ்விலங்குகளுக்குப் பயிற்சியின் மூலம் வழங்கப்படுகிறது. குறிப்பிட்ட வேளைகளில் நாய்களை அறைகளினின்று வெளியே வரவிடுகின்றார்கள். அவைகள் பொது இடம் ஒன்றில் கூடுகின்றன; வாலைக்குழைத்து விளையாடுகின்றன. மகிழ்ச்சியால் அவைகள் ஒன்றன் மீது ஒன்று தாவவும், கௌவவும், குரைக்கவும் செய்கின்றன. ஆஜர் எடுக்கும் வேளைவருகிறது. அதற்கென்று நியமிக்கப்பட்ட மனிதன் வருகின்றான். உடனே ஆரவாரம் அடங்குகிறது. ஒரு நாய்ப்பண்ணையில் ஐம்பது

நாய்கள் இருந்தால் அவையாவுக்கும் பெயர்கள் உண்டு. பெயர் கூப்பிடுகிற வரிசைக் கிரமப்படி ஒவ்வொன்றும் முன்வந்து நின்று தன் மெய் காட்டுகிறது. உணவு வேளை யில் வரிசையாகத் தட்டுக்களில் உணவு வழங்கப்படுகிறது. எந்த நாயும் தன் இஷ்டப்படி எந்தத் தட்டுக்கும் அருகில் போக அதற்கு அனுமதி யில்லை. முதலில் கூப்பிடப்பட்ட நாய் முதல் தட்டண்டை வந்து நிற்கிறது. அதேமுறையில் பெயர் கூப்பிடப்படுகிறபடி அத்தனை நாய்களும் வரிசைக் கிரமமாக வந்து நிற்கின்றன. அனுமதி தந்தபிறகே அதனதன் தட்டினின்று அவைகள் உணவு உண்ண ஆரம் பிக்கின்றன. வீதியில் திரியும் நாய்கள் உணவின் பொருட்டுச் சண்டைபோட்டுக்கொள்வது போன்று பண்ணையில் வளர்க் கப்படுபவைகள் செய்வதில்லை. ஒரு நாய் தவறுதல் செய்து விட்டால் அதற்குத் தண்டனை உண்டு. தனக்கு ஏன் அடி விழுந்தது என்று அது அறிந்துகொள்கிறது. ஒரு நாய்க்கு உணவு இல்லாது போட்டுவிடுவதுமுண்டு. அதை அறையை விட்டு வெளியில் போகவொட்டாது தடுத்துவிடுவதுமுண்டு. அதற்கெல்லாம் காரணத்தைக் குக்கலானது கண்டுகொள் கிறது! பிறகு அக்குற்றத்தைத் திரும்பவும் அது செய்வ தில்லை. நாய்ப்பண்ணை என்ற நாயின் சமூகத்தில் ஒரே ஒழுங்குப்பாடான வாழ்வைக் காணலாம். நாயின் நற்குணங் களுக்கு இன்னும் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன. பயிற்சி அல்லது கல்வியின் பயன் இதுவேயாம்.

நம்நாட்டில் தேவாலயங்களுள் மக்கள் பெருங்கூட்ட மாகச் செல்லுகிறார்கள். கடவுள் சாந்நித்தியத்துக்கு வந்தி ருப்பதாக அவர்கள் உணருகிறார்களா? ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக்கொண்டு அவர்கள் கோயிலினுள் முந்து கின்றனர். அவர்கள் செயலைப் பார்த்து மெய்ப்பொருளாகிய

இறைவன் மெச்சுவாரா? மக்கள் இன்னும் மாண்பு அடையப் பெறவில்லை யென்பதற்கு ஆலயத்தினுள் அவர்கள் நடந்து கொள்ளுவதே நல்ல எடுத்துக்காட்டு ஆகும். நல்ல பயிற்சி யின் மூலம் விலங்கின் தன்மையை ஒழுங்குப்பாடுடையதாக மாற்றியமைக்கலாம். பயிற்சியின்மையால் மக்களை மாக்கள் நிலையிலேயே இருக்கும்படி விட்டுவிடவும் கூடும். நல்ல கல்விப் பயிற்சி இல்லாதவிடத்து பேரியல்பு சிற்றியல்பாகக் குன்றிவிடுவது சாத்தியம். சீரிய கல்வியின் மூலம் மக்களை எத்தகைய மேலோராக வேண்டுமென்றாலும் மாற்றியமைக்க லாம். பண்பாடடையச் செய்தல் உயிர்வாழ்வன அனைத் துக்கும் பொதுவானது. ஸ்தாவரங்களாக இருப்பவைகளை அவைகளுக்கேற்றநிலையில்பண்படுத்தலாம்.ஜங்கமங்களைப் பற்றிய உண்மையும் அதுவே.விலங்கு இனம், பறவை இனம் ஆகியவைகளையும் பயிற்சியின் மூலம் உயர்நிலைக்குக் கொண்டுவரலாம். இனி, மக்களைப் பண்படுத்துவதில் வரை யறை கிடையாது. மற்ற உயிர்வகைகள் அடைகிற மேன் மைகளை யெல்லாம்விடப் பன்மடங்கு மேலான நிலைக்கு மனிதன் அதிவிரைவில் முன்னேற்றமடைய முடியும். கல்வி ஒன்றே அதற்குற்ற உபாயம் ஆகிறது.

## உணவுக்கு ஒப்பானது கல்வி

உணவை உண்டு செமிப்பதால் உடல் வளர்ச்சியடை கிறது. முறையாகக் கல்வியைப் பெறுவதால் மனது பண்பாடு அடைகிறது. உணவு இல்லாது எவ்வுயிரும் வாழ்ந்திருக்க முடியாது. கல்வியில்லாது யாரும் மேன்மை யடைய முடியாது. வெறும் உயிர் வாழ்க்கையில் விருப்பம் வைத்து மனிதன் காலமெல்லாம் உணவைத் தேடியலை கிறான். அல்லது உணவைப் பெறுவதற்கான செல்வத்தை அவன் தேடியலைகிறான்.அத்தகையவன் மனதைப் பெரிதும்

பட்டினிபோட்டுவிடுகிறான். தனது பேரியல்பைப் புறக் கணித்திருப்பதைப்பற்றிய உணர்வு அவனுக்குண்டாவ தில்லை. சமுதாயத்தில் பல்லாயிரக்கணக்கானபேர் பட்டினி கிடக்க நேரிட்டால் அது மிகப் பெரிய பாதகம் என்று உலகம் கூக்குரலிடுகிறது. எங்கிருந்தாவது உணவைத் தேடிக்கொண்டு வந்து உயிர்களைக் காப்பாற்றுவதற்கான முயற்சிகள் யாவும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. ஆனால் என்றைக்குமே உலகில் பெரும்பான்மையோர் கல்வி என்று சொல்லப்படும் மனதுக்குகந்த உணவில்லாமலேயே காலங் கழித்து வருகின்றனர். இந்தியாவில் இந்த அதிசயத்தை யுகாந்தரங்களில் கண்டுவருகிறோம். கல்வியின் உச்ச நிலையை சரித்திரத்துக்கும் எட்டாத மிகப் பூர்வீககாலத்தி லேயே கண்டறிந்தது நம் நாடு. பிறகு கல்வியென்பது யாரோ ஒரு சிறுபான்மையோரது தனியுரிமை என்று எண்ணி அதில் மக்களில் பெரும்பான்மையோர் கருத்தைச் செலுத்தாது இருந்துவிட்டதும் நம்நாட்டிலே நிகழ்ந்த நிகழ்ச்சியாகும். இதைப் புண்ணிய பூமி என்று நாம் சொல்லிவருகிறோம். இதுவரையில் நம் நாட்டிலே தோன்றியிருந்த மக்களின் தொகையை விமர்சனம் செய்து பார்த்தால் பரிதாபகரமான பேருண்மை ஒன்று புலப்படும். கல்வி என்னும் நல்லுணவை வேண்டியவாறு உண்டு அதைச் செமித்து சீரியர் ஆனவர் மிகச்சிலரேயாம். போதாத உணவு அருந்தி வயிறுவளர்ப்ப வர்கள் போன்று கல்வியை அரைகுறையாகப் பயின்று மனுஷத்தன்மையின் சில பகுதிகளில் பண்பட்டவர்களின் எண்ணிக்கை இன்னும் கொஞ்சம் அதிகமாகவே இருந்து வந்திருக்கிறது. பின்பு கல்விக்கு வகையில்லாதவர்களின் எண்ணிக்கையே யாண்டும் அதிகமாக இருந்துவந்திருக் கிறது. அப்படிக் கல்வித்துறையில் பட்டினி கிடந்தவர்கள்

அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. வையத்துள் கல்விக்கு வேற்றாராகப் பெரும்பான்மையோர் வாளாவிருந்து மாண்டுபோயினர். இதுகாறும் இருந்த அத்தகைய நிலைமை இனி முற்றிலும் மாற்றியமைத்தாகவேண்டும். நாடு முன்னேற்றம் அடைவதற்கு அதுவே முதற்படியாகும். தோட்டக்காரன் ஒருவன் எல்லாச் செடிகளுக்கும் பொதுவாக மண்ணைத் திருத்தி வேலி கட்டி, உரமிட்டு, நீர் பாய்ச்சுகிறான். பின்பு அதனதன் உள்வலிவுக்கொப்ப செடிகள் தாமாகச் சற்று உயர்ந்தும், தாழ்ந்தும் வளர்ந்துவருகின்றன. அதே விதத்தில் நல்ல சமுதாயம் ஒன்று மக்கள் எல்லார்க்கும் வேண்டியவாறு கல்விக்கான வசதிகளை அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறது. வலிவற்ற செடியும் தன் திறனுக்கு ஒப்ப ஓரளவு வளர்வது போன்று கல்வித்துறையில் வசதிகள் அமைந்திருந்தால் மக்கள் எல்லாரும் தத்தம் இயல்புக்கேற்ப முன்னேற்றம் அடைவது திண்ணம். நல்ல குடியானவன் ஒருவன் தனக்கு ஏற்பட்டுவிட்ட பிரதிகூலமான சூழ்நிலையைக் குறித்துக் குறைகூறுவதில்லை. அமைந்த நிலத்தையும் அகப்பட்ட விதையையும் வைத்துக்கொண்டு அவன் நல்ல விளைவு எடுக்கப் பாடுபடுகிறான். அதே விதத்தில் நம் சமுதாயமும் கல்வித்துறையில் பாடுபட்டாகவேண்டும். நம்நாட்டில் தோன்றியுள்ள மக்களைச் சிறப்பாக நாட்டுக்கும், பொதுவாக உலகுக்கும் இனிது பயன்படக்கூடிய நன்மக்களாகத் திருத்தியமைப்பது கல்வித்துறையிலே நாம் ஆற்றும் அரும்பணியாகும்.

## கணக்கற்ற கலைஞானங்கள்

கல்வியில் விதவிதமான கிளைகள் இருக்கின்றன. அவைகள் எண்ணிக்கையில் அடங்காதவைகள். அவை யாவையும் இன்று உலகம் ஒருவிதத்தில் மக்களனைவருக்கும்

பொதுவுடைமையாகச் செய்து வைத்திருக்கிறது. எத்துறையில் யாரும் வேண்டியவாறு கல்வியைப் பெறுவதற்கான வசதிகள் உலகெங்கும் அமைத்து வைக்கப்பட்டிருக்கின்றன. இத்தனைவிதமான கலை ஞானங்களின் தோற்றம், வளர்ச்சி, உயர்வு ஆகியவைகளை முறையாக ஆராய்ச்சி பண்ணுவது கல்வித்துறையிலே ஜன சமூகங்கள் அடைந்துள்ள முன்னேற்றத்தை ஆராய்ச்சி செய்வதற்கு ஒப்பாகும். முக்கியமான கலை ஞானங்கள் சிலவற்றைச் சான்றுகளாக ஈண்டு எடுத்துக்கொள்வோம்.

உயிர்வகைகள் அனைத்துக்கும் உணவு தேவை. அதைப் பெறும் விஷயத்தில் பூர்வீக மனிதன் விலங்கின் நிலையிலிருந்தான். இயற்கையில் காலமெல்லாம் அந்தந்த உயிர்க்குத் தேவையாயிருக்கும் உணவு ஏராளமாக உண்டாவதில்லை. ஒரு பருவத்தில் காய், கனி, கிழங்கு போன்ற உணவுப் பொருள்கள் ஏராளமாக அகப்படுகின்றன. வேறொரு பருவத்தில் அவைகளுக்கு முட்டு ஏற்பட்டு விடுகிறது. அத்தகைய நெருக்கடியைச் சமாளிக்க விலங்குக்குத் தெரியாது. ஒரு பருவத்தில் மிகைபட உண்பதும், மற்றொரு பருவத்தில் உணவில்லாது வாடியிருப்பதும் விலங்கின் போக்கு. அத்தகைய நெருக்கடி பூர்வீக மனிதனுக்கும் இருந்தது. ஆனால் சிந்திக்கும் சக்தி மனிதனிடத்துச் சிறப்பாய் இருக்கிறது. பழைய நிகழ்ச்சிகளின் ஞாபகமும் அவனுக்குண்டு. வருங் காலத்தைப்பற்றி யூகிக்கவும் அவனுக்கு இயலுகிறது. உணவைப்பற்றிய கேள்வி எக்காலத்திலும், மிகப் பெரிய கேள்வியாகும். ஆதி மனிதன் இதைப்பற்றி ஆழ்ந்து எண்ணினான். அகப்படுங்காலங்களில் உணவுப் பொருள்களைச் சேகரித்துப் பாதுகாத்து வைக்கப் பழகினான். பிறகு சாகுபடி செய்து பழகினான். விதவிதமான உணவுவகைகளை

ஆயத்தப்படுத்தும் கலைகளில் தேர்ச்சியடைந்தான். இவை யாவும் கல்வியின் ஒரு பகுதியாகும். இன்றைக்கு உலக சமுதாயங்கள் உணவுப் பொருள்களை உண்டு பண்ணு வதில், அவைகளைப் பாதுகாத்து வைப்பதில், அவைகளை விற்பது வாங்குவதில் எவ்வளவு தூரம் முன்னேற்றம் அடைந் திருக்கின்றன என்பது வெளிப்படை. விவசாயம், வர்த் கம், பொருளாதாரம், உணவுப் பண்டங்களைப் பாதுகாத்து வைப்பது முதலியன விதவிதமான கலை ஞானங்களாக அமைந்திருக்கின்றன.

காட்டில் வசிக்கும் உயிர்வகைகளுக்கு அதிகமாக நோய் உண்டாவதில்லை. ஆதி மனிதனும் நோயற்ற வாழ்வு என் னும் நிறை செல்வம் படைத்திருந்தான். ஆயினும் ஏதோ சில வேளைகளில் அவன் நோய்க்கு ஆளானான். அதைக் குறித்து அவன் ஆழ்ந்து எண்ணிப் பார்த்தான். நோயை நீக்குதற்கு விதவிதமான முறைகளைக் கையாண்டு பார்த் தான். அன்றுமுதல் இன்றுவரை அத்துறையில் அவன் பெற்றிருக்கும் வெற்றி ஒப்பற்றது. உலகில் பலவிதமான ஔஷதமுறைகள் கையாளப்பட்டு வருகின்றன. பழைய முறைகளிலும், புதிய முறைகளிலும் அதிசயிக்கத்தக்க ஔஷதங்கள் ஆயத்தமாகின்றன. இனி, ரண வைத்தியத் தில் இக்காலத்திய மனிதன் அடைந்திருக்கும் முன்னேற்றம் வியப்புக்குரியது. பிணிக்கு ஆளாகாது உடலைப் பாது காத்து வைத்திருக்கும் கலைஞானத்தில் அவன் தேர்ச்சி மிகப் பெற்றுவிட்டான். இக்காலத்திய ரண வைத்திய நிபுணர்களைப் பண்டைய மனிதர் சிருஷ்டிகர்த்தாக்க ளென்றே பகர்ந்திருப்பார்கள். மருத்துவத்துறையில் இவ் வளவு பெரிய முன்னேற்றம் ஆயிருப்பது கல்வியின் விளைவாம்.

இயற்கையில் எல்லா உயிர்வகைகளுக்கும் எதிரிகள் உண்டு. சத்துரு இல்லாத உயிரை இயற்கையில் எங்காவது காணமுடியாது. பகையினின்று தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுதலைப்பற்றிய பிரச்னை ஸ்தாவர ஜங்கமங்களாகிய அனைத்துக்கும் உண்டு. சிற்றுயிர்களிடத்திருந்தும், தன் போன்ற உயிர்களிடத்திருந்தும் மனிதனுக்கே ஆபத்து உண்டு. தன்னை அழிக்கமுயலும் மற்ற உயிர்களிடத்திருந்து தப்பிப் பிழைப்பது பெரிய பிரச்னை. பண்டைக் காலத்து மனிதன் இக்கேள்வியில் கருத்தைச் செலுத்தினான். தற் பாதுகாப்பின் பொருட்டும் பிற உயிர்களின்மீது ஆக்கிரமித் துச் செல்லுதற்பொருட்டும் விதவிதமான ஆயுதங்களை அவன் அமைத்துக்கொண்டான். பண்டைக்காலத்து ஆயு தங்கள் எளிய முறையில் அமைந்தவைகள். இக்காலத்திய ஆயுதங்களோ பெரும் நாசகாரிகளாக அமைந்திருக்கின்றன. நாட்டைப் பாதுகாப்பதற்கான படை வல்லமை கல்வியின் ஒரு பகுதியாய் அமைந்திருக்கிறது. போர்புரிவதைப்பற்றிய கலையே ஒரு தனி கலைஞானமாக உலகில் திகழ்ந்து வரு கிறது. அதில் திறமை பெறாது மனிதன் உலகில் நிலைத்து வாழ்ந்திருக்க முடியாது. கல்வியினின்றே இக் கலைஞான மும் வடிவெடுக்கலாயிற்று.

இயற்கையைத் தனக்கேற்றதாகத் திருத்தியமைக்க ஆதிமனிதன் முயன்றான். மழைபெய்யும்பொழுது அந்நீரை குளம் குட்டைகளில் சேகரித்து வைத்தல், கால்வாய்கள் வழி யாக வேண்டிய நிலங்களுக்கு அதை எடுத்துச் செல்லுதல் ஆகியவைகளில் பண்டைக்காலத்து மனிதன் வெற்றி பெற் றான். போர்க் கருவிகளை உண்டு பண்ணியது போன்று சாகுபடிக்கான கருவிகளையும் அமைத்தான். வண்டி வாக னங்களை நிர்மாணித்தான். காற்றையும், தீயையும் பயன்

படுத்தத் தெரிந்துகொண்டான். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இயற்கையிலுள்ள பூதங்களைப் பயன்படுத்துதற்கு மனிதன் செய்த முயற்சி இன்றைக்கு மகோன்னதநிலைக்குப் போயிருக்கிறது. ஐம்பூதங்களையும் அவன் கட்டி ஆளுகின்றான் என்றே இயம்பலாம். அவன் விரும்பியவாறெல்லாம் ஐம்பூதங்கள் அவனுக்கு வேலை செய்து வருகின்றன. பௌதிக விஞ்ஞானமயமாக இக்காலத்திய உலகம் திகழ்கிறது. கல்வியின் விளைவென்றே இதை விளம்பவேண்டும்.

பயப்படும் இயல்பு உயிர்வகைகள் அனைத்துக்கும் உண்டு. மற்ற உயிர்கள் எதிரியையும் இயற்கையின் சில நிகழ்ச்சிகளையும் குறித்து பயப்படுகின்றன. ஆனால் மனிதன் அடைகின்ற பயமோ என்னென்னவோ வடிவெடுக்கிறது. நோயைப்பற்றிய பயம், எதிரியைப்பற்றிய பயம், விருத்தாப்பியத்தைப்பற்றிய பயம், மரணத்தைப்பற்றிய பயம், செத்துப்போனவர்களைப்பற்றிய பயம், இயற்கையின் நிகழ்ச்சிகளைப்பற்றிய பயம், கட்புலனாகாத துஷ்டதேவதைகளைப் பற்றிய பயம்—இத்தனை விதமான பயங்களுக்கும் மனிதன் அன்றும், இன்றும், என்றும் ஆளாயிருக்கிறான். கல்வியில் மேல்நிலைக்குப் போகும் அளவே இத்தனைவிதமான பயங்களினின்று அவன் மீளுகிறான். இப்பயங்களில் பெரும்பகுதி மனோகற்பிதமாக வந்தவைகள் என்பதைக் கல்வியின்மூலம் அவன் அறிந்துகொள்கிறான். மனிதனுக்கு ஏற்பட்டிருக்கிற குறைகளனைத்துக்கும் நிவர்த்தி கண்டுபிடித்துத் தருவது கல்வியின் செயலாகிறது. மிகப்பூர்வீக காலத்திலிருந்து இக்காலம் வரையில் நம்நாடு பலதரப்பட்ட கலைஞானங்களில் முன்னேற்றம் அடைந்து வந்திருக்கிறது. உலகுக்குப் பொதுவுடைமையாக இருக்கிற கலைஞானங்களில் இந்தியா விரைந்து முன்னேற்றம் அடையக் கடமைப்பட்டிருக்கிறது.

## சீரிய கல்வியின் விளைவு

ஜனத்தொகையில் மிகக் குறைவாயுள்ள சமூகங்களில் ஒன்று ஆங்கில சமூகம். ஆனால் எல்லாத் துறைகளிலும் தகைமை வாய்ந்த பெருமக்களை அந்த சமூகம் தயாரித்து அவர்களை உலகெங்கும் உள்ள தங்கள் சாம்ராஜ்யத்துக்கு அனுப்பிய சிறப்பு ஆங்கிலேயர்களுக்கே உரியதாகும். அரசாட்சி நிபுணர், ராஜதந்திரிகள், போர் வீரர்கள், கடற் படை வல்லுநர், பேராசிரியர்கள், பௌதிக விக்ஞானிகள், இயந்திர சாஸ்திரிகள், மதபோதகர்கள், பத்திரிகை ஆசிரியர்கள், எழுத்தாளர்கள், மருத்துவப் புலவர்கள், ரண வைத்திய நிபுணர்கள், பொருளாதாரப் பேரறிஞர்கள், வாணிக வல்லவர்கள், கைத்தொழிலில் பேராக்கம் வாய்க்கப் பெற்றவர்கள், கிருஷிப்பண்பு படைத்தவர்கள், பலப்பல துறைகளில் கலைஞானிகள் — இத்தனைவிதமான தகைமையாளர்களை அச்சமூகம் ஓயாது ஆயத்தப்படுத்தி வந்திருக்கிறது. அவர்களிடத்து மற்றொரு சிறப்பு உண்டு. ஆங்கிலேயர்களுள் குறிப்பிட்ட ஒரு சிலர் மட்டும் இத்தகைய மேன்மைகள் வாய்க்கப்பெற்றவர்கள் என்றும், மற்றவர்கள் பின்னணியில் இருந்து வருகிறார்கள் என்றும் நாம் முடிவு கட்டலாகாது. ஒரு தேசத்தோடு வேறு ஒரு தேசத்தைச் சீர்தூக்கிப் பார்த்தால் கல்வித்துறையில் அவைகளிடத்துள்ள உயர்வு தாழ்வு நன்கு விளங்கும். பொதுப்பட ஆங்கிலேயர்கள் தகைமை மிக வாய்க்கப்பெற்றவர்கள். அவர்களுள் ஏதேனும் ஒரு நூறு பேரை எடுத்து ஆராய்ச்சி செய்து பார்த்தால் அதில் தொண்ணூறுபேர் திறமை வாய்க்கப்பெற்றவர்களாகத் திகழ்வார்கள். இதற்கு நேர் மாறாக இப்பொழுது இந்தியாவிலுள்ள நிலைமையை நாம் ஞாபகத்துக்குக் கொண்டுவரக் கடமைப்பட்டிருக்கிறோம்.

நம் நாட்டில் ஆயிரம் பேர்களுக்கிடையில் ஐந்து பேரிடத்து அத்தகைய பண்பாட்டைக் காண்பது அரிதாகும். ஆற்றலில் இவ்வளவு பெரிய வேற்றுமை எப்படி உண்டாயிற்று என்று எண்ணிப்பார்க்க வேண்டும். அதைப் பிறவிக்கூறு என்று பகர்வது பொருந்தாது. சிறிது காலத்துக்கு முன்பு ஆங்கிலேயர்கள் நம் நாட்டை ஆண்டு வந்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு வேலையாட்களாக இந்திய சமுதாயத்தில் இருந்த ஒரு சிலர் போய்ச் சேர்ந்தனர். அன்னவர்களைத் தாழ்த்தப்பட்டவர்களென்றும், சமுதாயத்தில் சீரான காரியங்களுக்கு உதவாதவர்கள் என்றும் நம்மவர்கள் கருதி வந்தார்கள். ஆனால் ஆங்கிலேயர்களுடன் தொடர்வு கொண்டவுடனே அப்படித் தாழ்த்தப்பட்டவர்களின் நிலைமை அறவே மாறிவிட்டது. ஆற்றலும், தன்னம்பிக்கையும், வாழ்க்கையில் முன்னேற்றமும் அவர்களிடத்து விரைவில் அதிகரிக்கலாயிற்று. மக்களோடு மக்கள் வைக்கிற நல்லிணக்கம் சீரிய கல்வியின் விளைவாம். தகைசான்ற பயிற்சி ஒன்றே தாழ்த்தப்பட்டவர்களாய் இருந்தவர்களை உயர்த்தப்பட்டவர்களாக்கி விட்டது. நல்ல கல்வியின் மூலம் நாடு ஒன்றை எவ்வளவு மேல்நிலைக்கு வேண்டுமென்றாலும் கொண்டு வரலாம் என்பது இதினின்று வெளியாகிறது. ஆங்கிலேயர்கள் தாங்களே மேன்மையடைந்திருப்பதுமல்லாது தங்களோடு தொடர்வு வைக்கின்றவர்களையும் மேல்நிலைக்குக் கொண்டுவந்து விடுகின்றனர். இடைக்காலத்து இந்தியா இப்பேரியல்பை மறந்துவிட்டது. இனி, அதை விரைவில் புதுப்பிப்பது தேசீயக் கல்வித் திட்டமாகும்.

## பண்பட்ட வாழ்வு

எழுதவும் படிக்கவும் கற்றுக்கொள்வதே கல்வி என்று சொல்லும் வழக்கம் இப்பொழுது நமக்கிடையில் இருந்து

வருகிறது. ஆனால் பண்டைக்காலத்தில் நம் நாட்டில் பலபேர் எழுதவும் படிக்கவும் தெரியாமலேயே நல்ல குடிமக்களாக இருந்து வந்திருக்கின்றனர். நல்வாழ்க்கைக்குரிய பயிற்சியைத்தான் உண்மையில் கல்வி என்று சொல்லவேண்டும். நம் நாட்டுப் பெண் மக்களிடத்து எழுதவும் படிக்கவும் தெரிந்துகொள்ளுதல் என்னும் கல்வி மிக அண்மையில் வந்துள்ளது. இத்தகைய கல்வி வருவதற்கு முன்பு இந்தியப் பெண்மக்கள் எல்லோரும் பண்பிலே கீழ்த்தரத்திலிருந்தார்களென்று பகரலாகாது. இன்றைக்கும் இந்தியப் பெண் மக்களுக்கிடையில் எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டவர்களையும், தெரியாதவர்களையும் சீர்தூக்கிப் பார்க்கலாம். எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் பெண்மையில் கீழ்மையுற்றிருக்கிறார்களென்று இயம்பலாகாது. ஒருவிதத்தில் நவீனக்கல்வி கற்றவர்களைவிட, அதைக் கல்லாத பெண் மக்களே பெண்மையில் மேன்மையுற்றிருக்கின்றனர். இதே கூற்றைப் பாமரர்களைப் பற்றியும் பகரலாம். இந்தியப் பாமரர்களிடத்து ஓரளவு பண்பாடு உண்டு. அது வழிமுறை வழிமுறையாக வாழ்க்கைப் பயிற்சியாக வந்துள்ளது. எனவே, எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டவர்களெல்லாம் பண்பில் உயர்ந்தவர்களென்றும், தெரியாதவர்களெல்லாம் பண்பில் தாழ்ந்தவர்களென்றும் பகரலாகாது. கல்வியென்பதே வாழ்க்கையைப்பற்றிய பயிற்சியாக அமையவேண்டும். நன்கு வாழத்தெரிந்து கொண்டவர்களெல்லாம், கல்வி கற்றவர்களாகின்றனர். கல்வியின் அடிப்படைத் தத்துவம் ஒன்றை ஈண்டு ஞாபகத்துக்குக் கொண்டுவரவேண்டும். தன் மனதில் புதைந்திருக்கும் திறமைகளையெல்லாம் தோற்றத்துக்குக் கொண்டு வருவதே கல்வி. விதவிதமான திறமைகள் எல்லா உயிர்களிடத்திலும் இருக்கின்றன. மற்ற உயிர்களை

விட மனிதனே திறமை மிக வாய்க்கப்பெற்றவனாக இருக்கிறான். பயிற்சியின் மூலம் சிற்றுயிர்களையும் மேல் நிலைக்குக் கொண்டு வரலாம். இனி, பயிற்சியின் மூலம் மனிதனை மிகவும் உயர்ந்த நிலைக்குக் கொண்டுபோய்விடலாம். எனவே கல்விப் பயிற்சிக்கு மற்ற உயிர்களை விட மனிதன் தகுதி மிக வாய்க்கப்பெற்றவன். திறமையைத் தோற்றத்துக்குக்கொண்டுவருவதில் அவன் எட்டும் உயர்வை அளவிட முடியாது. தக்க சந்தர்ப்பங்களை அமைத்துவிட்டால் பலவிதமான ஆற்றல்களிலே மனிதன் உன்னதமான நிலையை எட்டி விடுவான்.

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு

என்பது பொய்யா மொழி. கேணியினின்று எடுக்க எடுக்க நீர் ஊறுவதுபோன்று உள்ளத்தினின்று அறிவை வியாபகப் படுத்துமளவு அது மேலும் சுரக்கிறது. அறிவு என்னும் சொல் ஈண்டுப் பரந்த முறையில் பொருள்படுகிறது. பிரபஞ்சத்தில் எண்ணிறந்தவைகளை எண்ணிறந்த முறைகளிலே அறிந்துகொள்ளலாம். அந்த வல்லமை யாவுக்கும் அறிவு என்பது பொதுப்பெயர். மக்களனைவரும் அறிவில் சிறந்தவர்களேயாம்.

உணவை வெளியுலகிலிருந்து வாங்கித் தன்மயமாக்குவது உடலின் கூறு. ஆனால் அறிவின் கூறு அத்தகையதன்று. அறிவைப் பிறரிடமிருந்து வாங்கி யாரும் அதைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ள முடியாது. செல்வத்தை ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குக் கைமாற்றுவது போன்று அறிவைக் கைமாற்றிவிட முடியாது. குயவன் மட்பாண்டத்துக்கு வேண்டிய வடிவத்தைக் கொடுக்கிறான். கல்வி புகட்டும் ஆசிரியன் அதே விதத்தில் மாணாக்கனுக்குத்

தான் விரும்புகிற வடிவத்தைக் கொடுத்துவிட முடியாது. ஆசிரியன் செய்கிற செயல் ஒரு தோட்டக்காரனுடைய செயலுக்கு ஒப்பானது. வளர்கிற செடிக்கு நல்ல நிலம், உரம், நீர் முதலியவைகளைத் தருவதுதோட்டக்காரனுடைய வேலை. வேலிகட்டி அச்செடியைப் பாதுகாப்பதும் தேவையில்லாத கிளைகளைக் களைந்துவிடுவதும் அவனுடைய பொறுப்பு. ஆனால் வளர்ச்சியடைவது என்பது முற்றிலும் செடியின் செயலாகிறது. தோட்டக்காரன் தந்துள்ள உதவிகளைப் பயன்படுத்தித் தன் இயல்புக்கு ஏற்றவாறு வளர்வது செடியின் தனிச் செயலாம். மாந்தர் கல்வி கற்பது இயற்கையில் செடி வளர்வதற்கு ஒப்பானது. பக்கம் பக்கம் மிளகாய், புகையிலை ஆகிய இரண்டைப் பயிர் பண்ணுகிறோம். ஒரே நிலத்தையும் நீரையும் வெளிச்சத்தையும் பயன்படுத்தி மிளகாய் தன் இயல்பை வெளிப்படுத்துகிறது. புகையிலை அதற்குரிய இயல்பை வெளிப்படுத்துகிறது. இயல்பு வேற்றுமை மக்களிடத்து ஏராளமாக உண்டு. அவர்களிடத்துள்ள இயல்புகளனைத்தையும் உயர்நிலைக்குக்கொண்டுவருவது கல்வியின் நோக்கம். சந்தர்ப்பக்குறைவாலும் சூழ்நிலையின் இடைஞ்சலாலும் மக்களிடத்துள்ள இயல்புகள் தடைபட்டுக் கிடக்கின்றன. அத்தடைகளை அகற்றுவது கல்வி. பின்பு மக்களிடத்து இயல்பு வளர்ச்சி தானே வந்தமைகிறது.

## கல்விமான் யார்?

கல்விமான் யார் என்னும் கேள்விக்கு ஸ்ரீமத் ராமாயணம் என்னும் இதிகாசத்தில் விடை கிடைக்கிறது. காணாமற் போன சீதையைத் தேடிக்கொண்டு ஸ்ரீ ராமனும், நிழல் போன்று அவனைச் சார்ந்திருந்த தம்பி லக்ஷ்மணனும் தென் திசையை நோக்கிச்சென்று கொண்டிருந்தனர். பம்பாசரஸி

னின்று ருஷியமூக பர்வதத்திற்குப் பக்கத்தில் அவர்கள் போய்ச்சேர்ந்தார்கள். வேற்றாராகிய அவ்விருவரைக் கண்டதும் சுக்ரீவனது சிறு கூட்டம் ஒன்று ஓட்டம் பிடித்தது. எத்தனையோ விதங்களில் அக்கூட்டத்தார் வாலியினால் அலைக்கழிக்கப்பட்டிருந்ததே அவ்வோட்டத்துக்குக் காரணமாகும். ஆயினும் ஹனுமான் ஒருவன் மட்டும் அப்படி அஞ்சி ஓடவில்லை. ரகுகுல சகோதரர் முன் அவன் துணிந்து தோன்றினான். "உங்களிருவரையும் நான் நெடுநேரம் கண்காணித்துப் பார்த்துள்ளேன். தவவேடம் பூண்டிருந்தும் கொடிய ஆயுதங்களைக்கையில் எடுத்துக்கொண்டு எதற்காக இங்கு வரத் துணிந்தீர்கள்?" என்று அவன் அதட்டினான். அத்தகைய விரட்டுதலானது வேற்றாராக வந்தவர்கள் உள்ளத்தில் எத்தகைய எதிர்ச்செயலை உண்டுபண்ணிற்று என்று ஆஞ்சநேயன் வீராவேசத்துடன் உற்றுநோக்கி நின்றான்.

புன்முறுவல் பூத்த ஸ்ரீ ராமன் இளையவனிடம் பகர்வானாயினன்: "இளையோய்! இவனைச் சிறிதுகவனித்துப்பார். இவனுடைய பொலிவும், உடல் நடையும், உரை நடையும் இவன் கல்விமான் என்பதைத் தெற்றெனத் தெளிவுறுத்துகின்றன. கல்லாத ஒருவன் இவன் போன்று ஒழுகவோ, மொழியவோ முடியாது. இவனது நட்பு நமக்கு நலன் தரும்." எதிர்த்து நின்று உளவறியவந்தவனது அமைப்பை இங்ஙனம் இராகவன் படம் பிடித்தான். அதன் மூலம் கல்வியின் பண்பையும் பயனையுமே அவன் உண்மையில் படம் பிடித்துவிட்டான். விலங்கின் நிலையும், வேதாவின் நிலையும் உண்மையில் வித்தையைப் பொறுத்ததன்றோ?

உடல் கட்டுடனும் உறுதிப்பாட்டுடனும் பிறந்தவன் ஆஞ்சநேயன். பயிற்சியால் அவ்வுடலுக்கு உயர்ந்த ஆற்

றலை அவன் வருவித்துக்கொண்டான். உள்ளப்பண்பாட்டுக்கும், தெளிவுக்கும் அவனே நல்ல எடுத்துக்காட்டு ஆகிறான். எத்தகைய சூழ்நிலையிலும் அவனுக்குத் தடுமாற்றம் வந்துவிடுவதில்லை. சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறெல்லாம், சீரியமுறையில் அவன் நடந்துகொண்டான். ஒழுக்கத்தின் சிகரம் என்று அஞ்ஜனாதேவியின் புதல்வனாகிய அவனை இயம்பலாம். விழுப்பங்களனைத்துக்கும் அவனுடைய செயல்கள் விளக்கங்களாக அமைந்தன. அவன் நித்திய பிரம்மசாரி. ஆதலால் அவனுடைய தோற்றத்துக்குச் சிதைவு ஒன்றும் உண்டாகவில்லை. ஐம்பொறிகளையும் முற்றிலும் வென்றிருந்தவனாகவே வாழ்நாள் முழுதிலும் அவன் விளங்கலாயினன். மேலாம் நூல்கள் பல கற்றவன் அவன். நல்ல கல்வியின் விளைவாகிய பணிவும் பராக்கிரமமும் சேர்ந்தே அவனிடத்து அமைந்திருந்தன. கல்விச்செருக்குக்குச் சிறிதேனும் அவனது உள்ளம் இடம்கொடுக்கவில்லை. அவசிய மேற்பட்டால் ஒழிய தனது கல்வித்திறனை அவன் வெளிப்படுத்திக்கொள்வதில்லை. கெட்டவர்களுக்கோ, கேடுடைய செயல்களுக்கோ அவன் ஆதரவு கொடுத்தது கிடையாது. நல்லார்க்கு அவனுடைய உதவியைப் பெறுவது மிக எளிது. ராமகாரியத்துக்கென்றே தனது உடல், உடைமை, உயிர் எல்லாம் ஒப்படைத்தது அவனது சிறப்பு ஆகும். வாழ்நாளில் ஒரு கணப்பொழுதையும் அவன் வீணாள் ஆக்கியது கிடையாது. மேலாம் லக்ஷியத்திலேயே அவன் ஊக்கம் மிகக்கொண்டிருந்தான். அவனடைந்திருந்த பெருநிலையைப் பெறுகின்றவளவு மாந்தர் கல்வியைச் சரிவரக்கற்றவர்கள் ஆகின்றனர்.

## கல்வி உணவு போன்றது

உணவின் மூலமாகவே உடலின் வளர்ச்சியும் அதன் பாதுகாப்பும் நிகழ்கின்றன. அதே விதத்தில் உள்ளத்தின்

எழுச்சிக்குக் கல்வி முற்றிலும் இன்றியமையாதது ஆகிறது. ஆனால் உணவு, கல்வி ஆகிய இரண்டையும் பெறுகிறமுறையில் மக்களுக்கிடையில் ஒற்றுமை ஒரு புறத்திலும் வேற்றுமை மற்றொரு புறத்திலும் இருக்கின்றன. தனக்குப் பொருந்திய உணவு எது என்பதை குழந்தை ஒன்று அறிந்து கொள்ளாது. அதற்கு ஏற்ற ஆகாரத்தைப் பெற்றோரே யூகித்து அறிந்து ஊட்டுகின்றனர். அப்படி அவர்கள் ஊட்டிய உணவை ஏற்றுச் செமித்து வளர்வது குழந்தையின் செயல். ஆரம்பக் கல்வியிலிருந்து உயர்தரப் பள்ளிக்கூடத்தில் பயிலும் கல்விவரையில் சிறார் பெறும் பயிற்சிகள் பெற்றோர் ஊட்டும் உணவுக்கு ஒப்பானவை. வளர்ந்துவரும் சிறுவர்களோ யுவர்கள் ஆனபிறகு தங்களுக்கு விருப்பமான உணவு வகைகளைப் பெற்றோர்களிடமிருந்து கேட்டு வாங்கிக்கொள்கின்றனர். கல்வித் துறையிலே கல்லூரிப்படிப்பு அத்தகையது. ஒவ்வொரு மாணாக்கனும் தனக்கேற்ற துறையிலும், முறையிலும் கல்லூரிப் படிப்பின்கண் பிரவேசிக்கிறான். தமக்குப் பொருத்தமான கலைஞானங்களைத் தாமே பொறுக்கி எடுத்துக்கொள்ளும் சுதந்தரம் கல்லூரி மாணாக்கர்கள் அனைவருக்கும் உண்டு. ஆனால் அவரவருக்கேற்ற விதவிதமான கலைஞானங்களை வழங்குதல் சர்வகலாசாலைகளின் கடமையாகும். இனி வயது முதிர்ந்து வாழ்க்கையில் பிரவேசிக்கின்றவர்கள் தங்களுக்குத் தேவையான உணவுகளைத் தாங்களே தேடிக்கொள்கின்றனர். பராமரிப்பின் பொருட்டுக் காலமெல்லாம் பெற்றோரைச் சார்ந்திருப்பது பொருந்தாது. தங்களுக்கு மட்டும் அவர்கள் உணவுதேடிக் கொண்டால் போதாது. பிறர்க்கும் தேவையாயுள்ள உணவை ஓரளவாவது வழங்க அவர்கள் வல்லவர்களாக வேண்டும். அப்பொழுதே அவர்கள் வாழ்வாங்கு வாழ்பவர்

கள் ஆகின்றனர். ஆனால் இக்கோட்பாட்டுக்கு ஒத்த முறையைக் கல்வித்துறையில் கையாளுபவர்கள் மிகச் சிலரேயாம். ஆயுட்காலம் முழுவதிலும் மக்கள் ஆகாரத்தைத் தேடி அதை உண்டு ஜீரணித்துவருவது போன்று கல்வியையும் யாண்டும் தேட அவர்கள் முன்வருவதில்லை. இதுவே உணவுத்துறைக்கும் கல்வித்துறைக்கும் இடையில் நாம் சாதாரணமாகக்காணும் வேற்றுமையாகும். உணவு ஏலாத மனிதன் உடல் திட்பத்தையும் வளர்ச்சியையும் குலைக்கிறான். கல்விகற்க மறுக்கும் மனிதன் தனது அறிவு சொரூபத்தைப் பட்டினிபோடுகிறான். கல்விகற்க மறுக்கும் மனிதன் தான் வாழவேண்டிய பெருவாழ்வை வாழ மறுக்கிறான். ஆயுட்காலத்திலே இத்தனை ஆண்டுகள் உணவு உண்டால் போதுமானது; அதன் பிறகு உணவு உண்ணவேண்டியதில்லையென்று யாரும் அதை நிறுத்திவிடுவதில்லை. அதே விதத்தில் கல்வியின் பயனை அறியும் மாந்தர் ஆயுட்காலமெல்லாம் நல்லமாணாக்கர்களாகவே இருந்து அதைக் கற்று வருகிறார்கள்.



# 2. அடிப்படைக் கல்வி

## நீடித்த சிசுப் பருவம்

இவ்வுலகம் இயற்கையின் ஒரு பகுதி. உயிர்வகைகளுக்கு வாழ்வுக்குரிய பள்ளிக்கூடமாக இது அமைந்திருக்கிறது. இதனுள் ஜீவிதத்தை நடாத்திவரும் பலதரப்பட்ட உயிர்கள் தத்தம் இயல்புக்கேற்ற கல்வியைக் கற்றுக்கொள்கின்றன. அதற்கேற்ற வசதிகளையெல்லாம் இயற்கை அமைத்து வைத்திருக்கிறது. உலகில் நன்கு வாழத்தெரிந்துகொள்ளுதலே உயிர்களுக்கு அடிப்படைக் கல்வியாகும்.

வாத்துக்குஞ்சு ஒன்று பொரித்துப் பூமியில் தோன்றுகிறது. தன் வாழ்க்கைக்குரிய அலுவல்களில் உடனடியாக ஈடுபட அது முந்துகிறது. நீர் நிலையைக் கண்டதும் அதனுள் குதித்து அது நீந்த ஆரம்பித்து விடுகிறது. வாழ்க்கையில் வாத்துக்குஞ்சுக்கு அமைந்துள்ள முதல்பாடம் அது. நீந்தத் தெரியாத பறவை ஒன்று வாத்து ஆகாது. இனி நாய்க்குட்டி ஒன்று இவ்வுலகினுள் பிறப்பு எடுக்கிறது. வளர்ந்து வரவர அது குலைக்கக் கற்றுக்கொள்ளுகிறது. குலைக்கத் தெரிந்துகொள்ளாவிட்டால் தன் இனத்தொழிலுக்கு அது தகுதியற்றதாய்விடும். மான்குட்டி ஒன்றின் இயல்பை மேலும் ஆராய்வோம். பிறந்த பிறகு உடல் உலர்ந்தவுடனே அது ஓட ஆரம்பிக்கிறது. அப்படி ஓடாவிட்டால் தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள அதற்கு இயலாது. வாத்தும், நாயும், மானும் அதனதன் வாழ்க்கைக்கு இன்றியமையாத பயிற்சியை இயல்பாகக் கற்றுக்கொள்கின்றன. அப்படிக் கல்லாவிட்டால் அவைகளின் வாழ்க்கையே தடைப்பட்டுவிடும். ஆக, அடிப்படைக் கல்விக்கு நமக்கு இப்பொழுது விளக்கம் கிடைக்கிறது.

எதைக் கற்றுக்கொண்டதன் பயனாக உயிர் ஒன்று தன் தனிப்பெருமையைத் தோற்றுவிக்கிறதோ அக்கல்வி அந்த உயிர்க்கு அடிப்படைக் கல்வியாகும். உயிர்களனைத்துக்கும் அவ்வவைகளுக்கேற்ற அடிப்படைக்கல்வி உண்டு. மனித னுக்கு அடிப்படைக் கல்வி எது என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டும்.

பிறப்பெடுத்தவுடனே மற்ற உயிர்வகைகள் இரை தேடவும் உயிரைப் பாதுகாக்கவும் முற்படுகின்றன. ஆனால் மானுடச் சிசு ஒன்றுக்கோ இச்செயல் ஒன்றும் தெரியாது. பசித்தால் அது அழுகிறது. உணவு தேட அதற்குத் தெரி யாது. அதற்கேற்ற உணவைத் தேடி வழங்குவது மற்றவர் களுடைய பொறுப்பு ஆகும். வானத்தில் பருந்து ஒன்று பறந்து வந்தால் கோழிக்குஞ்சு பறந்தோடித் தப்பித்துக் கொள்ளும். பாம்பைக் கண்டால் நாய்க்குட்டி எட்ட ஓடி விடும். ஆனால் தனக்கு வரும் ஆபத்தினின்று தன்னைக் காப்பாற்றிக்கொள்ள மானுடச் சிசுவுக்கு இயலாது. ஆபத்து வருகிறது என்பதையும் அது அறிந்துகொள்ளுவ தில்லை. கொல்ல வருபவனைப் பார்த்துக் குழந்தை ஒன்று சிரித்த வண்ணமாயிருக்கும். கொட்டும் தன்மையுடைய தேள் ஒன்றை அல்லது தீண்டும் இயல்புடைய பாம்பு ஒன் றைக் கண்டால் குழந்தை அதைக் கையில் பற்றிப் பிடிக்க முயலும். அப்படி அதற்கு ஆபத்து வாராது குழந்தையைக் காப்பாற்றுவது முதியோர் கடமை. பாதுகாப்புக்குரிய குழந்தைப் பருவம் நீடித்திருப்பது மானுட வர்க்கத்துக் கென்றே அலாதியாக அமைந்தது எனலாம். இத்தகைய இயற்கையமைப்பு மானுட உலகுக்கே இடைஞ்சலாகவும், நஷ்டமாகவும் வாய்த்திருக்கிறதல்லவா என்ற கேள்வி எழ இடமுண்டு. சிறு குழந்தைகளைப் பாதுகாப்பதற்காகத்

தாய்மார் மட்டுமல்ல, இன்னும் எத்தனையோ பேர் கூடிப் பாடுபடவேண்டியிருக்கிறது. மானுடர் தேடும் பொருளில் பெரும்பகுதிபிள்ளைகளைப் பேணுதலிலேயே செலவாய்விடு கிறது. இயற்கையில் வேறு எவ்வுயிரிடத்திலும் காணமுடி யாத காட்சி இது. தன்னைத் தானே பராமரித்துக்கொள் ளும் பக்குவம் வரும் பரியந்தம் சிறாரைப்பேணி வருவது முதியோர் கடமை ஆகிறது. தனக்கு வயசு சுமார் இருபது ஆகும் வரையில் மனிதன் ஏதேனும் ஒருவிதத்தில் பிறர் உதவியைச் சார்ந்திருக்கிறான். வாழ்க்கைத் திட்டத்தில் இயற்கை முழுதிலும் சிக்கனமே திகழ்ந்து கொண்டிருக் கிறது. உயிர்கள் யாவும் அதிவிரைவில் வாழ்க்கைக்குத் தகுதியுடையவைகளாய் விடுகின்றன. ஆனால் மானுட வாழ்க்கையில் மட்டும் வாழ்க்கைக்கு ஆயத்தப்படும் செயல் பல ஆண்டுகளுக்கு நீண்டுகொண்டே போகிறது. இத்த கைய நீடித்த ஆயத்தம் எதற்காக?

## உள்ளத்தின் வளர்ச்சி

சிறுவர்களுக்கு விளையாட்டுக்காக வென்று மோட்டார் வண்டி என்னும் பொம்மை அமைக்கப்படுகிறது. பிறகு உண்மையான மோட்டார் வண்டியும் அமைக்கப்பெறுகிறது. வெளிப் பார்வைக்குப் பொம்மை மோட்டார் வண்டியும், உண்மையான மோட்டார் வண்டியும் ஒன்றுபோலத் தென் படுகின்றன. ஆனால் உள்ளேயிருக்கும் யந்திர அமைப்பில் இரண்டுக்கும் வெகுதூரம். விதவிதமான செயல்களுக்கேற்ற யந்திரங்களைப் பொறிக்குமளவு வேலைப்பாடு அதிகரிக் கிறது. இக்கூற்று உயிர்வாழ்க்கைக்கு ஏதுவான உடல்அமைப் புக்கும் பொருந்துகிறது. சிற்றுயிர்களின் சிறுவாழ்வுக்கேற்ற உடல்கள் விரைவில் உருவெடுத்து விடுகின்றன. ஆனால் மேலாம் வாழ்க்கைக்கென்று ஏற்படும் உடல் விரைவில்

வளர்ந்து தகுதியைப் பெற்றுவிடுவதில்லை. அதன் நுண்ணிய உறுப்புக்கள் திண்ணிய பாங்கு பெறுதற்கு நீண்ட காலம் தேவையாயிருக்கிறது. இயற்கையின் சிக்கனத்தில் இத்தகைய இயல்புக்கும் இடமிருக்கிறது. ஆக, மானுட உடலானது குழந்தையின் தன்மையில் நெடுங்காலமிருப்பது முற்றிலும் அவசியம். சின்னஞ் சிறு வயதில் கொடுக்கும் பராமரிப்பு நல்ல பயன் தருகிறது. சிறார்மீது செலுத்தும் சிரத்தை சீரிய சமுதாயத்தை உண்டுபண்ணுதற்கு உற்ற உபாயமாகிறது. தேவையாயிருக்குமளவு காலத்தையும் கருத்தையும் சிறார்மீது செலுத்துவது மக்களின் முதற்கடமையாகும். ஏனென்றால் மனுஷத் தன்மையை முற்றிலும் தெளிவுபடுத்தி முன்னணிக்குக் கொண்டுவருவதற்கு நீண்டதோர் இளமைப் பருவம் தேவையாயிருக்கிறது. சிறாரை வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்துதற்குத் தகுந்த சூழ்நிலையும் தொடர்ந்த பயிற்சியும் முற்றிலும் இன்றியமையாதவைகளாகின்றன. இதை அறிபவர் அடிப்படைக் கல்வியின் முதற்படியை அறிகின்றனர்.

உண்பது, உறங்குவது, இனத்தைப் பெருக்குவது, ஆபத்தினின்று தன்னைக் காப்பது, எதிரிக்கு அஞ்சுவது, ஆகிய இவ்வைந்தும் எல்லா உயிர்களுக்கும் பொதுவானவை. ஊர்வன, நடப்பன, நீந்துவன, பறப்பனவாகிய பிராணிகள் யாவும் இச்செயல்களைச் செய்துவருகின்றன. மனிதன் இவைகளுக்கு விலக்கானவனல்லன். மற்ற உயிர்வகைகளைப் போன்று இவ்வைந்து கிருத்தியங்களையும் அவனும் முறையாகச் செய்து வருகிறான். பிறகு மனிதனுக்கு ஏற்பட்டுள்ள சிறப்பு எது? மனத்தையுடையவன் மனிதன். மனுஷன் என்பது காரணப் பெயர். மனம் என்னும் அந்தக்கரணம் இவனுக்கு அலாதி உடைமை. மற்ற உயிர்வகை

களிடத்து மனம் எனப்படுவது ஒடுங்கிய நிலையிலிருக்கிறது. ஓரளவுக்குமேல் அவைகளிடத்து மனது விரிவடைய முடியாது. ஆனால் மனிதனிடத்தோ அது விரிவடையக் கூடியதாயிருக்கிறது. மனம் அடையும் வளர்ச்சியை மனித னிடத்துக் காண்பது போன்று மண்ணுலகில் வேறு எந்த உயிரிடத்தும் காணமுடியாது. மனிதனிடத்துக் காணும் விதவிதமான ஆற்றல்களும், சிறப்புக்களும், சீர்மைகளும் எல்லாம் மனதினது வெவ்வேறு வகைப்பட்ட பண்பாடு களேயாம். இயற்கையின்கண் உள்ள அதிசயங்களுள் இது ஒரு பேரதிசயம். மனதின் மகிமைக்கு அளவில்லை. மனது எவ்வளவு மேம்பாடு அடைகிறதோ மனிதன் அவ்வளவு மேலோன் ஆகிறான்.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு

என்பது மறைமொழி. குழந்தைப் பருவத்தில் மன வளர்ச் சிக்கு வேண்டியவாறு ஊக்கம் தரலாம். இளமையில் மனது பெறுகிற பயிற்சிக்கு ஏற்ப முதுமையில் மனிதனுக்கு வெவ் வேறு மாண்புகள் தோற்றத்துக்கு வருகின்றன. சின்னஞ் சிறுவயதில் மனதுக்குத் தரக்கூடிய பண்புகளையெல்லாம் முறையாகத் தருவது அடிப்படைக் கல்வி.

## மூன்றுவிதக் குறைகளைத் தவிர்த்தல்

அஞ்சுதல் உயிர்களின் இயல்பு. வெவ்வேறு காரணங் களை முன்னிட்டு வெவ்வேறு உயிர்கள் வெவ்வேறு சூழ்நிலை களில் வெவ்வேறு விதங்களில் அச்சம் கொள்கின்றன. பயப்படும் பாங்கு மனிதனிடத்தும் இருக்கிறது. அதைப் பிறவிக்குணம் என்றே பகரலாம். குழந்தைகள் அஞ்சுவது

உண்டு. ஆனால் அவைகள் யாவுக்கும் அச்சம் ஒரே கார ணத்தை முன்னிட்டுவருவதல்ல. அச்சம்கொள்ளாதிருக்கும் குழந்தைகளுமுண்டு. வளர்ந்துவரும் குழந்தைகளின் உள்ளத் தினின்று அச்சத்தைத் தவிர்ப்பது முதியோர் கடமையாகும். கட்டுக்கடங்காத குழந்தைகளை அச்சமூட்டிப் பலபேர் அடக்கி விடுகின்றனர். அப்படிச் செய்வது வளர்ந்துவரும் குழந் தைக்குப் பெரும் பாதகமாய் முடியும். பயப்படுகிற குழந்தை எதற்காகப் பயப்படுகிறதென்று பொறுமையுடன் கவனித் துப் பார்த்துக் கண்டுபிடிக்க வேண்டும். பிறகு படிப்படியாக அப்பயத்தைப் போக்குதற்கான முறைகளைக் கையாள வேண்டும். மனதினின்று அச்சம் அகலுமளவு மனது உறுதிப் பாடே வடிவெடுத்ததாகிறது. எக்கருமத்தையும் துணிந்து செய்யும் ஆற்றல் பயத்தை அறியாதவர்களுக்கே வருகிறது. சகுந்தலையின் புதல்வன் பரதன் என்னும் சிறுவன் சிங்கக் குட்டிகளைக் கட்டி விளையாடினான். அச்சமின்மைக்கு அவனே நல்ல எடுத்துக்காட்டு ஆயினன். எதையும் சாதிக் கும் திட்பமும் அவனுக்குண்டாயிற்று. அறியாமையே அச் சத்துக்குப் பிறப்பிடம். பொறுமையுடன் நல்ல முறைகளைக் கையாண்டு சிறுவர் உள்ளத்தினின்று பயப்படுதல் என்னும் நோயை முற்றிலும் அகற்றிவிடலாம். மனம் பண்பாடு அடைதற்கு அச்சத்தைத் தவிர்த்தல் முற்றிலும் அவசியமா கிறது.

சின்னஞ்சிறு வயதிலிருக்கும் உயிர்வகைகளிடத்து சிறப்பு ஒன்று உண்டு. யாண்டும் மகிழ்வுற்றிருப்பதே அச்சிறப்பாம். குட்டிகளும், குஞ்சுகளும், குழந்தைகளும் மகிழ்ந்து குலாவியிருக்கும் கூறு படைத்தவைகள். உடல் வளர்ச்சிக்கு அது பெருந்துணை புரிகிறது. இனி, குழந்தை களிடத்தோ உடல் வளர்ச்சிக்கு மட்டுமல்லாது உள்ளத்

தெளிவுக்கும் மகிழ்ச்சி என்னும் மனநிலை உற்ற துணையாகிறது. அதை இறைவனிடமிருந்து வந்துள்ள வரப்பிரசாதம் என்று இயம்பவேண்டும். வளர்ந்து வரும் சிறார் உள்ளத்தில் விசனத்தை ஊட்டலாகாது. மனவாட்டத்தையே அறியாது வளருமளவு அவர்கள் நல்ல வளர்ச்சியடைகின்றனர். மன வாட்டமும், சோகமும், துயரமும் உள்ளத்தினில் புகுமளவு வளர்ச்சிக்குத் தடை ஏற்படுகிறது. இயல்பாக அமைந்துள்ள ஆற்றல்களெல்லாம் குன்றிவிடுகின்றன. பயப்படுவது இயல்பாகச் சிறாரிடத்து அமைவது போன்று துன்பப்படுவது தானாக அமைவதில்லை. பிறர் ஊட்டுவதாலேயே துன்பம் உள்ளத்தினுள் புகுகிறது. சிறுவர்களின் மகிழ்ச்சியை வளர்ப்பவர்கள் அவர்களது வாழ்க்கைக்குப் பெருந்துணை புரிகின்றனர். அதற்கு மாறாகத் துன்பத்தை ஊட்டுபவர்கள் சிறுவர்களின் வளர்ச்சிக்குப் பெருந்தடை செய்கின்றனர். மன நோய்களுள் துன்பம் என்பது மிகக் கொடியது. அறியாமையினால் அது வருவிக்கப்பட்டதாகிறது. எக்காரணத்தை முன்னிட்டும் அதை மனதினுள் வாராது தடுப்பது அடிப்படைக் கல்வியின் ஒரு முக்கியமான பகுதியாகும்.

உயர்வு தாழ்வு பாராட்டும் பான்மை சிறுவர்களிடத்து இல்லை. முதியோர்கள் விதவிதமான வேற்றுமைகளை அவர்களுடைய உள்ளத்தினுள் செலுத்த ஆரம்பித்து விடுகின்றனர். தன்னை உயர்ந்தவன் என்று கருதுவது ஒருவிதமான பேதபுத்தி. தன்னைத் தாழ்ந்தவன் என்று கருதுவது மற்றொரு விதமான பேதபுத்தி. உயர்வு, தாழ்வு என்னும் இரண்டுவிதமான பேதபுத்தியிலும் பெருங்கேடு இருக்கிறது. பேதபுத்தியினின்றே பொறாமை உருவெடுக்கிறது. தன்னிலும் உயர்ந்தவனோடு சீர்தூக்கித் தன்னைக் கீழ்மையிலிருப்

பதாக எண்ணிக்கொண்டிருப்பவன் பொறாமைப்படுகிறான். தான் உயர்ந்த நிலையிலிருப்பதாக எண்ணிக்கொண்டிருப்பவனோ அவ்வுயர்நிலைக்கு வந்துகொண்டிருக்கிற மற்றவர்களைப் பார்த்துப் பொறாமைப்படுகிறான். தான் அடைந்துள்ள பெருநிலைக்கு மற்றவர்கள் வரக்கூடாது என்பதே அவனுடைய நோக்கமாகும். அவ்விதமான எண்ணமும், பொறாமையினின்று பிறப்பதேயாம். சிறுவர்களுக்கிடையில் சமத்துவத்தை ஊட்டவேண்டும். சுவாசிக்கும் காற்று எல்லார்க்கும் பொதுவாக அமைந்திருப்பதுபோன்று வாழ்க்கைக்குரிய சம்பத்துக்களெல்லாம் எல்லா உயிர்களுக்கும் பொதுவானவை என்னும் உணர்ச்சியைச் சிறுவர் உள்ளத்தில் ஊட்டி வருவது முற்றிலும் அவசியம். அதற்கேற்ற சூழ்நிலையிலும் அவர்களை வைத்திருக்கவேண்டும். நல்ல விளையாட்டுக்கருவிகளை வைத்துக்கொண்டு விளையாடுகின்ற சிறுவர்களுக்கிடையில் அத்தகைய விளையாட்டுக் கருவிகளுக்கு வகையில்லாத சிறுவர்கள்வைக்கப்படுகின்றபொழுது உயர்வு தாழ்வு உணர்வு இருதரத்தாரிடத்தும் இயல்பாக வந்து விடுகிறது. விளையாட்டுக் கருவி படைத்திருப்பவன் தன்னை உயர்ந்தவனாக எண்ணிக்கொள்கிறான். அது இல்லாதவன் தன்னைத் தாழ்ந்தவனாக நினைத்துக்கொண்டு மற்றவனைப் பற்றிப் பொறாமைப்படுகிறான். விளையாட்டுக் கருவியே இல்லாதவனுக்கு ஏதேனும் ஒரு வேளையில் அது கிடைத்துவிட்டால் விளையாட்டுக் கருவி படைத்திருப்பவன் அதைப் பார்த்துச் சகிப்பதில்லை. இவ்விதத்தில் சிறுவயதிலேயே பொறாமை மனதினுள் புகுந்துவிடுகிறது. சேர்ந்திருக்கிற சிறாரனைவர்க்கும் ஒரேவிதமான சூழ்நிலையை அமைத்துக்கொடுப்பது முதியோர் கடமை. சமத்துவம் அவர்கள் மனதில் நிறைந்திருக்கும்படி செய்வது முற்றிலும் அவசியம்.

உயிர்களனைத்துக்கும் வாழ்க்கையிலும், விளையாட்டிலும், விளையாட்டுக் கருவிகள் படைத்திருப்பதிலும் சம உரிமை உண்டு என்னும் எண்ணத்தில் ஊறி வளர்கிறவர்கள் சீராளர் ஆவார்கள். அவர்களின் மனதை நேர்மையில் உரு வெடுத்து வரும்படி பார்த்துக்கொள்வது அடிப்படைக் கல்வி யாகும். வளர்கின்ற சிறார் உள்ளத்தினுள் அச்சமும், துயரமும், பொறாமையும் புகுந்துவிட்டால் நல்வாழ்வுக்கு அவர்கள் வேற்றார் ஆய்விடுவர்.

செழிப்புற்று வளரும் செடியில் எழில் பொலிகிறது. அது ஆனந்தத்தின் அறிகுறி. சிருஷ்டி அனைத்தும் உண்மை யில் ஆனந்த சொரூபம். மக்களிடத்து அவ் ஆனந்தம் சிறப் பாக மிளிர்கிறது. நலமுற்று வளரும் குழந்தையின்கண் செடியில் பொலிவதைவிட அதிகமான எழில் தென்படுகிறது. முகமலர்ச்சியே வடிவெடுத்துள்ளது சிசு. பூ மலர்ந்திருப்பது போன்று சிசுவின் முகமும் மலர்ந்திருக்கிறது. மற்று, முக வாட்டம் அதனிடத்துத் தென்படுமாகில் அது மன வளர்ச் சிக்கு அறிகுறி அல்ல. முகமலர்ச்சியே அகவளர்ச்சியை விளக்குகிறது. குழந்தை ஒன்றனிடத்து வளர்ச்சி இரண்டு படித்தரங்களில் நிகழ்கிறது. ஒன்று உடல் வளர்ச்சி; மற் றது மனவளர்ச்சி. உடல் வளர்ச்சிக்கு உற்ற உபாயமா யிருப்பது உறக்கம். சிசு ஒன்று உறக்கத்தில் மூழ்கியிருக்கு மளவு உடல் வளர்ச்சி அதற்குத் தானாக அமைந்துவிடுகிறது. ஆனால் உறக்கத்தில் அதற்கு மனவளர்ச்சி உண்டாவ தில்லை. விழித்திருக்கும் வேளையிலோ அது இன்புற்றிருக் கிறது. அவ்வின்பத்தை முகமலர்ச்சி விளக்குகிறது. அந்த முகமலர்ச்சியே உடல் வளர்ச்சிக்கும் உள்ளத்தின் வளர்ச்சிக் கும் முகாமையாகிறது. எக்காரணத்தை முன்னிட்டும் சிசு ஒன்றின் முகமலர்ச்சிக்குத் தடை வந்துவிடலாகாது.

## விளையாட்டே கல்வியாக மாறுகிறது.

கலைகள் பயிலுதற்குப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பப் பெறுவது சிறார் வாழ்க்கையில் ஒரு முக்கியமான சம்பவ மாகும். பள்ளிக்கு அனுப்பப்பெறும் செயலை ஆராய்ந்து பார்த்தால் உண்மை ஒன்று வெளியாகும். பல நாடுகளில் பல காலங்களில் சிறார் பள்ளியில் பிரவேசிப்பது நரகத்தில் பிரவேசிப்பது போன்று அவர்களுக்குத் தாங்கவொண் ணாத் துயரத்தை உண்டுபண்ணியிருக்கிறது. அத்தகைய துயரத்தை ஒரு பொழுதும் தவிர்க்க முடியாதென்றே பலர் எண்ணி வந்திருக்கின்றனர். ஆனால் அது உண்மையல்ல. நல்ல கல்வித் திட்டத்தில் சிறார் வாழ்க்கையில் துன்பத்துக் குச் சிறிதேனும் இடமிருக்கலாகாது. உயிர்களனைத்தும் வாழ்க்கையை விளையாட்டாக ஆரம்பிக்கின்றன. விளையாட் டில் யாருக்கும் துன்பமில்லை. வீட்டில் விளையாடிக்கொண் டிருக்கும் சிறுவர்களுக்குப் பள்ளிக்கூடங்களில் அநேகவித மான விளையாட்டுக்களை அமைத்து வைக்கவேண்டும். அவ் விளையாட்டுக்களின் பொருட்டு அவர்கள் வீட்டில் தங்கி யிருக்கமாட்டேனென்று பள்ளிக்கூடத்துக்கு ஊக்கத்துடன் போக முற்படுவார்கள். வீட்டுக்கு மாலையில் திரும்பி வருவ தற்கும் அவர்கள் மறுதலிப்பார்கள். அத்தகைய சூழ்நிலை யைப் பள்ளிக்கூடத்தில் அமைத்து வைப்பது முற்றிலும் அவசியம். விளையாட்டாகச் செய்வது வினையாக முடியும் என்பது ஒரு பழமொழி. வினையாக முடியும் என்னும் கருத் தைப் பலர் தீங்காக முடியும் என்று பொருள்படுத்துகின் றனர். உண்மை அதுவல்ல. விளையாட்டாகத் துவக்கு கின்ற செயல் வாழ்க்கைப் பயிற்சியாக வடிவெடுத்துவிடு கிறது. நாய்க்குட்டிகள் இரண்டு ஒன்றை ஒன்று கடித்து விளையாடுகின்றன. பிற்காலத்தில் கடித்தல் என்னும் நாய்க்

குரியசெயலைச் செய்வதற்கு இளம்பருவத்தில் செய்த விளை யாட்டே தக்க பயிற்சியைக் கொடுத்தது. அக்கோட்பாடு மக்களுக்கும் பொருந்துகிறது. சின்னஞ்சிறு வயதில் சிறார் எதை யெல்லாம் விளையாட்டாகச் செய்கிறார்களோ அதை யெல்லாம் பிற்காலத்தில் வாழ்க்கைக்குரிய பெரும் செயல் களாக அமைக்கப் போகிறார்கள் என்பதற்குப் பிள்ளைப் பருவ விளையாட்டே முன் அறிகுறியாகும். விளையாடக் கற் றுக்கொள்ளுதல் அடிப்படைக் கல்வி. தாறுமாறாக விளை யாடுவது விளையாட்டாகாது. விதிகளுக்கு உட்பட்டு முறை யாக விளையாடுவதே நல்ல விளையாட்டு. சட்டதிட்டத்துக்கு உட்பட்டு விளையாடுதல் அறிவு வளர்ச்சி என்ற பெயர் பெறுகிறது. கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு நன்கு விளையாடு பவர் நுண்ணறிவாளர் ஆகின்றனர். அத்தகையவர்களுக்கே யாண்டும் சமயோசித புத்தி சொந்தமாகிறது. எனவே விளை யாட்டின்மூலம் சிறுவர்கள் கல்வி கற்கிறார்கள். அப்பொழுது அதற்குக் கல்வி என்கின்ற பெயர் தருவதில்லை. எது கல்வி, எது விளையாட்டு என்ற வேற்றுமை சிறுவர்களுக்குத் தெரியாது. விளையாட்டுக்குரிய கணக்குகள் உண்டு. அதற் குரிய பாடல்கள் உண்டு. விளையாட்டின் பொருட்டுப் புகட்டு கின்ற கணக்கையும், பாடல்களையும் விளையாட்டாகவே அவர்கள் கற்றுவிடுவார்கள். அதில் அவர்களுக்குக் கசப்பு ஏற்படுவதில்லை. உடலுக்கு நல்ல உணவு தருவதற்கு ஒப் பானது உள்ளத்துக்கு நல்கும் நல்லறிவு. நல்ல உணவை அளவெடுத்து உண்கிற விடத்து ஜீரணக் கருவிக்குச் சிரமம் ஏற்படுவதில்லை. அளவுடன் உண்கிறவர்களுக்கு உண்பதிலிருந்து வருகிற மயக்கமும் வருவதில்லை. அதே விதத்தில் கல்வியை விளையாட்டாகச் சிறுவர்களுக் குச் சிறிது சிறிதாக வழங்கவேண்டும். அறிவு வளர்ச்சி

அப்பொழுது சிரமமில்லாது அவர்களுக்குண்டாகிறது. நல்லுணவு உண்பதில் மகிழ்ச்சியிருப்பது போன்று நல்ல முறையில் கல்வி பயிலுதலிலும் மகிழ்ச்சி இருக்கிறது. வாழ்க்கைத் தத்துவம் தெரியாத பெற்றோர்கள் குழந்தை களை அடித்து விரட்டி உணவு ஊட்டுவதுண்டு. அப்படிச் செய்வது சிசு வதைக்கு ஒப்பானது. கல்வித் திட்டத்தை அறியாத ஆசிரியர்கள் சிறாரை விரட்டி, அச்சமூட்டி கல்வி புகட்டுகின்றனர். அவர்கள் செயலும் சிசு வதைக்கு ஒப் பானது. அடியுண்டு அழுதுகொண்டு கற்பது கல்வியாகாது. குலாவி மகிழ்ந்திருந்து மனது விகசிப்பு அடைவதே அடிப் படைக் கல்வியாகும்.

## மூன்று கிருத்தியங்கள் மூலம் கல்வி

பிரம்மதேவன் சிருஷ்டிகர்த்தா என்று சொல்லப்படு கிறார். உலகைப் படைப்பதில் அவருக்குப் பெருமகிழ்ச்சி உண்டாகிறது. படைப்புத்தெய்வத்தின் பாங்கு உயிர்களிடத் திலும் இருக்கிறது. சிறுவர்களிடத்து அதைச் சிறப்பாகக் காணலாம். ஏதேனும் ஒன்றை அவர்கள் உருவாக்கிவிட் டால் அதில் அவர்கள் அடையும் மகிழ்ச்சி அளவற்றது. விளையாட்டுக்கு வேண்டிய சிறு கருவிகளை அமைக்கும்படி அவர்களுக்குத் தூண்டுதல் கொடுக்கவேண்டும். அவர் களால் உண்டுபண்ணப்படும் பொருள்கள் விளையாட்டுக்கு உதவுமளவு அப்பொருள்களை உண்டுபண்ணுதலில் சிறுவர் களுக்கு ஊக்கம் சுரக்கிறது. விளையாட்டுக் கருவிகளைப் பழுது பார்ப்பதும், சிருஷ்டி பண்ணுவதற்கு ஒப்பானது. உண்ணும் உணவுப் பொருள்களில் சிலவற்றைத் தாங்களே உற்பத்திபண்ணுதலில் சிறுவர்கள் பெருமகிழ்ச்சியடைகின் றனர். அதற்கேற்றபடி தோட்டம் போடுதலிலும் அவர்கள் ஊக்கம்கொள்கின்றனர். உற்பத்தி பண்ணிய காய், கனி,

கீரை, கிழங்கு வகைகளைத் தாங்களே சமைத்து உண்பதில் அவர்கள் சந்தோஷப்படுகின்றனர். இவைபோன்ற செயல்களில் சிரமம் ஏதாவது உண்டு என்று சிறுவர்கள் அறிய மாட்டார்கள். அவர்களுடைய முகமலர்ச்சியே அவர்கள் ஊக்கத்துடன் வேலை செய்வதற்கு எடுத்துக்காட்டு ஆகும்.

படைப்புத் தொழில் பிரம்மதேவனுடையதென்றால் காக்கும் தொழில் திருமாலுக்குச் சொந்தமாகிறது. சிறார்களில் பலர் பண்டங்களைச் சேகரித்துப் பாதுகாத்து வைப்பதில் பரம திருப்தியடைகின்றனர். விளையாட்டுக்கருவிகள் கெட்டுப்போகாதிருக்கவேண்டுமென்று அவைகளைப் பாங்குடன் பயன்படுத்துவார்கள். அக்கருவிகள் பழுதுபடாதிருப்பதில் அவர்களுக்கு அலாதியான மகிழ்வுண்டாகிறது. தின்பண்டங்களை வழங்கினால் அவைகளைத் தின்னாது அவர்கள் சேகரித்து வைப்பார்கள். புஸ்தகம் உடை முதலியவைகளைப் பத்திரப்படுத்துவதிலேயே அவர்களுடைய கருத்துச் செல்லும். கைக்காசைச் செலவிடாது அவர்கள் சேமித்து வைப்பார்கள். பாதுகாக்கும் இயல்புடையவர்களைக்கொண்டே பள்ளிக்கூடத்துக்குரிய பொருள்களையெல்லாம் பத்திரப்படுத்துவது உசிதம்.

அழிக்கும் தொழில் ஹரனுக்கு உரியது. உலகில் பயன்படாதவைகளையெல்லாம் அவன் சம்ஹாரம் செய்துவிடுகிறான். பாலர்களில் பலர் அழிக்கும் தொழிலில் ஆசைகொண்டிருப்பதைக் காணலாம். அவர்களுடைய இயல்புக்கேற்ற வேலைகளில் அன்னவர்களைத் தூண்டுவது உசிதம். காட்டுச் செடிகளைப் பிடுங்குதல், சருகுகளைக் கிள்ளுதல், பழைய பாண்டங்களை உடைத்தல், உதவாத காகிதங்களைக் கிழித்தல், குப்பைகூளங்களை நெருப்பிலிட்டுக்

கொளுத்துதல்—இவைபோன்ற செயல்கள் அத்தகையவர் களுக்கு விருப்பம் மிக ஊட்டுகின்றன.

இவ்விதம் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூவிதச் செயல்களில் முயற்சியுடையவர்களாகச் சிறுவர்கள் இருக்கிறார்கள். மும்மூர்த்திகளின் அம்சங்களாகவே அவர்கள் உலகில் வந்திருக்கின்றனர். உலக நடைமுறைக்கு மும்மூர்த்திகளின் மூவிதச் செயல்களும் இன்றியமையாதவைகள். பள்ளிக்கூடம் ஒன்றை முறையாக நடாத்துதலில் மூன்றுவிதக் கிருத்தியங்களுக்கும் இடம் உண்டு. முச்செயல்களையும் பொருத்தமாக இணைத்துவைப்பது முதியோர் கடமை. மூன்றுக்கும் இடையிலுள்ள இணக்கத்தைச் செயலின் மூலமாகவே சிறுவர்களுக்குக் காட்டவேண்டும். பயன்படாத குப்பை தூசி முதலியவைகளை ஒரு கூட்டம் கூட்டித்துப்புரவு படுத்துகிறது. நீர் தெளித்து மெழுக்கெடுத்து இடத்தை அலங்காரம் செய்கிறது இன்னொரு கூட்டம். வழிபாட்டுக்குரிய மூர்த்தியை எழுந்தருளப் பண்ணி வழிபாட்டுக்குத் தேவையாயிருக்கும் தூபம், தீபம், நறுமலர் ஆகியவைகளை அமைத்து வைக்கிறது இன்னொரு கூட்டம். விளையாட்டுப்போன்றே வழிபாடு நிகழ்கிறது. உண்மையில் சிறுவர்களுக்கு வழிபாடு விளையாட்டுப் போன்றே இருக்கவேண்டும். தங்களையறியாது அவர்கள் அதில் ஓர் ஒழுங்குப்பாட்டை உண்டுபண்ண வேண்டும். உணவுப் பொருள்களை இறைவனுக்கு நைவேத்தியம் பண்ணி அருந்தும் பழக்கத்தை சிறார்க்கு ஊட்ட வேண்டும். அதில் அவர்கள் அடையும் ஆனந்தமே அடிப்படைக்கல்வி ஆகிறது. மக்களுடைய நித்திய வாழ்க்கையில் இம்மூவிதக் கிருத்தியங்கள் அடங்கியிருக்கின்றன. முறையாக மலம், மூத்திரம் கழித்தல் சம்ஹாரத் தொழில்.

மண்ணிலே அவைகளை மறைத்துவைப்பது ஸ்திதி தொழில். செடி கொடிகளுக்கு அவைகளை எருவாக்குவது சிருஷ்டித் தொழில். அழிக்கவேண்டியவைகளை முறை தெரிந்து அழித்தல் மூலம் அறிவு வளர்ச்சி உண்டாகிறது. பயன் படாததை அழிப்பது, பயன்படுவதை உண்டு பண்ணுதற்கு முதற்காரணமாகிறது. பழைய காகிதங்களை அழித்துப் புதிய காகிதம் பண்ணலாம். குப்பை செத்தைகளை எருவாக்கிப் புதிய பயிர்கள் உண்டுபண்ணலாம். உண்டுபண்ணிய உணவுப்பொருள்களைப் பாதுகாத்து வைத்துப் பழகலாம். இவையாவும் வாழ்வுக்கு இன்றியமையாத செயல்கள். அவைகளை முறையாகச் செய்யக்கற்றுக்கொள்ளுபவர்கள் வாழக்கற்றுக்கொள்பவர்கள் ஆகின்றனர்.

இளமையில் கற்ற ஒரு பாடம் ஆயுட் காலம் முழுதுக்கும் உதவக் கூடியது ஆகிறது. எதைச் செய்தாலும் அதை விளையாட்டாகச் செய்து பழகுதலே இளமையில் கற்க வேண்டிய பாடமாம். விளையாட்டுப்போன்று வினையாற்றுபவர்களே நன்கு வாழத்தெரிந்தவர்கள் ஆகிறார்கள். காலமெல்லாம் விளையாட்டு பயன்படுகிறது. சிறியோர், முதியோர் ஆகிய எல்லோர்க்கும் அது தேவை. ஊக்கத்துடன் விளையாடுபவர்களே மனதைத் தெளிவுபடுத்துகின்றனர். இளமையைப் பாதுகாக்க வல்லதும் அவ்விளையாட்டேயாம். ஆயுளை வளர்க்கும் திறன் அதற்கு உண்டு. அறிவை அது நன்கு தீட்டுகிறது. ஆற்றலைப் படிப்படியாக அது பெருக்குகிறது. மற்றொரு பெரும் பயன் விளையாட்டில் உண்டு. விளையாடும்பொழுது குழந்தை பெற்றோரை மறந்துவிடுகிறது. பெற்றோரை விட்டுப் பிரிந்து அவர்களை மறந்திருக்கும்பொழுதே குழந்தை தனக்குத்தானே துணையாய் இருந்து பழகுகிறது. ஒவ்வோர் உயிரும் பிறரைச்

சார்ந்திருப்பதைக்கடந்து தன்னையே சார்ந்திருக்கும் பயிற்சியைப் பெற்றாகவேண்டும். தன்னைத்தான் சார்ந்திருப்பவனே பெருவாழ்வு வாழ்கிறான். விளையாடும்பொழுது குழந்தை தன்னையே சார்ந்திருக்கிறது. உண்மையில் அப்பொழுது அது பெருவாழ்வு வாழ்கிறது. விளையாடும்பொழுது நேரம் போவது குழந்தைக்குத் தெரியாது. மிகைபட விளையாடுவதனால் அதற்கு ஆயாசம் வந்துவிடுவதில்லை. விளையாட்டில் மூழ்கிய குழந்தை ஊக்கம் நிறைந்ததாகவே இருந்து வருகிறது. இத்தனைவிதமான நன்மைகளும் அமையப்பெற்ற விளையாட்டையே அடிப்படைக் கல்வி என்கிறோம்.

## மனம் ஒடுங்குதல்

வெளிப் பார்வைக்குச் சிறார் படிப்பு விளையாட்டுப் போன்று தென்படுகிறது. உண்மையில் அதுவிளைவிக்கும் மேலாம் பயனே வாழ்க்கைக்குப் பெருந்துணையாகிறது. ஊக்கத்தோடு விளையாடிக்கொண்டிருப்பவர்களுக்குக் காலம் போவது தெரிவதில்லை. எப்பொழுதெல்லாம் காலத்தின் போக்கு கருத்துக்கு வருவதில்லையோ அப்பொழுதெல்லாம் மனம் குவிந்திருக்கிறது. குவிந்தமனம், ஒருமுகப்பட்ட மனம், ஒடுங்கிய மனம், அடங்கிய மனம் என்னும் சொற்களெல்லாம் ஒரு கருத்தையே விளக்குகின்றன. யாருக்கு மனம் ஒடுங்கி அடங்கி இருக்கிறதோ அவன் வாழ்வில் மேன்மையுறுவது திண்ணம். தூக்கத்தில் காலம்போவது தெரிவதில்லை. ஏனென்றால் அங்கு மனம் ஒடுங்கியிருக்கிறது. விழித்திருந்து விளையாட்டுப்போன்று நன்கு வினையாற்றும் பொழுதே மனது ஒடுங்கிவிடுகிறது. காலம் போவதும் தெரிவதில்லை. ஒழுங்குப்பாட்டோடு மனம் ஒடுங்கியிருப்பதே அது மேன்மையடைவதற்கு உற்ற உபாயமாகும். சில உதாரணங்களைக்கொண்டு இதை விளக்கலாம். பாலில்

பிரை ஊற்றியான பிறகு அதை அசையாது ஓரிடத்தில் வைத்துவிட வேண்டும். அப்பொழுதுதான் நல்ல தயிர் ஆகிறது. சிறிதளவாவது அசைந்தால் நல்ல தயிர் ஆகாது. குளிரில் நீர் உறையும்பொழுது காற்றடியாது இருக்க வேண்டும். அப்பொழுது கண்ணாடி போன்று அது தெளிந்த கட்டியாகிறது. காற்றடித்துக்கொண்டிருந்தால் அதன் அமைப்பில் ஒழுங்குப்பாட்டைக் காணமுடியாது. வளர்ச்சி யடைந்துவரும் சிறுவர்களுடைய மனது நல்வாழ்வில் ஊறி ஒடுங்கியிருக்க வேண்டும். அத்தகைய பான்மையில் நிலை பெற்றிருக்குமளவுமனம் மேன்மையுறுகிறது. அதற்குமாறாகப் பொருந்தாத எண்ணங்களிலும், உணர்ச்சிகளிலும், செயல் களிலும் சிறார் மனது சிதறடைந்து போகுமளவு மன அமைப் பிலே அவர்கள் சிறுமையடைந்து விடுவின்றனர். மனம் குவியப்பெறுமளவே ஒருவன் மேலோன் ஆகிறான். எவ்வள வுக்கெவ்வளவு மனம் குவிகிறதோ அவ்வளவுக்கவ்வளவு மனத்தகத்து மேன்மையும் தானாக வந்து வாய்க்கிறது. மனதை ஒரு முகப்படுத்துவதே அடிப்படைக் கல்வி. விகசிப்பு அடைந்த மனது தெளிந்து ஒருமுகப்படுகிறது. இளமை அதற்கு முற்றிலும் பொருத்தமானது. முதுமையிலோ அது சிதறடைந்து போய்விடுகிறது. ஆதலால்தான் மனம் குவிந் திருக்கும் செயல் 'இளமையில் கல்' என்னும் கோட்பாடு வந்தது. ஊசியின் காதிலே நூலை நுழைத்தற்கு அதன் இழைகள் ஒன்றாக முறுக்கப்பெற்றிருக்கவேண்டும். மனதின் தன்மையும் அத்தகையதே. ஒருமுகப்பட்ட மனது எதை யும் எளிதில் கற்கவல்லதாகிறது. சூரிய கிரணங்கள் சித றிப் போகுமளவு ஒளி மங்குகிறது. பூதக்கண்ணாடியின் வாயிலாகக் கிரணங்களை ஒன்றாகக் குவிக்குமளவு அவை களின் ஒளியும், வெப்பமும் அதிகரிக்கின்றன. மனது ஒரு

முகப்படுமளவு அது தெளிந்து ஒளிர்கிறது. ஞான வெளிச்சத்தை அது பெற்று விடுகிறது. எதையும் எளிதில் கிரஹிக்கக் கூடிய மனதைப் பெறுவதே அடிப்படைக் கல்வியாகும்.

நல்ல சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ராஜகுமாரர்களாகிய பாண்டவர்களும்,கௌரவர்களும் துரோணாசாரியரிடம் கல்வி பயின்று வந்தார்கள். ஒருநாள் அவர்கள் ஒரு மரத்தடியில் தங்கியிருந்தபொழுது பரீக்ஷை ஒன்று நிகழ்ந்தது. மரத்தின் உச்சியில் பல கிளைகளுக்கிடையில் கிளி போன்று தென்பட்ட இலக்கு ஒன்றைத் துரோணர் அவர்களுக்குக் காட்டிக்கொடுத்தார். பின்பு அதைக் குறியாக வைத்து ஒருவன் பின் ஒருவன் அம்பால் எய்தல் வேண்டுமென்று ஏவினார்.

குறி பிடித்ததும் குருவிடமிருந்து கேள்விகள் பிறந்தன. 'என்னென்ன தென்படுகின்றன' வென்று அவர் கேட்டார்.

'கிளைகள், இலைகள், கிளிபோன்ற இலக்கு' என்னும் விடைகள் வந்தன. அப்படிச் சொல்லிய ஒவ்வொருவனுக்கும் 'நிறுத்து, நீ அதை எய்யவேண்டாம்' என்று துரோணர் தடை சொன்னார். கிட்டத்தட்ட எல்லார்க்கும் ஒரே தடை உத்தரவு வந்து விட்டது. தர்மன், துரியோதனன், பீமன் ஆகிய தலைமாணாக்கர்கள் அம்பையும், வில்லையும் கீழே வைக்க வேண்டியதாயிற்று. அர்ஜுனனுடைய முறை வந்தது. அவன் குறி பிடித்தான். 'என்னென்ன தெரிகின்றன' என்று குரு கேட்டார்.

"கி.........ளி"

"இன்னும் என்னென்ன தெரிகின்றன?"

"க்.............கி..............."

"கண்ணுக்குத் தெரிவதைச் சொல்" என்று துரோணர் தூண்டினார்.

இப்பொழுது அர்ஜுனன் பேச்சு மூச்சு எல்லாம் நின்று விட்டன.

"எய் அம்பை" என்ற உத்தரவு உதித்தது. கிளி போன்ற இலக்கை அம்பு துளைத்துக்கொண்டு சென்றது!

அர்ஜுனன், அவனுடைய அஸ்திரம், அவன் வைத்த குறி ஆகிய மூன்றும் ஒன்றித்து விட்டன. அவனது மனம் குவிந்த நிலை அதற்குக் காரணம். குவிந்து அடங்கிய மனதுக்கு ஆகாத காரியம் ஒன்றுமில்லை. துரோணருக்கு அவ்வுண்மை தெரியும். மனதை ஒருமுகப்படுத்தத் தெரிந்து கொள்ளுதல் அடிப்படைக் கல்வி.

விளையாடுவதும், விளையாட்டுப் போன்று தொழில் புரிவதும் மனம் குவிதற்கு உற்ற உபாயங்கள் என்பதை ஆராய்ந்தோம். குருகுலங்களில் பண்டைக்காலத்து ரிஷிகள் மாணாக்கர்களைப் பண்படுத்துதற்குக் கையாண்ட முறையையும் இனி ஆராய்வோம். மனம் குவிந்திருந்து விகசிப்பு அடைவதே வாழ்வின் பயன் என்பதை அப்பெரியோர்கள் நன்கு அறிந்திருந்தனர். மனதை ஒருமுகப்படுத்தக் கற்றுக் கொண்டவன் அடிப்படைக் கல்வியைக் கற்றுக் கொண்டான் என்று அவர்கள் கருதி வந்தனர். ஒருமுகப்பட்ட மனது எதை வேண்டுமானாலும் எளிதில் கற்றுக் கொள்ளும்; கற்றதைச் செயலில் சாதிக்கும். அக்கோட்பாட்டின்படி மனதை ஒருமுகப்படுத்துவது கல்வி. வாழ்க்கையில் ஒருவன் வல்லவன் ஆவது அதினின்று விளையும் பயனும். காரணமும், காரியமும் இயற்கையில் முறைமாறாது நிகழ்ந்து வருகின்றன. யாண்டும் காரணத்துக்கேற்ற

காரியம். நல்ல காரணம் நல்ல காரியத்தை விளைவிக்கிறது. மனம் ஒடுங்கியிருப்பது காரணம். பெருவாழ்வு வாய்ப்பது காரியம். யாருக்கு இளம் வயதிலேயே மனம் குவிந்திருப்பது சாத்தியமாகிறதோ அவனுக்குப் பின்பு அதன் காரியமாகப் பெருவாழ்வு வாய்க்கிறது. அவனே மேலோன் ஆகிறான். செயற்கரிய செயல்களையும் சாதிக்கவல்லவன் அவனே. ஆதலால் மாணாக்கர்களுக்கு நேர்முறையில் மனம் ஒடுக்கம் உண்டாகும்படி முந்தைய முனிவர்கள் செய்தார்கள். இதுவே தியானப்பயிற்சி என்னும் பெயர் பெறுகிறது. பலர் நினைப்பது போன்று தியானம் நமக்குப் பிடிபடாததல்ல. மீன் குஞ்சு நீரில் நீந்துவதுபோன்று நல்ல சூழ்நிலையில் ஒழுங்காக வாழும் சிறுவர்கள் தியானத்தை விளையாட்டுப் போன்று செய்வார்கள். விவேகானந்த சுவாமிகளுக்குப் பிள்ளைப் பருவத்தில் தியானம் செய்வதே சிறந்த விளையாட்டாக அமைந்திருந்தது. சிறுவர்களுடைய மனது சிதறடையாதது. ஆதலால் அவர்களுக்குத் தியானப்பயிற்சி கொடுப்பது எளிது. அதையே அடிப்படைக்கல்வி என்று விவேகானந்த சுவாமிகள் பகர்ந்திருக்கிறார். மனதை ஒருமுகப்படுத்தக் கற்றுக்கொண்ட பிறகு மேலாம் கருத்து ஏதேனும் ஒன்றை ஒருவன் மனதில் விதைத்து விட்டால் அவன் இயல்பாகவே மேலோன் ஆய்விடுவான் என்று இக்காலத்தில் தோன்றியுள்ள முனிவராகிய விவேகானந்த சுவாமிகள் பகரலாயினர்.

மாணாக்கர் மூன்று வேளை தியானம் பண்ணிப் பழக வேண்டும். வேளைக்கு ஐந்து நிமிஷம் நன்கு தியானம் செய்தால் போதுமானது. காலையில் சூரியன் உதயமாகிறான். மனதில் அவன் உதயமாவது போன்று நினைத்து ஐம்பொறிகளை அடக்கி ஆனந்தமாக அமர்ந்திருப்பது காலை தியானம்.

அதேமுறையில் உச்சிவேளையில் ஒளிரும் சூரியனை மனதில் நாட்டுவது மத்தியான தியானம். படிப்பதற்கு முன்பு பொன்னிறமாயுள்ள ஞாயிறை உள்ளத்தில் வீற்றிருக்கச் செய்வது மாலை தியானம். அறிவு வளர்ச்சிக்கு இது எத்தகைய பெருந்துணை என்பது இதைத் தொடர்ந்து பழகுபவர்க்கு விளங்கும். முனிபுங்கவர்கள் உலக மக்களுக்கு அளித்துள்ள ஒப்பற்ற ஞானச் செல்வம் இது. தொன்று தொட்டு இந்தியப் பெருமக்கள் காப்பாற்றி வைத்திருக்கும் அழிவற்ற ஆத்மீகப் பொக்கிஷம் என்றும் இதைப் பகரலாம். இதை ஏற்கவல்லவர் எல்லாரும் நல்ல ஞானசம்பந்தர் ஆவர். இத்தகைய தியானப் பயிற்சியையும் ஒரு விளையாட்டுப் போன்று செய்து வருவதே முறை. மாணாக்கர்கள் மெய்ம்மறந்து தியானத்தில் மூழ்கியிருக்குமளவு மனவொடுக்கம் உண்டாகிறது. அதனால் மனத்திட்பம் தானே வந்தமைகிறது. முறையாக முறுக்கிய கயிறு உறுதிப்பாடு அடைவது போன்று குவிந்திருந்து பழகும் மனது உறுதிப்பாடு அடைகிறது. தீட்டிய வாள்போன்று அதற்குக் கூர்மை உண்டாகிறது. குவிந்த ஒளிப்பிழம்பு போன்று அதற்கு தேஜஸ் உண்டாகிறது. இளம் வயதில் இத்தகைய சீரிய பயிற்சியைக் கொடுப்பது அடிப்படைக் கல்வியாகும்.



# 3. ஆதாரக் கல்வி

## ஆதாரமாயிருப்பது மனது

வீடு கட்டுதற்கு அஸ்திவாரம் போடுகிறோம். வீட்டுக்கு அது அடிப்படையாயுள்ள பொருள். அஸ்திவாரத்தின்மீது கட்டிடத்தின் மற்ற பகுதி வருகிறது. வீடு என்னும் மேற் பகுதிக்கு அஸ்திவாரம் ஆதாரமாகிறது. கீழே மண்ணினுள் அமைக்கப்பெற்றுள்ள கற்களே அக்கட்டிடத்துக்கு அடிப் படையானவைகள். அடிப்படையாயுள்ள அஸ்திவாரத்தின் வலிவுக்கும் இணைப்புக்கும் ஏற்ப பாரத்தைத் தாங்கும் தன்மை அதற்கு அதிகரிக்கிறது. உறுதியான அஸ்திவாரத் தில் அடுக்கடுக்காகக் கட்டிடத்தை உயரக்கட்டிக்கொண்டு போகலாம். வலிவான அதன் அடிப்படைப்பகுதி எவ்வளவு பாரத்தை வேண்டுமானாலும் தாங்கக்கூடியது. ஆக, கட்டி டம் ஒன்றுக்கு அடிப்படையாயிருக்கும் கல்லே அதற்கு நல்ல ஆதாரமாகிறது. கட்டிடம் உயிரற்றது. வளர்ந்து வரும் மரம் ஒன்றோ உயிருடையது. வளர்கிற மரத்துக்கு அடிப் படையாயிருப்பது அதன் வேர்.

எது அடிப்படைக் கல்வியாயிருக்கிறதோ, அது வாழ் வுக்கு ஆதாரக் கல்வியாகிறது. நல்ல மனம் படைத்திருப்பது அடிப்படைக் கல்வி என்று ஏற்கனவே ஆராயப்பட்டது. குவிந்து ஒருமுகப்பட்ட மனம் முழுமனது ஆகிறது. அத னிடத்து யாண்டும், தெளிவும், திட்பமும் திகழ்கின்றன. ஒரு விதத்தில் அதை உறுதிபடைத்த நல்ல வித்தோடு ஒப் பிடலாம். நல்ல வித்தினின்றே உறுதியாக ஓங்கி வளரும் நல்ல மரம் உண்டாகிறது. வித்தினிடத்துக் குறைபாடு இருந்தால் அதை எவ்வளவுதான் நன்றாகப் பயிர்செய்தாலும் அது நல்ல மரமாகாது. நல்ல வித்தைத் தேடியெடுப்பதற்கு

ஒப்பானது அடிப்படைக்கல்வி. அந்த வித்தினின்று நல்ல மரத்தை உண்டுபண்ணுதற்கு ஒப்பானது ஆதாரக்கல்வி. திட்பமுடைய மனது மானுட வாழ்வை விரித்து விளக்கு கிறது. கட்டுகிற வீட்டில் கீழே அஸ்திவாரமாயிருப்பதும், மேலே கட்டிடமாயிருப்பதும் ஒன்றுபட்டுவிடுகின்றன. வளர் கின்ற மரத்தில் அடிப்படையாயிருக்கின்ற வேரும், மேற்பாக மாக இருக்கிற மரமும் உண்மையில் ஒன்றே. கீழே வேர் அதற்கு ஆதாரமாயிருந்துகொண்டு கிளைகளுக்கும், இலை களுக்கும் நல்ல உணவை ஏற்று வழங்குகிறது. வேர் ஆக இருப்பதே நாளடைவில் முழு மரமாகப் பரிணமிக்கிறது. அங்ஙனம் சிறுவரிடத்து உள்ளிருக்கும் முழு மனது சிறப் புடைய வாழ்வாகப் பரிணமிக்கிறது. மரம் விதையாயிருக் கும்பொழுதோ, அல்லது அது வேர் ஆக வளர்ந்திருக்கும் பொழுதோ அதனிடத்து அழகும், பண்பும் பொலிவதில்லை. மண்ணுக்கு மேலே மரமாக வளர்ந்து அதனிடத்திருந்து கிளை, இலை, பூ, காய், கனி முதலியன பரிணமிக்குமிடத்தே பல விதமான சிறப்புக்களை அதனிடத்துக் காண்கிறோம். அதே விதத்தில் மனத்தினுள்ளே மறைந்திருக்கும் சிறப்புக் கள் எவை என்று அறிவதும் அச்சிறப்புக்களைத் தோற்றத் துக்குக் கொண்டு வருவதும் ஆதாரக் கல்வியின் நோக்க மாகும்.

மனத்தினுள் புதைந்திருக்கும் சிறப்புக்களை அளந்து அறி வது மிகக்கடினம். இயற்கையிலே தோற்றத்துக்கு வந்திருப் பவைகளுள் மகோன்னதமானது மனது. அதன் தன்மைகளை யெல்லாம் எவ்வளவுதான் விளக்கிக்கொண்டு போனாலும் அவைகளுக்கு ஒரு முடிவு இல்லை. மூலப்பொருளாகிய தெய்வத்திடத்து எத்தனைவிதமான மகிமைகள் இருக்கின் றனவோ அத்தனை விதமான மகிமைகள் அண்டமெங்கும்

வியாபித்துள்ள மனதின் தோற்றங்களிடத்திலும் காணலாம் என்றால் அது மிகையாகாது. அத்தனை விதமான சிறப்புக் களையும் வகைப்படுத்தி விளக்குவது முற்றிலும் அவசியமா கிறது. மனதின் பொலிவுகளைப் பாகுபடுத்துதற்குப் புராணத்தில் புதைந்துள்ள வரலாறு ஒன்று நன்கு பயன் படுகிறது. அவ்வரலாற்றை முதலில் சுருக்கமாக விளக்கு வோம்: சிவபெருமான், சக்தி சமேதரராய்க் கைலாயத் தின்கண் எழுந்தருளி இருந்தார். அவ் அம்மை அப்பனுக்குப் பிள்ளைகளாகிய கணபதியும் குமரனும் ஆங்குக் குலாவி விளையாடிக் கொண்டிருந்தனர். குடும்பத்தின் இனிமையும் பள்ளிக்கூடத்தின் பண்பும் கைலாயத்திலே ஒன்று சேர்ந்து இலங்குவனவாயின. மேலாம் வாழ்வுக்கு விளக்கமாகவும் அப்புனிதமான இடம் அமைந்திருந்தது. ஆங்கு எழுந்தருளி யிருந்த இறைவனது திருக்கோலத்தைக்கண்டு வணங்க நாரதர் அங்குப் போய்ச் சேர்ந்தார். போனவர் வெறுங் கையோடு போகவில்லை. தமது அன்புக்கு அறிகுறியாகக் கையில் கனி ஒன்றை அவர் எடுத்துச் சென்றார். சிவனார் சந்நிதியில் அதைச் சமர்ப்பித்து வீழ்ந்து வணங்கினார். முனிவர் அன்புடன் படைத்ததை இன்புடன் அம்மை அப்பன் ஏற்றனர். ஆங்கு விளையாடிக்கொண்டிருந்த சிறார் இருவரை முன்னிட்டுத் தாய்தந்தையரிடம் சுரந்த அன்பிலே அக்கனி மேலும் தோய்ந்தது ஆயிற்று. தம்மிடம் சமர்ப்பிக்கப்பட்ட ஒரு கனியை இருவருக்குப் பங்கிடலாமா என்று அவர்கள் முதலில் எண்ணினர். இல்லை, இருவர் சிறப்பையும் சோதித்துப் பார்ப்போம் என்ற முடிவுக்குப் பெற்றோர் வந் தனர். அதற்காகப் பந்தயம் ஒன்று விடுவது என்று அவர்கள் தீர்மானித்தனர். முருகவேளையும், வேழமுகத்தனையும் தமது முன்னிலையில் நிறுத்தினர். உலகனைத்தையும் அளந்துவிட்டு

முதலில் வருபவனுக்குரியது அக்கனி என்று மாதா, பிதா மொழிந்தனர். அவர்கள் மொழிகேட்டு முடிந்ததும் முருகக் கடவுள் மாயமாய்ச் சென்று மறைந்தான். ஏனெனில் அகிலாண்டத்தையும் அதிவிரைவில் அளந்துவிட்டு முதலில் வருபவனுக்கே அந்த அன்புக்கனி உரியதாகும். மற்று, தடித்துப் பருத்த திருமேனியுடைய மூத்தவன் உலகெலாம் விரைந்தோடி ஆராய்ந்துவிட்டு முன்வருவது எங்ஙனம்! சற்று எண்ணிப் பார்த்தான். பிறகு விநாயகன் ஒய்யாரமாகக் குலுங்கிக் குலுங்கி நடந்து தாய் தந்தையரை வலம் வந்து கனியைத் தருகவென்று கையேந்தினான். அவன் அப்படிக் கேட்பது எப்படி முறையாகுமென்று பெற்றோர் வினவினர். ஆதிபகவனுக்கு அந்நியமாக அண்டம் என்பது ஒன்று உண்டாவென்று விக்னேசுவரன் வினவினான். மூத்தவன் மொழிந்தது முற்றிலும் மெய்யென்று ஒப்புக்கொண்ட மெய்ப்பொருள் கனியை அவனுக்குக் கொடுக்கப் போனார். அதற்குள் இளையவனும் தன் வேலையை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு வந்துவிட்டான்! இருவருள் கனிக்குரியவன் யார் என்னும் கேள்வி இப்பொழுது பெருங் கேள்வியாய்விட்டது. ஆதாரக் கல்விக்கு வேண்டிய ஆதாரமெல்லாம் இவ்வரலாற்றில் நமக்குக் கிடைக்கிறது.

## அன்பு என்னும் மனநிலை

வளருகிற செடி ஒன்று வேர் பிடித்ததும் அது கிளைகளாக அரும்புகிறது. மனிதனிடத்து மனம் உருவெடுப்பதும் அப்படியே. அது உரு எடுக்க எடுக்க உணர்ச்சியாகத் தோன்றுகிறது. உள்ளத்தின் உணர்ச்சிகளோ பலதரப்பட்டவைகள். ஆயினும் அவைகளை இரண்டு பாங்குடையவைகளாகப் பிரித்து விடலாம். ஒன்று உடன்பாட்டு உணர்ச்சி; மற்றது எதிர்மறை உணர்ச்சி. உடன்பாட்டு

உணர்ச்சிகள் வளர்ச்சிக்குத் துணைபுரிகின்றன. பின்பு எதிர் மறை உணர்ச்சிகளோ வளர்ச்சிக்குத் தடைசெய்கின்றன. அச்சம், சினம், துன்பம், பொறாமை, வெறுப்பு ஆகியவைகள் எதிர்மறை உணர்ச்சிகளாம். அவைகளுக்கு மாறாகத் துணிவு, இரக்கம், இன்பம், பொறுமை, விருப்பு, இனிமை ஆகியவை கள் உடன்பாட்டு உணர்ச்சிகளாம். இவ் இரண்டுவித உணர்ச்சிகளையும் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து அவைகளுக் குள் உள்ள வேற்றுமை நன்கு விளங்கும். உடன்பாட்டு உணர்ச்சிகள் உயிர் போன்றவை; எதிர்மறை உணர்ச்சிகள் மரணம் போன்றவை. உடன்பாட்டு உணர்ச்சி வெளிச்சம்; எதிர்மறை உணர்ச்சி இருள். ஒன்று வளர்ச்சியை உண்டு பண்ணுகிறது; மற்றது தேய்வைத் தருகிறது. ஒன்று இனி யது; மற்றது இன்னாதது. ஒன்று ஆக்கத்துக்கு ஏது வானது; மற்றது அழிவுக்கு ஏதுவானது. உடன்பாட்டு உணர்ச்சிகள் எத்தனைவித வடிவெடுத்திருந்தாலும் அவை யாவும் அன்பு என்னும் ஒரு பரந்த வடிவத்தில் அடங்கிவிடு கின்றன.

அன்பே உயிர். அன்பே வாழ்வு. அன்பே வளர்ச்சி. அன்பே ஆக்கம். சுருங்கச் சொல்லின் அன்பே தெய்வம்.

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

மனம் அடையும் சிறப்புகளுள் முதலாயது அன்பு. அன்பை வளர்க்கின்றவர்களே கல்விமான்கள். அவ் அன்புக்கு அறிகுறியாக நாரத மஹரிஷி கனியைக் கையில் ஏந்திவந் தார். அன்பு என்னும் கனியை உடைத்திருப்பவர் எங்குச் சென்றாலும் ஆங்கு அவர் வரவு நல்வரவு ஆகிறது. அன்பு சொரூபமாயிருக்கும் சிவசக்தியிடம் நாரதர் அன்பைக்

கொண்டுசேர்த்தார். அன்புக் கடலினிடத்து அன்பு நதி போய் ஒடுங்குவதற்கு ஒப்பானது அச்செயல். உயிர்களின் உள்ளத்தில் அன்பு சொரூபமாய் சிவபெருமான் வீற்றிருக்கிறார். அன்பைப் பெருக்குபவர் அனைவரும் தம்மிடத்து தெய்விகத்தை வளர்க்கின்றனர். மேலும் உயிர்களையெல்லாம் அவர்கள் அன்பிலே ஒன்றுபடுத்துகின்றனர்.

வளரும் பருவத்தில் உடல் தானாக வளர்ந்துகொண்டிருக்கிறது. அவ்வளர்ச்சிக்கு ஏதுவான போஷணையைக் கொடுத்துவிட்டால் போதுமானது. ஏனைய செயல்களெல்லாம் தாமாக நிகழ்ந்துவிடுகின்றன. மனதில் உண்டாகும் அன்பு வளர்ச்சியும் அத்தகையது. அதற்கேற்ற சந்தர்ப்பத்தைச் செய்து வைத்தால் அன்பு உருவெடுக்க ஆரம்பித்து விடுகிறது. ஆனால் இக்காலத்திய கல்விமுறையில் அன்பு வளர்ச்சிக்கு இடமில்லை. அதைப்பற்றி யாரும் எண்ணிப் பார்ப்பதுமில்லை. கல்வியோடு அன்பு சம்பந்தப்பட்டதல்ல என்று அது புறக்கணிக்கப்படுகிறது. வெளிச்சம் இல்லாத விடத்து இருள் சூழ்ந்து விடுவது போன்று அன்பு உருவெடுக்காத உள்ளத்தில் சுயநலம் புகுந்துவிடுகிறது. இக்காலத்திய மனிதன் முறையாக அன்பில் ஊறிவளராததினால் சுயநலமே வடிவெடுத்தவனாக இருக்கிறான். உலகத்தில் இருப்பதெல்லாம் தனக்காகவென்ற எண்ணமே அவனுடைய மனதில் மேலோங்குகிறது. போட்டி போட்டுக்கொண்டு தன் வல்லமையினால் நல்லதையெல்லாம் தன்னுடையதாக்கிக்கொள்ள அவன் முயலுகிறான். மனமுவந்து அவன் பிறர்க்கு எதையும் எடுத்து வழங்குவதில்லை. வியாபார முறையில் ஒருவனிடத்து இருப்பதை இன்னொருவன் சொந்தமாக்கிக்கொள்ள சுயநல உணர்வு முந்துகிறது: யாண்டும் தன்பொருட்டே தீவிர முயற்சி எடுத்துக்கொள்

ஹும் இயல்பு கல்வி கற்பவனிடத்து ஓங்குகிறது. இதனால் மனது அடையும் சிறப்பு ஒன்றுமில்லை. மனதினுள்ளே ஏற்கனவே அமைந்துள்ள மாசை சுயநலமானது இன்னும் அதிகப்படுத்தி விடுகிறது. சுயநல வளர்ச்சி அன்பைச் சுருக்குகிறது. மற்று சுயநலத் தியாகமோ படிப்படியாக அன்பை வளர்க்கிறது. உடலில் உண்டாகும் வளர்ச்சி மனிதனுக்கு உண்மையான வளர்ச்சி அல்ல; அன்பின் வளர்ச்சியே உண்மையானது. பெற்ற தாய் ஒருத்தி பட்டினி கிடந்தும் தன் மைந்தனுக்கு உணவுதேடிக் கொடுக்கிறாள். அது அன்பின் விளைவு. தன்னிடத்திருப்பதையெல்லாம் பிறர்க்கு எடுத்து வழங்கும் தன்மையது அன்பு. தனக் கென்று அது எதையும் கேட்பதில்லை. அக்ஷயபாத்திரம் என்னும் அரியபொருள் ஒன்றைப்பற்றிப் புராணங்களில் படிக்கிறோம். அன்புதான் அந்த அக்ஷய பாத்திரம். அதனி டத்திருந்து எடுத்து வழங்குமளவு அப்பாத்திரத்திலிருப்பது வளர்கிறது. அன்பு ஒன்றுதான் அப்படி வளரவல்லது. ஆகாததையெல்லாம் அது ஆக்குவிக்கிறது. அன்பு எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியவன் ஆகிறான் அதை உடைத் திருப்பவன். மனத்தின்கண் வேறு சிறப்பு எதுவும் அமையப் பெறாது தூய அன்பு மட்டும் பொலியுமாயின் வாழ்க்கைக்கு அது ஒன்றே போதுமானது. ஏனென்றால் அன்பின் வழி சென்று அழிந்துபோனவர் யாருமில்லை. அன்பானது தெய்வத்தையே தனக்குச் சொந்தமாக்கிக் கொள்கிறது. ஆதலால் பிரபஞ்சத்திலுள்ள அனைத்தையும் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ள வல்லது அன்பு.

அன்பு வளர்ச்சி ஒன்றே சுயநலத்தைப் பரநலமாக மாற்றுகிறது. உலகத்திலுள்ளவைகளையெல்லாம் தனக்கா கப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்ற எண்ணம்

மாறிப்போய் தனது வாழ்வு உலகுக்குப் பயன்படுவதாகும் படி எடுத்துக்கொள்ளும் முயற்சியே அன்பை வளர்க்கிறது. அன்பு வளர்வது அல்லது சுருங்குவது மனநிலையைப் பொறுத்திருக்கிறது. தனக்கென்று தேடுபவனுக்கு அன்பு சுருங்குகிறது. உலகுக்கென்று உழைப்பவனுக்கு அன்பு விரிவடைகிறது. சிறுவன் ஒருவனுக்கு ஏதேனும் ஒரு தின்பண்டத்தில் அலாதியான பிரியம் இருக்கிறது. அதை அறியும் பெற்றோர் அவன் கையில் அப்பண்டத்தை அதிக மாகக் கொடுக்கவேண்டும். பிறகு அதை மற்றவர்களுக்கு எடுத்து வழங்கும்படி அவனைத் தூண்டவேண்டும். மற்ற வர்கள் அப்பண்டத்தை உண்டு திருப்தியடைவதைக் கண்ட பின்னே அச்சிறுவன் அதை உண்ணவேண்டும். அப்பழக்கம் சிறு வயதிலிருந்து தொடர்ந்து கையாளப்படுமானால் அன்பை அது விரைவில் வளர்க்கும். பெற்றோர் உலகுக்கு வழங்கும் நன்கொடையில் பெரும்பகுதியைத் தங்கள் குழந் தைகளைக் கொண்டேகொடுப்பது சாலச் சிறந்தது. முக மலர்ச்சியோடும், அன்போடும், பணிவோடும் கொடுக்கப் படும் கொடைகளெல்லாம், கொடையாளியை அன்பு சொரூப மாக மாற்றுகிறது. குருகுல முறையில் அமையும் பள்ளிக் கூடம் சொந்த வீட்டுக்கு ஒப்பானது. சிறார் தங்களுக்கிடை யில் அன்பைப் பரிமாறிக்கொள்ளுதற்குக் குருகுல வாசம் ஒன்றே தகுந்த சூழ்நிலையாகும்.

குழந்தைக்குத் தாயினிடத்து அன்பு இயல்பாய் உண்டா கிறது. மாத்ரு பக்தி தெய்வபக்திக்கு ஒப்பானது என்று சான்றோர் சாற்றுகின்றனர். தாயினிடத்து அன்பு செலுத் தாது மேலோன் ஆனவன் யாருமில்லை. தாயின் துணை கொண்டு குழந்தை பிறகு தந்தையையும் நேசிக்கிறது. அன்பிலிருந்து தாய் தந்தையர் வணக்கம் உருவெடுக்கிறது.

மாதா பிதாவின் தூண்டுதலால் குருபக்தி உண்டாகிறது. கல்வி புகட்டும் ஆசாரியனிடத்து உள்ளன்பு பூணுமளவு கல்வி ஓங்குகிறது. அன்பில் ஊறிய கல்வியே புனிதமடைகிறது. கல்வி புகட்டுபவரையும், புகட்டப்பெறுபவரையும் இணைத்து வைப்பது அன்பு. அத்தகைய இணைப்பு இல்லாத கல்வி உயிரில்லாத கல்வியாய்விடும். அதனால் உள்ளமும் பாலைவனம் போன்று உலர்ந்து போய்விடும். மற்று தாய், தந்தை, குரு ஆகிய மூவரிடத்து வளர்க்கும் அன்பு சீரும், சிறப்பும் வாய்க்கப்பெற்றதாகிறது. மாண்பு அனைத்துக்கும் அவ்வன்பே இருப்பிடமாகிறது.

இனி, மற்ற உயிர்களிடத்து அன்பை வளர்ப்பதற்கு உற்ற உபாயம் ஒன்று உண்டு. துயரப்படும் நிலையில் சிறுவர் இருப்பது சர்வ சாதாரணமானது. சிறுவன் ஒருவன் அழுதுகொண்டிருக்கிறான். தனது அன்பைச் செலுத்துதற்கு மற்றொரு சிறுவனுக்கு அது நல்ல சந்தர்ப்பம். அவன் சிந்துகிற கண்ணீரைத் துடைத்து அவனுக்கு ஆறுதலளிப்பது தன் கடமை என்ற உணர்ச்சி இயல்பாக உதிக்கவேண்டும். திரும்பத் திரும்ப அப்படி அனுதாபம் காட்டுமிடத்து அதன் மூலம் அன்பு வளர்கிறது. அன்பின் துணைகொண்டே அன்பு வளர்கிறது எனலாம். எத்தனையோ காரணங்களை முன்னிட்டுச் சிறுவர்களுக்குத் துயரங்கள் வந்துகொண்டே இருக்கும். அப்படி வருகிற ஒவ்வொரு துயரத்துக்கும் முதற் காரணம் யாதென்று அன்புடையவனுக்கே விளங்கும். அக் காரணத்தை முன்னிட்டே அன்பின் வழியது உயிர்நிலை என்று இயம்பப்பட்டிருக்கிறது. அன்பு ஓங்குதற்கு ஏற்றவாறு ஆறுதலளிக்கும் திறமையும், முறையும் பலப்பலவாக வடிவெடுக்கும். கண்ணீர் துடைத்தல் என்னும் தொண்டதனில் அன்பு வளர்ச்சியும் சமயோசித புத்தியும் சேர்ந்தே

அமைகின்றன. பல ஆண்டுகளாக நூல்கள் பலகற்று அன்பையும் அனுதாபத்தையும் பெறமுடியாது. அன்பைச் செயலில் கொண்டுவருவதன் மூலமே அதைப் பெறமுடியும். சிறுவயதில் சிறியவர்களுக்குக் கண்ணீர் துடைத்துப் பழகு பவன் பெரியவனானபிறகு நல்கூர்ந்தாரனைவர்க்கும் நலன் வழங்க வல்லவன் ஆவது திண்ணம். அத்தகைய அன்பு படைத்தவனே சமுதாயத்துக்குச் செழுங்கிளை ஆவான். அன்பை வளர்ப்பதற்கு எண்ணிறந்த முறைகள் இருக்கின் றன. ஆக, ஆர்வத்துடன் அன்பை வளர்ப்பது ஆதாரக் கல்வியின் முதற்பகுதியாகும்.

உணர்ச்சியின் பண்பட்டநிலை அன்பு.அவ்வுணர்ச்சியை உருவாக்குவதற்கு இன்னுமோர் உபாயமுண்டு. உள்ளத்தை உருக்கவல்லது இசை. ஆடு, மாடு, பாம்பு, புலி ஆகிய உயிர் அனைத்தும் இசைக்கு வசப்படுகின்றன. அதற்கு ஆட்படாத ஆள், ஆள் அல்லன். இன்னிசையின் துணையைக் கொண்டு இளைஞர் உள்ளத்தில் பேருணர்ச்சியைப் பெருக்க லாம். அதற்குப் பெரியோர்கள் இயற்றிய திருப்பாடல் களும், இன்னிசையும் சேர்ந்து செயல்புரியவேண்டும். மக்கள் உள்ளத்தைப் பண்படுத்தும் நல்லுணர்ச்சிகளெல்லாம் பெரு மக்கள் பாடியுள்ள பாடல்களிலே பொதிந்து கிடக்கின்றன. சங்கீதத்துடன் இணைத்து அவைகளை மனமுருகப்பாடுதல் கல்விக்கு முற்றிலும் இன்றியமையாதது. சிற்சில வேளை களில் தன்னந்தனியாய் இருந்துகொண்டு இசை ஞானம் இல்லாதவர்களும் வாய்விட்டுப்பாடுதலில் பெரும்பயன் உண்டு. ஏனென்றால் அவரவர் பாடலை அவரவர் ரசித்தே ஆகவேண்டும். இசையும், அருட்பாடல்களும் சேர்ந்து சிறுவர்களை அருள் மயமாக்கும் என்பதைக் கல்விமான்கள் கருத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அன்பை வளர்ப்ப

தற்கு இசை பெருந்துணைபுரிகிறது. பிரபஞ்சம் முழுதுமே இசைமயம். ஆதலால் சிறுவர் உள்ளத்தில் இசையை முறையாகச் செலுத்துதல் ஆதாரக்கல்வியாகிறது.

## ஆற்றல் மனதின் மற்றொரு பகுதி

ஈண்டு நாம் எடுத்துள்ள புராண வரலாற்றில் அன்புக்கு உறைவிடம் சிவமும், சக்தியும், நாரதரும் என்பதை ஆராய்ந்தோம். இனி ஆற்றலுக்கு உறைவிடம் முருகவேள் என்பதைக் கவனிப்போம். முருகனுக்கு ஆகாத காரியம் ஒன்றும் இல்லை. உலகம் யாவையும் அளத்தல் வேண்டும் என்ற ஆணைபிறந்ததுதான் பாக்கி. அதிவிரைவில் அச் செயலை அவன் செய்து முடித்து விட்டான். அவனிடத்துக் குன்றாத ஊக்கம் உண்டு. ஊக்கமே இளமையைப் பாதுகாக்கிறது. அவன் ஊக்கத்துக்கு உறைவிடமாதலால் யாண்டும் இளமை காக்கும் குமரனாக அவன் இருந்து வருகிறான். அவனுக்குச் சொந்தமாயுள்ள ஆற்றலும், ஊக்கமும், இளமையும் சிறார் அனைவருக்குமே சொந்தம். நாட்டிலுள்ள குமரர் அனைவரும் குமரக் கடவுளின் பல்வேறு வடிவங்கள். அவர்கள் உள்ளத்தில் உறையும் வல்லமை அளப்பரியது. அணுவுக்கு அளப்பரிய சக்தி இருக்கிறதென்று இக்காலத்திய பௌதிக சாஸ்திரம் இயம்புகிறது. இது உலகத்தவர்களால் இன்று கண்டறிந்த உண்மையல்ல. பண்டைக் காலத்து மக்களுக்கும் இது தெரிந்திருந்தது. அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உண்டு என்று முன்னாளையவர்கள் மொழிந்து விட்டுப் போயினர். பெரியதில் இருக்கிற சக்தி சிறியதிலும் இருக்கிறது என்பது அதன் பொருள். அண்டம், பிண்டம் ஆகிய இரண்டிலும் இலங்குவது ஜடசக்தி. உயிரில்லாத சக்தியை ஜடசக்தி என்கிறோம். இனி உயிரோடு கூடிய சக்தி ஒன்று உண்டு. அதற்கு சித்சக்தி

என்று பெயர். சித்சக்திக்கு ஜட சக்தியைவிட அதிக வல்லமை உண்டு. உயிருடன் கூடியிருப்பதே அதற்குக் காரணமாகும். உயிரற்றதை உயிரானது வேண்டியவாறு ஆட்டி வைக்கிறது. இளைஞரனைவரும் சித் சக்தி சொரூபம். தாமே ஆடவும், உயிரற்றவைகளை ஆட்டவும் வல்லவர் இளைஞர். சிட்டால் எட்டாள் வேலைசெய்யும் என்பது பழமொழி. சிட்டாட்களுக்குச் சரியாக வேலை கொடுக்கத் தெரிந்து கொள்ளவேண்டும். உட்கார்ந்திருந்தபடி முருகன் என்னும் ஒரு பொடிப் பையனைக்கொண்டு நொடிப்பொழுதில் உலகையெல்லாம் சிவபெருமான் அளந்து விட்டார். அதினின்று பள்ளிக்கூடங்களை நிர்வகிப்பவர்கள் கற்றுக் கொள்ள வேண்டிய பாடம் ஒன்று உளது. நூற்றுக்கணக்கான சிறுவர்கள் பள்ளிக்கூடங்களில் இருக்கிறார்கள். அத்தகைய சிறார் சேனைகளை வைத்துக்கொண்டு பள்ளிக்கூட நிர்வாகிகள் எதைத்தான் சாதிக்க முடியாது?

இளைஞர்கள் துடுக்கே வடிவெடுத்தவர்கள். அவர்களது உள்ளத்தினின்று ஆற்றல் ஓயாது ததும்பிக்கொண்டிருக்கிறது. அவயவங்கள் அனைத்தின் வாயிலாக ஆற்றல் பொலிகிறது. கணப்பொழுதாவது செயலற்றுக்கிடக்க அவர்களுக்கு இயலாது. அடக்கம் பழக்குதல் என்னும் பெயர் வைத்துக்கொண்டு அவர்களை முடவர்கள் ஆக்குவது பெரும் பேதமையாகும்; சிறுவர் உள்ளத்தில் அரும்பியிருக்கும் ஆற்றலைப் பன்மடங்கு அதிகப்படுத்துவது ஆதாரக் கல்வி. முழுமனதோடுகூடிய பயிற்சியே அதற்குற்ற உபாயம். செயற்கரிய செயல் யாவையும் இடையறாப் பயிற்சியாலும் முயற்சியாலும் சாதித்து விடலாம்.

நீரில் நீந்துதற்கு மீன்குஞ்சு எங்ஙனம் முந்துகிறதோ அங்ஙனம் விளையாட்டில் சிறுவர்கள் ஊக்கங்கொண்டிருக்

கின்றனர். பலவிதமான பந்தாட்டங்கள், களியாட்டங்கள் ஆகியவைகளைத் தொடர்ந்து வகையுடன் விளையாடுதல் ஆதாரக் கல்வியாகும். இளமையில் ஒன்றுமே விளையாடத் தெரியாதிருந்து, முதுமையில் எத்துறையிலாவது மேலோர் ஆனவர் யாரும் இல்லை யென்றே இயம்பலாம். ஆனந்தத்தை ஊட்டுபவைகள் விளையாட்டுக்கள். அத்தகைய விளையாட்டுக்கள் பல பயில்வதோடு பயன்படும் செயல்கள் பல செய்து பழகவேண்டும். வீட்டிலும் பள்ளிக்கூடத்திலும் சிதறடைந்து கிடக்கும் பழைய காகிதங்களைப் பொறுக்கிச் சேகரித்து அவைகளை எருவாக்கலாம்; அல்லது புதிய காகிதங்களாகவும், அட்டைகளாகவும் செய்து பழகலாம். அது பணச் செலவில்லாத ஆக்க வேலையாகும். துணி துவைத்தல், வீடு கூட்டுதல், பள்ளிக்கூடத்துத் தட்டுமுட்டுச் சாமான்களைத் துடைத்துச் சுத்தப்படுத்துதல், வகுப்பு அறைகளைக் கூட்டுதல், விளையாட்டு மேடைகளைச் சுத்தப்படுத்துதல், தோட்டத்திலுள்ள செடிகளுக்கு நீர் பாய்ச்சுதல், கறிகாய் நறுக்குதல், உணவு பரிமாறுதல், சிற்றுண்டி சமைத்தல், உண்கலம் துலக்குதல் — இவை போன்ற எண்ணிக்கையிலடங்காத சிறு சிறு செயல்களை விளையாட்டுப்போன்று சிறுவர்கள்செய்து சாதித்துவிடலாம்.

சில செயல்கள் அருவருப்புக்குரியவைகளென்று ஒதுக்கி வைக்கப்படுகின்றன. அவைகளில் ஒன்று கக்கூஸைப்பற்றியது. அதைச் சுத்தம் பண்ணுவது இழிதொழில் என்று பலர் எண்ணுகின்றனர். உண்மையில் அது இழிதொழிலன்று. மனதின்கண் உள்ள குறைபாடு அதை இழிதொழிலாக எண்ணும்படி செய்கிறது. தாய் ஒருத்தி தான் பெற்றெடுத்த குழந்தைக்குக் கக்கூஸ் வேலை செய்கிறாள். அது அவளுக்கு இழிதொழிலன்று. மக்களனைவரும் தங்களுக்குத்

தாங்களே கை கால் சுத்தி செய்துகொள்கின்றனர். அது இழிதொழில் ஆகாது. கக்கூஸை சுத்தி செய்து பழகுவது நல்ல சமுதாயத் தொண்டு. அதை இழிவானதென்று யாரும் எண்ணலாகாது. உயிர் வகைகளை விழுங்கத் தோன்றிய விஷத்தை எடுத்துச் சிவபெருமான் அருந்தித் தமது கண்டத்தில் நிறுத்தினார். அது அவர் செய்தபெரிய தோட்டித் தொழிலாகும். அச்செயலை அவர் செய்யாவிட்டால் உயிர்களுக்கே அழிவு வந்துவிடும். அவரது சொரூபமாக இருக்கும் இயற்கை ஓயாது தோட்டித் தொழிலைச் செய்து வருகிறது. ஊக்கத்துடன் சிறார் அச்செயலைச் செய்து பழகினால் நாளடைவில் அவர்கள் சமுதாயத்துக்குரிய நல்ல தொண்டர்கள் ஆவார்கள்.

பெரியோர்களுக்குப் பணிவுடனும் பிரியத்துடனும் பணிவிடை செய்வது சிறியோரது கடமை. பணிவிடை செய்வதன் மூலம் அவர்களுடைய பொறுப்பு அதிகரிக்கிறது. அவர்களிடத்திருக்கிற வேலைத்திறன் முதியோர்களுக்கு நன்கு பயன்படுகிறது. அந்த வாய்ப்பைச் சிறுவர்கள் என்றைக்கும் இழந்துவிடலாகாது.

இனிச் சித்திரவேலை, தச்சுவேலை, களிமண்வேலை, பஞ்சு உடைப்பது, நூல் நூற்பது, துணி நெய்வது, யந்திர வேலை ஆகிய கணக்கற்ற நிர்மாண வேலைகளிருக்கின்றன. இவைகளுள் இடத்துக்கும், சந்தர்ப்பத்துக்கும் ஒப்ப எவைகளையெல்லாம் ஆங்காங்கிருக்கும் சிறுவர்கள் நன்கு செய்ய முடியுமோ அவைகளில் அவர்களைத் தூண்டுவது முற்றிலும் அவசியமானது. எந்த வேலையைச் செய்தாலும் அதற்கடிப்படையாயுள்ள சில கோட்பாடுகளை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். வேலைகளனைத்தும் சிறுவர்களுக்கு விளையாட்டுப் போன்று இருக்கவேண்டும். அவைகளில்

அவர்களுக்குச் சலிப்போ, வெறுப்போ தட்டிவிடலாகாது. அவர்கள் ஆற்றும் சிறு சிறு செயல்கள் வீட்டுக்கும், பள்ளிக் கூடத்துக்கும், பொதுமக்களுக்கும் ஏதேனும் ஒருவிதத்தில் பயன்படக்கூடியவைகளாக இருக்கவேண்டும். எச்செயலைச் செய்தாலும் அதன் மூலம் சிறாருடைய ஆற்றல் மேலும் அதிகரித்து வரவேண்டும். நீர்க்குள் இறங்கி நாம் அதை ஆழம் பார்க்க வேண்டியதில்லை. நீராம்பல் ஒன்றை வேருடன் எடுத்தால் நீரின் ஆழத்தைத் தெரிந்துகொள்ளலாம். சிறார் மனதை நாம் ஆழம்பார்க்க முடியாது. ஆனால் மனத்தின் திறத்தை அதினின்று தோன்றும் செயல் விளக்கி விடுகிறது. தூக்கி வினை செய்பவன் மனதிலே திறன் மிகப் படைத்தவன். வல்வினையானே ஆழ்ந்த மனமுடையவன் ஆகிறான். ஆக, ஆற்றலும் ஆழ்ந்த மனமும் ஒன்றேயாம். பழக்கத்தால் பேராற்றல் படைத்திருப்பவர்கள் பெரும் மனமுடையவர்கள் ஆகின்றனர். பலப்பல செயல்கள் வாயிலாக ஆற்றலைத் தோற்றுவிப்பது ஆதாரக்கல்வியின் இரண்டாம் பகுதியாகிறது.

## மனதின் மூன்றாம் மகிமை அறிவு

அறிவு என்பது உள்ளத்துக்குரிய மற்றொரு பேரியல்பு ஆகும். அறிவின் தோற்றம் கல்வியின் பயன் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. இதில் கருத்து வேற்றுமை கிடையாது. ஆனால் எது அறிவு என்னும் கேள்வி ஆராய்ச்சிக்குரியது. ஞாபக சக்தியை வளர்ப்பது கல்வி முறையில் ஒரு பகுதியாகிறது. எதைக் கற்றாலும் அல்லது கேட்டாலும் அதை மறவாது ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல் ஞாபக சக்தி என்னும் பெயர் பெற்றுள்ளது. அதைப் படைத்திருப்பது பாராட்டுதற்குரியதேயாம். விளங்காத வேற்று மொழியொன்றில் வாசிக்கப்பட்ட ஒரு பகுதியை அப்படியே

மனப்பாடமாக ஒப்பிக்கும் திறமை சிலர்க்குண்டு. இதுவும் கூரிய ஞாபகசக்தியின் அறிகுறியாம். ஆயினும் தெளிந்த ஞாபகசக்தியுடையவனை நுண்ணறிவாளன் என்று இயம்புவது பொருந்தாது. கூர்ந்த ஞாபகசக்தி வேறு; அறிவு வேறு. இனி, புள்ளி விவரங்களை ஏராளமாக மனதில் திணித்து வைத்திருப்பதை அறிவு என்று கருதுவார் உளர். தேச சரித்திரம், பூகோளம், பௌதிக விக்ஞானம் ஆகிய நூல்கள் புகட்டும் விஷயங்களையெல்லாம் வேண்டியவாறு தெரிந்து கொண்டால் போதுமென்று அவர்கள் நினைக்கிறார்கள். காலத்தையும், தேசத்தையும், வர்த்தமானங்களையும் பற்றிய தகவல்களை வேண்டியவாறு சொல்லுவதற்கு அவைகள் உதவுகின்றன என்பது உண்மையே. கடையில் என்னென்ன சாமான்கள் விற்பனைக்கு இருக்கின்றனவென்றும் அவைகளின் விலை விவரம் யாது என்றும் கூறுகின்ற கையாளுக்கு ஒப்பானவைகள் இப்புள்ளி விவரங்கள். கையாள் ஒருவன் கடையில் வியாபாரத்துக்கு உதவுவது போன்று விஷய வரலாறுகளைத் தெரிந்தவன் வாழ்க்கைக்கு உதவுவான். பலதரப்பட்ட செய்திகளை வேண்டும் பொழுதெல்லாம் அவன் நமக்கு எடுத்துச் சொல்லுவான். விஷயங்கள் பல கற்றவன் என்று அவனைப் பகரலாம். ஆனால் அறிவாளி என்று அவனைக் கூறுவது ஒவ்வாது.

பஞ்சு மூட்டை ஒன்று வண்ணத்தில் பெரியது. இரும்புத்துண்டு ஒன்று வண்ணத்தில் சிறியது. ஆனால் இரண்டின் எடைகளை நல்ல நிறைகோல் ஒன்று உள்ளபடி காட்டி விடுகிறது. எடை காட்டும் விஷயத்தில் நிறைகோல் நடுநிலை பிறழாதது. இனி, தூயநிலைக் கண்ணாடி ஒன்று இருக்கிறது. அதன் எதிரில் நிற்பவர்களுடைய முகங்களை அது உள்ளபடி விளக்கிக் காட்டுகிறது. அப்படிக் காட்டுவதற்கிடையில்

தனது நிலையினின்று அது பிறழ்வதில்லை. ஈண்டு இயம்பிய நிறைகோலுடனும், நிலைக்கண்ணாடியுடனும் அறிவை ஒப்பிடலாம்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

என்பது வாயுரை வாழ்த்து. அறிவுக்கு இதுவே முடிவான விளக்கம் ஆகிறது. கடவுளைப் பற்றிய அறிவுக்கும் இதுவே விளக்கம். உலகப்பொருள்களைப் பற்றிய உண்மைக்கும் இதுவே விளக்கம்.

நாம் எடுத்துக்கொண்டுள்ள புராண வரலாற்றில் அறிவுக்கு நல்ல விளக்கம் கிடைக்கிறது. அறிவே வடிவாயிருப்பவன் கணபதி. எது அறிவு என்பதை அவன் நன்கு விளக்குகிறான். உலகையெல்லாம் அளந்துவிட்டு வரும்படி முருகனும் கணபதியும் ஏவப்பட்டனர். ஆற்றல் கடவுளாகிய முருகன், அண்டங்களை அளந்துவிட்டு வந்தான். அறிவு தெய்வமாகிய கணபதி அண்டங்களுக்கு மூலப்பொருளாயுள்ள அம்மையப்பனையே தெரிந்து கொண்டான். அண்டங்களை அளத்தல் என்னும் செயல் அதில் அடங்கிவிடுகிறது. ஆற்றலிலும் பெரியது அறிவு என்பதும் அதினின்று வெளியாகிறது. மெய்யறிவு படைத்திருப்பவன் செயற்கரிய செயல்களையெல்லாம் விளையாட்டுப்போன்று எளிதில் செய்துவிடுகிறான். ஒருவன் ஒரு செயலை எம்முறையில் செய்கின்றானோ அதினின்று அவனுடைய அறிவுத்திறன் வெளியாகிறது. அண்டங்கள் யாவையும் சுற்றிப்பார்த்து அவைகளை மதிப்புப் போடுவது ஒருவனுடைய திறமையை விளக்குகிறது. அண்டங்களனைத்துக்கும் மூலப்பொருளாயிருப்பதை உணர்ந்து அண்டங்களுக்கு எல்லை கட்டி விடுவது அதை

விடப் பெரியது. அறிவுத் திறமையால் செய்யப்படும் செயல்களில் சிரமம் அதிகம் ஏற்படுவதில்லை. ஒரு செயலின் அல்லது ஒரு பொருளின் மூலதத்துவத்தை அறியாதவர்கள் பெரும்பாடுபட்டுக் காரியத்தை நிறைவேற்றுகிறார்கள். தத்துவத்தை அறிந்திருப்பவர்களுக்கோ வேலை எளிதில் முடிகிறது.எனவே ஒழுங்குப்பாட்டுடனும்,எளிதாகவும் ஏதேனும் ஒரு காரியம் செய்யப்படுமாகில் அது நுண்ணறிவின் விளைவாகும். கணபதி உலகை அளந்தவன் மட்டுமல்ல; உலகுக்கு மூலகாரணமாயிருக்கும் மெய்ப்பொருளை விளக்கியவனும் ஆகிறான். இத்தகைய நுண்ணறிவு புத்தகப்படிப்பினின்று வருவதல்ல; பிறர் சொல்லக் கேட்டும் அது வருவதல்ல; தூய மனத்தினின்று மெய்யறிவு பிரகாசிக்கிறது. மனத் தூய்மையே மெய்யறிவுக்கு முகாமையாகிறது. அது தூயதாகுமளவு அறிவு தானாக ஓங்குகிறது. எனவே மனதைத் தூயதாக்குவது ஆதாரக்கல்வி.

மனதைத் தூயதாக்குதற்குப் பள்ளிக்கூட நடைமுறையில் கையாளும் உபாயங்கள் சில இருக்கின்றன. மாணாக்கர்கள் ஓரம் சாரலாகாது. ஜாதி, சமயம், அரசியல் கட்சி முதலியன ஒருவன் ஓரம் சாருதற்கு இடங்கொடுக்கின்றன. சிறார்க்கு ஜாதி வேற்றுமை கிடையாது. சமயச்சார்பு கிடையாது. போதனையால் அத்தகைய சார்புகள் மனதில் உண்டு பண்ணப்படுகின்றன. அவ்விஷயங்களில் தராசு முனை போன்று மனது நடுநிலையில் இருக்கவேண்டும். நடுநிலையில் இருக்கும் மனது நல்ல மனது ஆகிறது. பிறகு கண்ணாடி போன்று அது தெளிந்த நிலையிலிருக்கவேண்டும். தூயதாகவும் நடுநிலை வகிப்பதாகவும் உள்ள மனது உண்மையை ஆராயத் தகுதியுடையதாகிறது. பார்ப்பவர் எல்லோருடைய பிம்பத்தையும் கண்ணாடி தன்னுள் திணித்து வைத்

திருந்து அவரவர்க்கு ஏற்றதை எடுத்துக் காட்டுகிறதில்லை. தன்து அமைப்புக்கு ஒப்ப தெளிந்த நிலையில் கண்ணாடி இருக்கிறது. அதனுள் பார்ப்பவர்களுடைய பிம்பத்தை விளக்குவதற்கிடையிலும் கண்ணாடி தனது தூயநிலையினின்று மாறாதிருக்கிறது. மனது அப்படித் தெளிவடையுங்கால் அது அறிவே வடிவெடுத்ததாகிறது. உண்மையைப் போற்றும் பாங்குடையவனே நல்ல மாணாக்கன். தன் மனதுக்குப் பிடித்தது எது என்பதல்ல கேள்வி. உண்மை எது என்பதே கேள்வி. மெய்ஞ்ஞானி ஒருவன் மெய்ப்பொருளைத் தேடுவது போன்று மாணாக்கன் ஒருவன் உண்மையை நாட வேண்டும். உண்மையை அறிந்துகொள்ளுதற்பொருட்டே சம்பாஷணைகள் புரிவது நல்லபயிற்சியாகும். அறிவைத் தீட்டுதற்கும் அதை வளர்ப்பதற்கும் ஓரம் சாராத சம்பாஷணை உற்றதோர் உபாயம் ஆகிறது. 'கேள்வி முயல்' என்பதன் பொருளும் அதுவேயாம். தமது சம்பிரதாயங்களையும் கொள்கைகளையும் முதியோர் சிறியவர் உள்ளத்தில் வலிந்து திணிக்கலாகாது. கணக்குக்கு விடை கண்டுபிடிப்பது ஒரு சம்பிரதாயத்தோடு சேர்ந்ததுமல்ல, கொள்கையோடு சேர்ந்ததுமல்ல. கணக்கைப்பற்றிய உண்மையைக் கண்டு பிடிப்பதுதான் விடை கண்டுபிடிப்பது என்னும் பெயர் பெறுகிறது. கணக்குக்கு விடை கண்டு பிடிப்பது போன்று சிறுவர் உள்ளம் படிப்படியாக உண்மையைத் தேடிக் கொண்டு வரவேண்டும். நெடுந்தூரத்துக்கப்பாலிருக்கும் ஓர் இடத்துக்கு நள்ளிரவில் போகிறோம். கைவிளக்கு ஒன்று அப்பொழுது உதவுகிறது. நெடுக உள்ள வழியை அது விளக்காது. புறப்படுகிற இடத்தில் இருந்துகொண்டே சேரவேண்டிய இடத்தையும் அது விளக்காது. கண்ணெதிரே உள்ள சிறு தூரத்துக்கு மட்டும் அது வழியைக் காட்டு

கிறது. வழிதவறிப் போவதற்கு அது இடம் தராது. முறையான சம்பாஷணை அத்தகையது. சிந்தனாசக்தியை அது வளர்க்கிறது. நெறியையும் குறியையும் அது கிரமமாகக் காட்டுகிறது. அறிவை உள்ளத்தினுள் ஓங்கச் செய்வதற்கு முறையான சம்பாஷணை சிறந்ததொரு வழியாகும். இங்ஙனம் எந்தப் பொருள் என்ன தன்மையுடையதாக இருந்தாலும் அந்தப் பொருளின் இயல்பை உள்ளபடி விளக்க வல்லது அறிவு. ஆதலால் அறிவு சொரூபமாயுள்ள உள்ளத்தை ஓங்குவிப்பது ஆதாரக் கல்வி.

இது காறும் ஆராய்ந்தபடி அன்பு, ஆற்றல், அறிவு ஆகிய மூவித மாண்புகள் மனதின்கண் அமைந்துள்ளன. அவைகளுக்கு இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்னும் பெயர்கள் அமைந்துள்ளன. மூலப்பிரகிருதியாகிய அன்னை பராசக்தியே இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞான சக்தி சொரூபிணி என்று அழைக்கப்படுகிறாள். இனி, மனதுக்கு இந்த மூன்றுவிதச் சிறப்புக்களுக்கு அந்நியமாக வேறு எதுவும் இல்லை. மனதை ஒரு முக்கோணமாக வைத்துக் கொள்வோமானால் அதன் மூன்று பக்கங்களாக, இந்த மூன்று மகிமைகள் அமைகின்றன. மூன்று பக்கங்களில் கீழே அடிப்பக்கமாயிருப்பது அன்பு. மற்ற இரண்டு பக்கங்களாக அமைந்திருப்பவை ஆற்றலும், அறிவுமாம். முக்கோணத்திலுள்ள மூன்று பக்கங்களில் எப்பக்கத்தையும் நாம் புறக்கணிக்க முடியாது. அதே முறையில் மூவித மாண்புகளும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன. அவைகளுள் எதை ஏற்றுக் கொள்ளுதல், எதைத் தவிர்த்தல் என்னும் கேள்வி எழ இடமில்லை. பறவை ஒன்று ஓரிடத்தைப் போய்ச்சேர விரும்புகிறது. அவ்விருப்பமே அன்பு. எத்திசையாகப் பறக்கவேண்டுமென்று அது முடிவு கட்டுகிறது. அது

அறிவு. பின்பு பறந்து செல்லுகிறது. அது ஆற்றல். மனிதன் கற்கின்ற கல்வியில் அன்பு, அறிவு, ஆற்றல் ஆகிய மூன்று மாண்புகளும் விரிவடைகின்றன. மெய்ப்பொருள் ஒருவர். சிவனாருடைய் குடும்பத்தில் மூன்று சொரூபங்களாக அவர் மிளிர்கின்றார். சிவசக்தியாயிருப்பது அன்பு சொரூபம். சுப்ரமண்யமாயிருப்பது ஆற்றல் சொரூபம். கணபதியாயிருப்பது அறிவு சொரூபம். அதே விதத்தில் மனது என்னும் மனிதனுடைய பெருங்கருவியானது அன்பு, அறிவு, ஆற்றல் சொரூபமாக வளரவேண்டும். மனதை அப்படி வளர்ப்பது ஆதாரக் கல்வியாகும்.



# 4. பயன்படும் கல்வி

## சிசுவின் பயன்

சிசுக்கள் எல்லாம் இனிமைக்கு இருப்பிடம் ஆகின்றன. உயிர்கள் அனைத்துக்கும் இக்கோட்பாடு உண்மையாகிறது. நீர்வாழ்வன, நிலம் வாழ்வன, நடப்பன, பறப்பனவாகிய எல்லா உயிர்களும் இளமையில் அலாதியான எழில் உடைத்திருக்கின்றன. மண்ணதனில் பிறந்து வாழ்க்கையைத் துவக்கும் ஆரம்பதசையிலே அவைகள்பால் பொலியும் தோற்றம் மிகவும் திவ்வியமானது. தெய்வ சான்னித்தியத்துக்கு விளக்கம் என்றே அதை விளம்புதல் வேண்டும். தெய்விகம் திகழும் சிசுக்களுள் மானுடச் சிசுவோ தனி மகிமை வாய்க்கப்பெற்றது. மக்கள் தம் குழந்தைகளைப் பாராட்டுவதினின்று அது ஓரளவு விளங்குகிறது. துயருற்றார் துயரத்தைத் துடைத்தற்குக் குழந்தைகளுடைய முன்னிலையை நாடுகின்றனர். இன்புற்றார் இன்பத்தைப் பெருக்குதற்கும் குழந்தைகளின் கூட்டுறவே உதவுகிறது. கோபம் கொண்டுள்ளவர்கள் குழந்தைகளின் பக்கத்தில் வந்தால் கோபம் பறந்தோடிவிடுகிறது. பொறாமை பூண்டிருப்பவர்கள் வேறு யாரைப் பாராட்டாவிட்டாலும் குழந்தைகளைப் பாராட்டியாகவேண்டும். மனிதனுடைய மனத்தகத்துள்ள குறைகளை யெல்லாம் அகற்றுதற்குக் குழந்தை மருந்து போன்று பயன்படுகிறது எனலாம்.

குழந்தைகளிடமிருந்து முதியோர்கள் பெறும் உதவியானது உள்ளத்தை ஒழுங்குப்படுத்துதலோடு நின்றுவிடுவதில்லை. உடலைப் பேணுதற்கும் உடலின்கண் உற்ற நோயை அகற்றுதற்கும் அது அருமருந்தாகிறது.

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு

என்னும் பொய்யாமொழி பெற்றோர்க்கு மட்டும் பொருந்துவ தன்று. முதியோர்கள் அனைவரும் சிறுவர்களிடமிருந்து பெறும் பயன் இதுவாம். சூழ்நிலைக்கு ஏற்ப உடல் திட்பம் மாறுபாடு அடைகிறது. நோயாளிகளுக்கிடையில் வசிப்ப வனுக்கு நோய் வருவது எளிது. மற்று உடலுக்கு உறுதி யும் ஊக்கமும் தூய இன்பமும் தருவது சிறுவர்களின் மெய் தீண்டலேயாம். சிறுவர்கள் யாண்டும் சிறுவர்களாகவே இருந்து வந்தால் இத்தகைய பயன் விளைந்துகொண்டே இருக்கும். ஆனால் இயற்கையின் அமைப்பு அங்ஙனம் இல்லை. தெய்வீகம் நிறைந்துள்ள குழந்தைப் பருவம் நாளடைவில் யௌவனமாக வடிவெடுக்கிறது. உள்ளத்துக் கும் உடலுக்கும் அருமருந்தாயிருந்த பாங்கு அப்பொழுது எங்கேயோ பறந்தோடி விடுகிறது. யௌவனதசை முதியோர்களின் உள்ளத்தை இயல்பாகக் கவர்வதில்லை. குழந்தைப் பருவத்தில் உள்ள பயன் யௌவனத்தில் இல்லையா என்னும் கேள்வி ஈண்டு இயல்பாக எழுகிறது.

## வேந்தன் வேலையாள் ஆகவேண்டும்

வயது ஐந்து வரும் வரையில் சிறுவன் ஒருவன் வேந்த னுடைய நிலையில் இருக்கிறான். அதாவது அவனுக்கு இச்சா சுதந்தரம் ஏராளமாகத் தரப்படுகிறது. அவனுடைய விருப்பங்களை யெல்லாம் நிறைவேற்றி வைக்கப் பெற்றோர் கடமைப்பட்டிருக்கின்றனர். பொருள் செலவு அதிகம் இல் லாது சிறுபிள்ளைகளின் ஆசைகளை நன்கு நிறைவேற்றி வைக்கலாம். குற்றமற்ற ஆசைகள் நிறைவேறுங்கால் குதூ கலம் உண்டாகிறது. இளமையில் குதூகலம் அறிவுவளர்ச்

சிக்கு இன்றியமையாதது. அகமகிழ்வுற்று வளரும் குழந்தை யின்கண் எதிர்காலத்தில் ஆண்மை பொலிவடையும். அதற் காகவே அது அரசனுடைய பாங்கில் வளர்க்கப்படுகிறது. மற்றவர்களுடைய மனதை வசீகரிக்கும் தன்மையும் ராஜ பதவியும் குழந்தை ஒன்றினிடத்திருந்து ஐந்து வயதில் கை நழுவிப்போக ஆரம்பிக்கிறது. மாந்தர் உள்ளத்தில் உயர்ந்த ஸ்தானம் பெற்று வாழ்ந்து வந்த உயிர் ஒன்று நாளடைவில் உபயோகமற்றதாகப் போய்விடுவது பொருந்துமா? எப் பொருள் அல்லது எவ்வுயிர் ஆனாலும் சரி, அதற்கு நாள் ஏற ஏற மதிப்பு அதிகரித்தல் வேண்டும். அதற்கு மாறாக அது பிறர்க்குத் தலைச்சுமையாகவோ உபத்திரவமாகவோ வடி வெடுப்பது தகாது. அது மலினமடைந்து போவதும் முறை யன்று. சிசு ஒன்று சிறுவன் அல்லது சிறுமியாக வளரும் போதே இக்குறைபாடுகளும் தலையெடுக்கின்றன. சிறார் சிலரை வீட்டில் வைத்துக்கொண்டு சமாளிப்பது எல்லார்க் கும் இயலுவதில்லை. பள்ளிக்கூடத்துக்குப் போகாதிருக் கும் வேளைகளில் அவர்கள் பண்ணும் அமளி அளவு கடந்தது. பெற்றோரும் அதைக் குறித்துத் திகைத்து விடுகின்றனர்.

விளையாடும் பருவத்தில் சிறுவர்கள் ஓடி ஆடி ஆரவா ரித்து விளையாடத்தான் செய்வர். அவர்களின் விளையாட் டைத் தடுப்பது அவர்களின் வளர்ச்சியைத் தடைப்படுத்துவ தாகும். விளையாட்டைத் தடைப்படுத்தாது அதைப் பயன் படுத்தவேண்டும். விளையாட்டை வினையாக மாற்றத் தெரிந்துகொள்வது முதியோர் கடமையாகும். நல்வாழ்வுக்கு உற்ற உபாயம் இதுவேயாம். இன்னது விளையாட்டு, இன்னது வினையென்ற வேற்றுமை இருக்கலாகாது. பொருள்களை நாசம் செய்யும் இயல்பு சிறுவர்களுக்கு

உண்டு. அத்தகைய இயல்பைப் பயன்படுத்தச் சந்தர்ப்பங்கள் பல உள. வீட்டிலும் அக்கம் பக்கத்திலும் உள்ள குப்பை செத்தைகளைக் கூட்டி யெடுத்துத் தீக்கு இரையாக்குதல் சிறுவர்களுக்கு விளையாட்டாக இருக்கும். அத்தகைய நிகழ்ச்சி நேர்வது சுகாதாரத்துக்கு ஏற்ற நல்வினையாகும். பொருள்களை உண்டுபண்ணுவது இளைஞர்களுக்கு இன்ப கரமான விளையாட்டு. விதை விதைத்து செடிகள் உற்பத்தி பண்ணும்படி அவர்களைத் தூண்டுவது அவசியம். காகிதம், பருத்தி, மரம் முதலிய மூலப்பொருள்களைக் கொண்டு விளையாட்டுச் சாமான்கள், ஆடைகள், ஆபரணங்கள் ஆகியவைகளை விளையாட்டாகச் செய்யும்படி சிறுவர்களை ஏவுதல் வேண்டும். மானுட வாழ்க்கையோடு தொடர் வுடைய ஆடு, மாடு, நாய், பூனை, கோழி, புறா முதலிய ஜீவ ஜந்துக்களைப் பக்ஷமாய் வளர்த்தல் சிறார்க்கு நல்ல விளையாட்டாகும். அதனால் வேடிக்கையாகவும் வினோத மாகவும் சிறுவர்களுக்குப் பொழுது போகிறது. அதன் விளைவாக ஆக்கத்தொழில் ஏதேனும் ஒன்று ஆய்க் கொண்டே இருக்கிறது. இங்ஙனம் சிறுவர் விளையாட் டைப் பயன்படும் வினையாக மாற்றவும் நல்ல வேலையாட் களாகும்படி அவர்களுக்குப் பயிற்சி கொடுக்கவும் முதியோர் கடமைப்பட்டிருக்கின்றனர்.

## பழைய வாழ்க்கை முறை

உலக வாழ்க்கையானது பொதுப்படப் போட்டி மய மானது. கேடுகள் பலவற்றை உண்டுபண்ணக்கூடியது போட்டி. அதற்குப் பெரிதும் இடம் தராமல் சமூக வாழ்க் கையை இந்தியா வகுத்து வைத்துள்ளது. அந்த ஏற்பாட் டின்படி தந்தையின் தொழிலையே மகன் செய்து வந்தான். சிறுவயதிலேயே அத்தொழிலை யொட்டிய பல செயல்களை

அவன் விளையாட்டாக ஆரம்பிப்பான். பள்ளிக்கூடத்துக்குப் போகாத நேரங்களில் பிதாவின் தொழிலில் பங்கெடுத்துக்கொள்வது அவனுக்குக் களியாட்டமாக இருக்கும். சிறிது சிறிதாக அக்களியாட்டத்தைக் காரியப்படுத்துவது தந்தையின் செயல். சிங்கக்குட்டிகளும், நாய்க்குட்டிகளும் ஒன்றையொன்று கடித்து விளையாடும். சில வேளைகளில் தாயுடன் அப்படி விளையாடும். தாய்மிருகமும் மகிழ்வுடன் அவ்விளையாட்டில் கலந்து கொள்வதுண்டு. எதிர்காலத்தில் வாழ்க்கையில் செய்யவேண்டிய வினையே இளம் பருவத்தில் விளையாட்டாக அமைகிறது. பலவிதமான உயிர்வகைகளுக்கு இக் கோட்பாடு உண்மையாகிறது. அதன்படி தந்தையின் தொழிலை மகன் விளையாட்டாகச் செய்து வந்ததும் இயல்பே. அப்படித் தொழில் பழகுதலில் இனிமையும் எளிமையும் சேர்ந்து அமைந்திருந்தன. சிறுவன் ஒருவன் இயல்பாக நடக்கக் கற்றுக்கொள்வது போன்று குலத் தொழிலையும் தெரிந்துகொண்டான். அவனுடைய கல்வியில் செம்பாதி சிரமமின்றி சொந்த வீட்டிலேயே நிறைவேறி விட்டது.

இன்றைக்கு இருக்கும் வாழ்க்கைமுறை பழைய முறையினின்று வேறுபட்டது. தந்தையின் தொழிலையே மைந்தன் செய்வதில்லை. அவனவனுக்கு ஏற்றது எது என்று தானே கண்டுபிடிக்கவேண்டும். அதற்குக் காலம் ஏராளமாகப் பிடிக்கிறது. பல ஆண்டுகளாக வெறும் ஏட்டுக் கல்வி கற்றுக்கொண்டிருப்பதற்கு இடையில் தனக்கேற்ற தொழில் எது என்பதைப்பற்றியும் மாணாக்கன் சிந்தித்துக்கொண்டிருக்க வேண்டும். வயது வரவர அதைக் குறித்துக் கவலையும் வளர்ந்துகொண்டே போகிறது. இத்தகைய குறைகளையெல்லாம் தவிர்த்திருந்தது பழைய ஏற்பாடு.

போட்டியின்றி, மனக்கவலையின்றிப் புதிய பிரச்னையின்றி மாணாக்கனுடைய வாழ்வு இனிது நிறைவேறி வந்தது.

## கல்வியும் தொழிலும்

இப்பொழுது உள்ள கல்வித்திட்டத்தின்படி மாணாக்கன் ஒருவன் சுமார் இருபது வருஷத்துக்குப் பெற்றோரால் ஆதரிக்கப்படுகிறான். பிறகு உத்தியோகம் கிடையாவிட்டால் அவன் மீண்டும் தந்தைக்குப் பொருளாதாரத்துறையில் தலைச்சுமையாக வந்தமைகிறான். மைந்தனைக் குறித்துத் தந்தைக்குத் தொல்லைகள் பல உண்டு. மைந்தனிடமிருந்து தந்தையடைந்த பயன் ஒன்றுமில்லையெனலாம். இக்குறைபாட்டை நீக்குதற்கு இப்பொழுது கல்வியோடு தொழிலும் ஒருவாறு இணைக்கப்படுகிறது. ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் இத்தகைய முயற்சி விரிவடைந்து வருகிறது. இப்புதிய திட்டத்துக்காக அரசாங்கமும் பொருள் செலவு செய்து வருகிறது. ஆனால் இந்த ஏற்பாட்டினின்று நன்மையொன்றும் விளைந்துவிடாது. ஏனென்றால் தொழில் புகட்டுகின்ற ஆசிரியர்கள் அத்தொழிலைக் கொண்டு பிழைக்கக் கற்றுக்கொண்டவர்கள் அல்லர். பாடம் புகட்டுவதற்காகத் தொழில் கற்பது வேறு; ஜீவனோபாயத்துக்காகக் கற்பது வேறு. பாடம் புகட்டுதற்காகத் தொழில் கற்பது எப்பொழுதும் பணச் செலவை உண்டு பண்ணும்; அதற்கேற்ற ஊதியம் ஒருநாளும் அத்தொழில் வாயிலாக வாராது. ஆக, மூன்று படித்தரங்களில் வைத்துத் தொழில் கலந்த கல்வியைக் குறிப்பிடலாம்; பண்டைக் காலத்து முறை நன்கு பயன்பட்டது. ஏனென்றால் தொழில் புரிந்து வாழ்க்கை நடாத்திய தந்தையே மைந்தனுக்கு அத்தொழிலைக் கற்பித்தார். பணச் செலவில்லாது அத் தொழில் கற்பிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து வந்த

வெறும் ஏட்டுக்கல்வி தந்தைக்கு வீண் பணச் செலவை உண்டுபண்ணிற்று; அவர் அடைந்த பயன் மிகக் குறைந்திருந்தது. மேலும் வந்துள்ள தொழிலோடு இணைக்கப் பெற்ற கல்வியோ இன்னும் அதிகப்படியான பொருள் சேதத்தை விளைவித்து வருகிறது. மாணாக்கன் சிறிது சுறுசுறுப்புடையவன் ஆகிறான். ஆனால் தொழில் புரிந்து சம்பாதிக்க அவனுக்குத் தெரியாது. சம்பாதிக்கத் தெரியாமல் வீண்செலவு செய்யும் கூட்டத்தை வளர்ப்பதே இக்கல்வியின் பயனாயிற்று. எத்தொழிலைக் கற்றாலும் ஏது திட்டத்தைக் கையாண்டாலும் நவீன இளைஞனை முன்னிட்டுப் பணம் செலவாய்க்கொண்டே இருக்கிறது.

## அமெரிக்காவின் முறை

சிறுவர்களும் சிறுமிகளும் தங்களுக்கே பயன்படுதற்பொருட்டும், குடும்பத்துக்குப் பயன்படுதற்பொருட்டும் அமெரிக்கர் கையாளும் முறையொன்று உண்டு. அது அவர்களுக்குக் கொடுக்கும் கைக்காசு சம்பந்தமானது. தங்கள் விருப்பப்படி செலவு செய்துகொள்ளுதற்குச் சிறுவர்களுக்கு அப்போதைக்கப்போது கைப்பணம் கொடுக்கும் வழக்கம் எல்லா நாடுகளிலும் உண்டு. ஆனால் அமெரிக்கர் அப்படிக் கைக்காசை சிறுவர்களுக்கு இலவசமாய்க் கொடுப்பதில்லை. பெற்றோரிடத்திருந்தும் அவர்கள் எதையும் இலவசமாகப் பெறலாகாது என்பது அவர்களுடைய கோட்பாடு. சிறுவர் வீட்டில் செய்யக்கூடிய சிறு அலுவல்கள் எத்தனையோ இருக்கின்றன. ஓய்வு நேரங்களில் அவ்வேலைகளைச் செய்யும்படி சிறுவர்களைப் பெற்றோர் ஏவுகின்றனர். வேலைக்கேற்ற சம்மானம், திறமைக்கேற்ற சம்மானம் என்று அவர்கள் வகுத்து வைத்துவிடுகின்றனர். கூலியாள் அல்லது வேலைக்காரனுக்குத் தருவதைவிடச் சற்று அதிகமாகவே

அவர்கள் தம் சொந்தச் செல்வர் செல்விகளுக்குச் சில்லரை வேலைகளுக்குச் சம்பளம் போட்டுக்கொடுக்கின்றனர். இது அதிசயமாக ஏதோ சில நாட்களில் செய்யப்படும் செயலன்று. முறையாக் எப்பொழுதுமே நிகழும் நிகழ்ச்சி யாகும். வேலையில் திறமையுண்டாகுமளவு சம்பளமும் அதிகரித்துக்கொண்டே போகும். இதனால் விளையும் நன்மைகள் சில உள. ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களே வீட்டு வேலைகளின் பல பகுதிகளைச் செய்து முடிப்பது நல்ல பழக்கமாகிறது. தினந்தோறும் வீடு கூட்டுகிற சிறுவன் தானே வீட்டுக்குள் குப்பை போடமாட்டான். வீட்டைச் சுத்தப்படுத்துகின்றவனுக்கே அதைச் சுத்தமாக வைத்திருப்பதன் அருமை தெரியும். வேலை செய்வதன் மூலம் வருகிற அனுபவம் நல்ல கல்வியாகிறது. தான் பெற்று வரும் செல்வம் தானே உழைத்துச் சம்பாதித்தது என்ற உணர்ச்சி மிக உயர்ந்தது. பணத்துக்காகத் தான் பெற்றோர்க்கோ அல்லது வேறு யார்க்கோ கடமைப்பட்ட வன் அல்லன் என்ற எண்ணம் ஒருவனை உயர்நிலைக்கு எடுக்கவல்லது. தானே சம்பாதித்துத்தான் உயிர்வாழ முடியும் என்ற நம்பிக்கை இளைஞன் ஒருவனுக்கு இயல் பாய் வந்து விடுகிறது. சம்பாதிப்பவனுக்கே பணத்தின் அருமை தெரியுமாதலால் அவன் அதை வீண்செலவு செய்ய மாட்டான்.

அமெரிக்காச் சிறுவன் ஒருவன் வளருகையிலேயே பணம் சம்பாதிக்கத் தெரிந்தவனாய் விடுகிறான். சூழ்நிலை அவனுக்கு அத்தகைய உதவிபுரிகிறது. பணம் தேடத் தெரியாதவன் ஆங்கு மனிதனாக மதிக்கப்படுவதில்லை. செல்வத்தைக்கொண்டே ஒருவனுடைய சிறப்பு அளவிடப் படுகிறது. மனிதனைச் சமுதாயத்துக்குப் பயன்படுத்து

தற்கு அவர்கள் திட்டம்போட்டு வைத்திருக்கின்றனர். அதற்கு மேல் ஒவ்வொரு மனிதனும் தனது முயற்சியிலேயே உயிர் வாழ்ந்து வரவேண்டும். அமெரிக்காவின் பயிற்சி முறை அதற்குப் பெரிதும் உதவுகிறது. ஆனால் பணம் சம்பாதிக்கும் யந்திரமாக மனிதன் மாறிவிடலாகாது. மனித னுடைய வசதியான வாழ்க்கைக்காகச் செல்வம் இருக்கிறது. மற்று எல்லாம் வல்ல தெய்வத்தின் ஸ்தானத்தைச் செல்வத் துக்குக் கொடுத்துவிடலாகாது. அப்படிச் செய்தால் அது லோகாயதத்தின் போக்காக வடிவெடுத்துவிடும். அந்நாட்டி லுள்ள இளைஞன் ஒருவன் முதுமையடைந்துள்ள தன் பெற் றோரைப் பேணவேண்டும் என்று உணர்வதில்லை. அவர் களை ஆதரிக்கத் தான் கடமைப்பட்டவன் அல்லன் என்று அவன் உணர்கிறான். தனக்குத்தானே பணம் சம்பாதித்துப் பழகியதன் விளைவாக அத்தகைய மனப்பான்மை அவ னுக்கு வந்து விடுகிறது. நம் நாட்டின் சீர்மைக்கு அது ஒவ் வாது. பணத்தைக்கொண்டு பெறமுடியாத பண்புகள் பல மனிதனிடத்திருக்கின்றன. அப்பண்புகளை வளர்ப்பது நல்ல கல்வித்திட்டமாகும்.

## வணக்கம்

மக்களுக்கிடையில் உள்ள மேலாம் இணக்கத்தை வணக்கம் விளக்குகிறது. வணங்குகின்ற ஒருவன் வணங் கப் பெறுபவனை மேலோன் ஆக்குகிறான். மற்றவனை மேலோன் ஆக்குவதால் தான் கீழோன் ஆய்விடுவதில்லை. கொடுங்கோன்மை செலுத்துதலிலும் கொடுங்கோன்மைக்கு அடிமைப்படுதலிலும் உயர்வு தாழ்வு உண்டாதற்கு இட முண்டு. அதனால் பொறாமையும் வெகுளியும் அதிகரிக்கும். பின்பு வணக்கமோ உள்ளன்பினின்று உதிப்பது. பிறர்க்குப் பெருமையை வழங்குபவன் தானே பெருமை யெய்துகிறான்.

ஏனென்றால் பெருமையும் சிறுமையும் பிறர்க்கு வழங்குமளவு அல்லது வழங்குதற்கு முயலுமளவு அந்நிலை மேலும் ஒருவனுக்கு வந்தமைகிறது என்பது விதி. வணங்கத் தெரிந்து கொள்ளுதல் வாழ்க்கையின் முதல் பாடமாகிறது.

தன்னிடம் திகழ்ந்து வந்த தெய்வத் தன்மையை முன்னிட்டு, ஐந்து வயது வரையில் தாய் தந்தையரால் வாத்ஸல்ய பாவனையுடன் வணங்கப்பெற்ற சிறுவன் இனித் தாய் தந்தையரை வணங்கக் கற்றுக்கொள்ளவேண்டும். ஏனென்றால் இளைஞனுக்கு அவர்களே முன்னறி தெய்வம் ஆகின்றனர். தன் சொரூபத்தைத் தானே பாராட்டுதல் எல்லார்க்கும் இயல்பாய் அமைந்துள்ளது. தாய் தந்தையரின் சொரூபமே புதிய வடிவெடுத்து வந்து புத்திரன் ஆகிறான். ஆகவே பிள்ளை ஒருவன் பெற்றோரைப் போற்றுதலில் புதுமையொன்றுமில்லை. தன் உயிர் வாழ்க்கைக்கு முற்றும் முதல் காரணமாயிருப்பவர்கள் பெற்றோரே. அவர்களைப் போற்றுபவன் உண்மையில் தன் உயிர் வாழ்க்கையைப் போற்றுகிறான்.

**मातृ देवो भव** = மாத்ரு தேவோ பவ;
**पितृ देवो भव** = பித்ரு தேவோ பவ;

'அன்னை உனக்குத் தெய்வம் ஆகுக. பிதா உனக்குத் தெய்வம் ஆகுக' என்பது ஆணை.

நாள்தோறும் காலையில் உள்ளன்புடன் சிறுவன் ஒருவன் தாயின் காலைத் தொட்டு வணங்குதல் வேண்டும். சிறுவனுக்குத் தந்தை யார் என்று தாய் காட்டித் தருகிறாள். தந்தையைத் தினந்தோறும் வணங்குதல் இரண்டாவது கடமையாகிறது. இங்ஙனம் ஐந்தாவது ஆண்டில் துவக்கிய வழிபாடு ஆயுள் முழுதும் தொடர்ந்து போகிறது. இளமை

யில் இருந்த இனிய இணக்கம் வணக்கத்தின் வாயிலாக இடர்படாதிருக்கிறது. பெற்றோரைப் போற்றும் பயிற்சியின் பயன் அதுவேயாம். அதே இளம் பருவத்தில் பெற்றோர் பிள்ளையை ஆசிரியரிடம் அறிமுகப்படுத்தி வைக்கின்றனர். பின்பு அது நெருங்கிய தொடர்வாக வடிவெடுக்கிறது. சிறுவனுடைய உடலைத் தோற்றுவித்து அதைப் பேணியவர் பெற்றோர். பிறகு அறிவைத் தூண்டி அதைப் பேணுபவர் ஆசிரியர். அவரிடம் மாணாக்கன் அன்பு வைக்குமளவு அவரை வணங்குமளவு அறிவு வளர்ச்சி விரிவடைகிறது. கல்வியை மதிக்கின்ற மாணாக்கன் கல்விக்கு உறைவிடமாகிய ஆசாரியரைப் போற்றுகிறான்.

**आचार्य देवो भव = ஆசார்ய தேவோ பவ;**

ஆசாரியர் உனக்குத் தெய்வம் ஆகுக என்னும் ஆதேசம் அவனுக்குப் பொருத்தமுடையதாகிறது. தீயோடு நெருங்கிய தொடர்வு வைக்கும் விறகுக்கட்டை தானே தீயாக மாறிவிடுகிறது. வணக்கத்தால் ஆசாரியரோடு இணக்கம் கொள்ளும் சிஷ்யன் அவருடைய அறிவைத் தனக்குச் சொந்தமாக்குகிறான். ஆக, ஆசாரியரை உள்ளன்புடன் வணங்குதலே கல்வியின் பயனாம்.

குரு மற்றொரு பேருண்மையைச் சீடனுக்குப் புகட்டுகிறார். உலகத்தில் உள்ள உயிர்கள் அனைத்துக்கும் அடிப்படையான தொடர்பு உண்டு. அதை அறிவது கல்வி. அப்படிக் கற்றபின்,

**अतिथि देवो भव = அதிதி தேவோ பவ;**

விருந்தினன் உனக்குத் தெய்வம் ஆகுக என்னும் ஆணை மாணவனுக்கு விதிக்கப்படுகிறது. ஏற்கனவே நன்கு தெரிந்திருப்பவர் விருந்தினர் ஆகார். வேற்றாராயிருப்பவரைச்

சொந்தமாக உபசரிப்பதே விருந்தோம்பல் எனப்படுகிறது. உயிர்கள் அனைத்துக்கும் வணக்கம் காட்டுவது மாணாக்கன் ஒருவனது குறிக்கோள் ஆகிறது. பெற்ற தாயை வணங்க அவன் முதலில் கற்கிறான். பிறகு தந்தையின் வணக்கமாக அது விரிவடைகிறது. குரு வணக்கம் அதற்கு அடுத்தபடி யில் வருகிறது. உற்றார் உறவினர் அனைவரிடத்திலும் அன்பும் மரியாதையும் காட்டுவது இம்மூவர் வணக்கத்தில் அடங்கிவிடுகிறது. பிறகு வேற்றாரையெல்லாம் உற்றாராகக் கருதி அவர்களிடத்துப் பணிவுடன் நடந்துகொள்ளுதல் நல்ல கல்வியின் விளைவு ஆகும்.

## பணிவிடை

தாய் ஒருத்தி அல்லும் பகலும் தன் மகவுக்குப் பணி விடை செய்கிறாள். அப்படிச் செய்வதில் அருவருப்போ ஆயாசமோ அவளுக்குத் தோன்றுவதில்லை. ஏனென்றால் அப்பணிவிடையனைத்தும் அன்பின் வெளித்தோற்றமாகும். தொண்டு புரியும் தகைமை சிறுவர்க்குண்டு. யாண்டும் தொண்டு புரிய அவர்கள் முந்துவார்களானால் அவர்கள் கற்கும் கல்வி பயன் அளிக்க ஆரம்பித்து விட்டது எனலாம். நாம் பாராட்டும் முக்கனிகள் பிஞ்சாயிருக்கும் பொழுதும், காயாயிருக்கும் பொழுதும், கனிந்திருக்கும் பொழுதும் எல்லாப் பருவங்களிலும் நன்கு பயன்படுகின்றன. சீரிய பயிற்சிபெறும் சிறுவன் சிறு வயதிலிருந்தே சமூகத்துக்குப் பயன்படுபவன் ஆகிறான். நாள்தோறும் சில நிமிஷ நேரம் தாய்க்குப் பணிவிடை செய்ய மைந்தன் முன்வரவேண் டும். பணிவிடை செய்யும்படி அவனைப் பழக்குதல் முதியோர் கடமையாகும். பெற்ற தாய்க்குக் குற்றேவல் புரிதல் கணக்கற்ற விதங்களில் நிறைவேறக்கூடும். அன் புடன் ஆதரிக்கும் அன்னைக்குத் தான் ஆட்பட்டவன் என்ப தைச் செயலில் நிரூபிப்பதில் ஆனந்தமுண்டு. தனக்குச்

செல்வன் மகிழ்வுடன் சேவை செய்வதைக் காணும் தாய் அவனைப்பெற்ற பொழுதினும் பெரிது உவப்பாள். கற்க ஆரம்பித்தவுடன் கல்வி தரும் பயன் அதுவேயாம். சேவை செய்யும் பாங்கு பின்பு படிப்படியாக விரிவடைய வேண்டும். சிறுவனுக்குச் சொந்தம் எனப்படுபவை அவனுடைய ஆக்கையும் ஆற்றலுமாம். அவனுடைய உடல் வாழ்க்கையே பிறருடைய பணிவிடைக்கிருக்கிறது என்பதை அவன் அறியுங்கால் பயன்படும் கல்வியை அவன் பெற்றவனாகிறான். சேவையில் ஈடுபடுமளவு அவனுடைய ஆற்றலும் வளர்ந்து கொண்டே போகிறது. தாய்க்கும் தந்தைக்கும் நல்ல வேலைக்காரன் ஆதல் ஆரம்பப்படிப்பு. ஆசிரியருக்கு உழைத்துப் பணிவிடை செய்பவன் அதிலும் ஒருபடி மேலே போகிறான். உலகுக்கு ஊழியன் ஆகிறவன் உயர்தரப் படிப்புப் பெற்றவன் ஆகிறான். பிறர்க்குப் பயன்படும்படி உழைக்கும் மாணாக்கன் இளமையில் பெற்ற இனிமையை இடர்ப்படாது காத்து வருகிறான். பிறர்க்குப் பணிவிடை செய்து பழகும் மாணாக்கனிடத்துப் பண்பும் ஓங்குகிறது.

## பெரும் பயன் நல்ல மனதில் உளது

விளையாடுவது போன்று தந்தையிடமிருந்து தொழிற் கல்வி கற்றகாலம் கடந்துவிட்டது. மீண்டும் அப்பழைய முறையை வருவிப்பதற்கான சூழ்நிலை இக்காலத்தில் இல்லை. பள்ளிக்கூடத்தில் தொழிலையும் படிப்பையும் இணைத்துப் புகட்டலாம். மாணாக்கன் அதன் மூலம் றதிமையை ஓரளவு பெறுகிறான். ஆனால் அதற்கு ஈடாகப் பொருளை ஏராளமாகச் செலவிடவேண்டும். பள்ளிக்கூடத்துப் படிப்பு ஏககாலத்தில் சம்பாத்தியமாகவும் கல்விப் பெருக்கமாகவும் இருக்கவேண்டும் என்பது பாராட்டத்தக்க லட்சியமாகிறது. ஆனால் அதை முற்றிலும் வெற்றிகரமாக நிறை

வேற்ற இயலாது. மேலும் ஜீவனோபாயத்தைப் பற்றிய பிரச்னையை மாணாக்கனுக்கு ஓயாது ஞாபகமூட்டுவது முறையன்று. இளம் வயதில் அத்தகைய எண்ணம் உதவாது. வாழ்க்கையே ஓர் ஓயாத விளையாட்டாக மாணாக்கனுக்குத் தோன்றவேண்டும். பின்பு அமெரிக்காவின் முறைப்படி பணத்தையே லட்சியமாகக் கொண்டு வாழ்ந்து வருவதும் தகாது. பணம் சம்பாதிப்பதற்கென்றே வாழ்ந்திருப்பவனிடத்து உயர்ந்த மனநிலை ஒன்றும் உருவெடுக்காது. மிகைப்பட்ட பணப்பற்று லோகாயதமாக வடிவெடுத்துவிடும். தொழிலின் வாயிலாக ஆற்றலைப்பெறுதற்கும் பணம் சம்பாதிப்பதற்கும் ஓரளவு இடங்கொடுக்கலாம். மனதைப் பண்படுத்துவதே கல்வியின் முக்கியமான நோக்கமாயிருக்க வேண்டும். வணக்கமும் பணிவிடையும் வடிவெடுத்தவனாக மாணாக்கன் ஆதல் முறை. தொழிலும் செல்வமும் நல்ல சமுதாயத்தை உண்டுபண்ணமாட்டா. உள்ளன்புடன் பிறர்க்குப் பணிவிடைசெய்யும் பாங்கே சீரிய சமுதாய அமைப்புக்கு உற்ற உபாயமாகும். பிறர்க்குப் பயன்படும்படி வாழ விரும்புபவனுக்கு ஏனைய சம்பத்துக்களும் ஆற்றல்களும் தாமே வந்தமைகின்றன. ஆக, மாணாக்கன் ஒருவனுக்கு இன்றியமையாதவைகளாயிருக்க வேண்டியவை வணக்கமும் பணிவிடையுமாம். அதற்கு அடுத்தபடியாக அவன் தொழிலிலும் பொருளீட்டத்திலும் மனதைச் செலுத்தலாம்.

## இராமன் உலகுக்குப் பயன்பட்ட விதம்

பிறந்தது முதல் இறக்கும் பரியந்தம் ஒவ்வொரு படித்தரத்திலும் மனிதன் உலகுக்கு நன்கு பயன்படுபவன் ஆகக்கூடும் என்பதற்கு அயோத்தி ராமன் நல்ல எடுத்துக்காட்டு ஆகிறான். ஐந்து வயது வரையில் பால தெய்வமாக அவன்

எல்லோராலும் பாராட்டப்பட்டான். அவனுடன் இணங்கி யவர்களுக்கு உலப்பில்லா இன்பம் ஊட்டியது அவனுடைய முதற்கொடையாகும். பெற்றோர்க்கும் மற்றைய பெரி யோர்க்கும் அவன் காட்டிய வணக்கம் என்றைக்கும் அவர் களுடைய உள்ளத்தைக் கவர்ந்தது. வணக்கத்தால் அவன் மற்றவர்களுக்கு உரியவன் ஆனான்; மற்றவர்களைத் தனக்கு உரியவர்கள் ஆக்கிக்கொண்டான்.

இராமனோடு வைத்த இணக்கத்தில் மற்றவர்கள் தங்களைப்பற்றி அடியோடு மறந்துவிட்டனர். யாண்டும் ராமனை மகிழ்விப்பதிலேயே அவர்கள் கண்ணும் கருத்து மாயிருந்தனர். அத்தனைக்கும் மூலகாரணம் ராமன் தன் னையே மற்றவர் தொண்டில் சமர்ப்பித்ததேயாகும்.

ஐந்து ஆண்டுகள் பூர்த்தியாகி, அவனுடைய வாழ்வு இங்ஙனம் அயோத்திக்குப் பயன்படும் தறுவாயிலிருந்த பொழுது அவனுடைய ஜீவிதத்தில் முக்கியதொரு மாறுதல் ஏற்படுகிறது. தம்முடைய யாக காரியத்துக்காக அவனைப் பயன்படுத்துதற்பொருட்டு விஸ்வாமித்திரர் அயோத்திக்கு வந்தார். அவரை வரவேற்ற தசரத மன்னர் அம்மஹரிஷி எதைக் கேட்டாலும் தருவதாக வாக்குக் கொடுத்தார். மஹ ரிஷியும் ராமன் ஒருவன்தான் தமக்கு வேண்டும் செல்வம் என்று கேட்டார். தம் கண் போன்ற கோமகனைத்தர அவருக்கு விருப்பம் இல்லையெனினும் கொடுத்த வாக்குப் படி அவனை அனுப்பிவைக்கக் கடமைப்பட்டிருந்தார். இராமனும் லக்ஷ்மணனும் விஸ்வாமித்திரர் ஆச்ரமத்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள். அவருடைய யாகத்தைப் பாதுகாக் கின்ற பொறுப்பு அவர்களுக்கு ஏற்பட்டது. நல்ல பயிற்சி பெறுதற்கும் அதுவே சந்தர்ப்பமாயிற்று. பொறுப்பை ஏற்க ஏற்கத் திறனும் விரைவில் முன்னேற்றமடைகிறது

என்பதற்கு ராமனும் தம்பி லக்ஷ்மணனும் செய்த செயலே சான்றாயிற்று. எதிர்காலத்தில் மிகப் பெரிய பொறுப்பை ஏற்றுக்கொள்ளுதற்கான பயிற்சி இச்சிறிய பொறுப்பினின்று அவர்களுக்கு உண்டாயிற்று.

மணம் புரிந்துகொள்ளுதல் தன் சுகபோக வாழ்க்கைக்காகவல்ல, சமூக நன்மையின் பொருட்டே என்பதை சீதா-ராம-விவாகம் நிரூபித்தது. பிறகு இளவரசு பட்டாபிஷேகம் பெற்று இன்புற்று வாழ்தற்கிருந்த தறுவாயில் அவன் காடு ஏகும்படியான நெருக்கடி நேர்ந்தது. மகிழ்ச்சியுடன் அவ் ஆணையை அவன் ஏற்றுக்கொண்டான். காட்டில் அவன் புரிந்த செயலெல்லாம் பிறர் நன்மையின் பொருட்டேயாம். தவவேடம் தாங்கி அவன் வாழ்ந்த வாழ்வு தர்மத்தை நிலைநாட்டுதற் பொருட்டேயாம். கிஷ்கிந்தையிலும் இலங்கையிலும் அவன் புரிந்த போர் மறத்தை அகற்றி அறத்தை நிலைநாட்டுதற் பொருட்டேயாம். அயோத்திக்குத் திரும்பி அரசாட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டதும் லோகஹிதத்தின் பொருட்டேயாம். பின்பு சீதாபிராட்டியை அவன் வனத்துக்கு அனுப்பியதும் உலகத்துக்குத் தான் அறநெறியின் ஓர் எடுத்துக்காட்டாக இருத்தல் பொருட்டேயாம். இங்ஙனம் பிறந்தது முதல் மறையும் பரியந்தம் ஒவ்வொரு படித்தரத்திலும் அவனது வாழ்வு ஓயாது உலகுக்குப் பயன்பட்டுக் கொண்டேயிருந்தது.

சிறுவர்களையும் சிறுமிகளையும் நன்கு பயிலுவிப்பதோடுகூட அவர்களை நானாவிதமான உபாயங்களில் சமூகம் நன்கு பயன்படுத்திக்கொள்ளலாம். பிறர்க்குப்பயன்படுவதன் மூலமே சிறுவர்கள் எல்லாவிதத்திலும் மேன்மையடைகின்றனர்.

# 5. குருகுலமுறையில் பள்ளிக்கூடம்

## இப்பொழுது உள்ள குறைபாடு

கல்வி கல்லாதவர்களால் இன்றைக்குச் சமுதாயத்துக்கு எந்தவிதமான இடையூறுமில்லை. எழுத்து வாசனையில்லாத இவர்களை வைத்துக்கொண்டு என் செய்வதென்று வருந்துவார் யாருமில்லை. தற்குறிகள் தங்களைக்குறித்தே துன்பப்படுகிறார்களா என்றால் அதுவுமில்லை. கல்லாதவர்களுடைய வாழ்வில் பிறர்க்குத் தலைச்சுமையாயிருந்த பகுதி மிகக் குறைவு. ஐந்து வயதுக்கு மேற்பட்டுப் பெற்றோர்க்கு ஏதேனும் ஒரு விதத்தில் உதவிபுரியக் கல்லாத சிறுவர்களும் சிறுமிகளும் முன்வந்துவிடுகின்றனர். இன்னும் சில ஆண்டுகளுக்குள் அவர்கள் தங்களைத் தாங்களே பராமரித்துக்கொள்ள முடியும். பிறகு குடும்ப வாழ்வு என்னும் பொறுப்பையும் அவர்கள் ஏற்றுக்கொள்கின்றனர். உழைப்பும் தன்னம்பிக்கையும் அவர்களுடைய பிறப்பு உரிமைகளாக அமைந்திருக்கின்றன. திருப்தியும் சாந்தமும் ஓரளவுக்கு அவர்கள் முகத்தில் தாண்டவமாடுகின்றன. தம்மால் இயன்ற உதவியைப் பிறர்க்கும் செய்கின்றனர். வீண்காலம் போக்குதல் அவர்களிடத்தில் இல்லை. நல்ல மனமுடையவர்கள் என்றே அவர்களைப் பகரலாம்.

இதற்கெல்லாம் நேர்மாறானவர்கள் நவீனக் கல்வி கற்றவர்கள். பொருளாதாரத் துறையில் அவர்கள் நெடுநாளைக்குப்பெற்றோர்க்குத் தலைச்சுமையாகின்றனர். மக்கள் கல்வியைக் குறித்துக் கடன்படும் பெற்றோர் பலர் உண்டு. கற்றவர் ஓர் ஆயிரம்பேர், கல்லாதவர் ஓர் ஆயிரம்பேர் எடுத்துக்கொண்டு ஜீவித வரவு செலவு கணக்குப் பார்த்தால்

நாட்டின் செல்வத்தை வளர்த்தவர் யார்; நாட்டின் செல்வத்தைப் பறித்து உண்டு உயிர்வாழ்ந்தவர் யார் என்னும் உண்மை புலப்படும். **Making money, grabbing money** என்னும் இரண்டு கோட்பாடுகள் உண்டு. செல்வத்தை ஆக்குதல் ஒன்று, செல்வத்தைக் கறந்தெடுப்பது மற்றொன்று. கற்றவர்களுள் பலர் செல்வத்தைக் கறக்கக் கற்றுக்கொள்கின்றனர். செல்வத்தை உண்டுபண்ண அவர்களில் பலர்க்குத் தெரியாது. நாட்டுக்கு அவ்வளவுதூரம் அது நஷ்டமாகின்றது. ஒட்டுண்ணிகளாயிருந்து அவர்கள் உயிர் வாழ்கின்றனர். பொருளை உண்டுபண்ணும் திறன் அவர்களுக்கில்லை.

பெருமித வாழ்வு, வேலையில்லாத் திண்டாட்டம், அதிருப்தி, அசாந்தி ஆகிய குறைகளைக் கற்றவர்களுக் கிடையில் வேண்டியவாறு காணலாம். அவர்களுக்குத் தன்னம்பிக்கை கிடையாது. உடலைக்கொண்டு உழைக்க அவர்கள் மறுக்கின்றனர். பிறர்க்குப் பணிவிடைசெய்ய அவர்கள் முன்வருவதில்லை. அந்தஸ்து வாய்ந்த உத்தியோகம் கிடைக்கும் வரையில் அவர்கள் வீண்காலம் போக்குவார்கள். பிறரால் சம்பளம் கொடுத்து ஆதரிக்கப்படுவதையே அவர்கள் உத்தியோகம் என்று எண்ணுகிறார்கள். அரசாங்கமும், வர்த்தக ஸ்தாபனங்களும், யந்திர தொழிற்சாலைகளும் அவர்களுக்கு வேலைகொடுக்க இயலாது என்று மறுத்துவிட்டால் அக்கல்விமான்கள் திக்கற்றவர்கள் ஆகிவிடுகிறார்கள். வாழ்நாளை யெல்லாம் வீணே கழிக்கின்ற பரிதாபகரமான நிலைக்கு அவர்கள் வந்துவிடுகிறார்கள். அதாவது நவீனக்கல்வி கற்றவர்களது வாழ்வு தங்கள் சுவாதீனத்தில் இல்லை. பிறர்க்கு என்றைக்கும் அவர்கள் அடிமைப்பட்டவர்கள் ஆய்விடுகிறார்கள்.

பொருளையும் ஆயுள் காலத்தையும் விரயம் பண்ணு வதைவிடப் பெரிய நஷ்டம் மற்றொன்று உண்டு. மனத்த கத்து மாசுபடிந்து கீழ்மையடைவதற்கு நிகரான கேடு வேறு ஒன்றுமில்லை. மனதில் உள்ள மாசை நீக்குதல் கல்வியின் முதற்கடமை. அதற்கு மாறாக மனதில் அதிகமான அழுக்கை நவீனக் கல்வி உண்டுபண்ணுகிறது. தூய மனமுடையவன் தனது வாழ்வு உலகுக்கு நன்கு பயன்பட வேண்டுமென்று எண்ணுகிறான். அற்ப மனமுடையவன் தனது சுகஜீவ னத்துக்கு உலகம் வேண்டியவாறு வசதியளிக்கவேண்டு மென்று எதிர்பார்க்கிறான். இப்படி சுயநலப்பற்று ஓங்கு வது கீழ்மக்களது பாங்கு ஆகும். அதிகமான சம்பளம், குறைந்த உழைப்பு, பொறுப்பில்லாத வேலை — இதுவே நவீனக் கல்விமானது குறிக்கோள் ஆகும்.

முதியோர்க்கும் மேலோர்க்கும் மரியாதை காட்டும் தன்மை கற்றவர்கள் மனத்தினின்று மறைந்துபோய்க் கொண்டிருக்கிறது. கல்வியில் மேல் வகுப்புக்குப் போகப் போக குருபக்தி அறவே அகன்றுவிடுகிறது. மாணவர் கையில் மொத்துண்டு ஆசிரியர் அவதிப்படும் கேடுகாலம் இந்நாட்டுக்குள் வந்துவிட்டது. எழுத்து அறிவிப்பவரை இறைவனாகக் காணும் காலம் தட்டழிந்து போய்விட்டது. இளைஞர் பெற்றோரை மனப்பூர்வமாகப் போற்றுவதில்லை. முணுமுணுத்த மரியாதை ஏதோ சிறிது அவர்களுக்கு உரிய தாகிறது. மேலோரை வணங்க மாணவர்களுக்குத் தெரி யாது. மனிதனை மனிதன் எதற்காக வணங்குவது என்ற ஆணவம் ஒன்று தலையெடுத்துக்கொண்டே போகிறது. சுருங்கச் சொல்லுமிடத்துக் கல்வியைப் பெறவேண்டிய முறையானது, பண்டம் மாற்றுதலைவிடத் தரத்தில் கீழ் நிலைக்குப் போய்விட்டது.

## பிணிக்கு ஏற்ற மருந்து

நாடு ஒன்றை மதிப்பிடும் பொழுது நாட்டிலுள்ள மக்களைக்கொண்டே மதிப்பிடுகிறோம். கீழோர் நிறைந்த நாடு புல்லிய நாடு. மேலோர் நிறைந்த நாடு பொன் நாடு. பண்டு பல காலங்களில் பண்பாடே வடிவெடுத்திருந்த நமது நாடு இப்பொழுது படிப்படியாகக் கீழ்நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது. பள்ளிக்கூடத்துக்குப் போகும் சிறார் எண்ணிக்கை ஆண்டுதோறும் அதிகரிக்கிறது. எத்தனை பள்ளிக்கூடங்களைத் திறந்து வைத்தாலும் புதிதாகச் சேருகிற மாணாக்கர்கள் எல்லார்க்கும் ஆங்கு இடம் கிடைப்பதில்லை. பள்ளிக்கூடத்துக்குப் போகின்றவர்களுடைய எண்ணிக்கை அதிகரிக்கிறது என்பதன் பொருள் புல்லிய மனப்பான்மை பெருகுகிறது என்று ஆகிறது. தொத்து நோய் பரவுவது போன்றது நவீனக் கல்வி. இதன் வேகம் வலுத்தால் சமுதாயம் சீர்கெட்டுப்போம். தட்டழிந்து போவதல்லாது அதற்கு வேறு கதியில்லை. அத்தகைய ஆபத்துக்கு இடம் கொடுத்துவிடலாகாது. அதை அணை போட்டுத் தடுக்கவேண்டும். பொருள் செலவு எவ்வளவு ஆனாலும் ஆகட்டும். கடன்பட்டும் நோயைக் களைவது நோய்வாய்ப்பட்டவர் கடமையாகும். இப்பிணிக்கு மருந்து இன்னதென்று தெரிந்துகொள்பவர் அதைப் போக்குதலிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கவேண்டும்.

எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும் என்பது முதுமொழி. அது முற்றிலும் மெய். ஆனால் உடல் படைத்துள்ள எல்லார்க்கும் அது மெய்யாகாது. நல்வாழ்விற்குரிய திருமேனி படைத்திருப்பவர்க்கு அது மெய். காமநோய் படைத்திருப்பவர்க்குக் கண் தீங்கு செய்யும். கொலை புரிந்து களவாட எண்ணியிருப்பவனுக்குக் கண் கொடிய

கருவியாகும். அத்தகைய கயவர்க்குக் கண்ணில்லாதிருப்பது நலம். நவீன மனிதனிடத்தும் பல கீழான பான்மைகள் பரவி வருகின்றன. அவைகளுள் முக்கியமானவற்றைக் கணக்கெடுக்கவேண்டும். அடக்கமின்மை, ஆணவம், வணங்காமை, சிறுநெறி செல்லுதல், சோம்பல், உழைப்பின்மை, பொறுப்பின்மை, குற்றேவல் செய்யாமை, சுயநன்மையில் ஊறிக்கிடந்து பொதுநன்மையைக் கருத்தில் வாங்கிக் கொள்ளாமை, சமுதாய உணர்ச்சியின்மை, கட்டுப்பாடான வாழ்க்கை வாழாமை—இவை போன்ற கேடுகளில் உழன்று கிடப்பவர்க்கு ஏட்டுக் கல்வியானது மேலும் அதிகமான கேட்டை உண்டுபண்ணும்.

காமநோய் பிடித்திருப்பவனுக்குக் கண்ணைக் கெடுத்து விடவேண்டும் என்பதல்ல கோட்பாடு. அவனுடைய காம நோயைப் போக்கவேண்டும்; நல்ல கண்ணையும் அவனுக்கு நல்கவேண்டும். இப்பொழுது படித்துக் கெட்டுப் போகிறவர்களுக்குப் படிப்பை நிறுத்திவிடவேண்டும் என்பதல்ல நமது வேலைத் திட்டம். அவர்களை நல்ல மனிதர்களாக்கும் கல்வியைக் கொடுக்கவேண்டும். வெறுமனே எழுதவும் படிக்கவும் கணக்குப் போடவும் கற்றுக்கொண்டால் அது கல்வியாகாது. நல்வாழ்வு வாழக் கற்றுக்கொள்ளவேண்டும். பெரியோரை வணங்குதல் வேண்டும். உழைத்துப்பாடு படுவது முற்றிலும் அவசியம். சமுதாயத்துக்கு நல்ல தொண்டன் ஆக மனிதன் கடமைப்பட்டிருக்கிறான். ஒழுக்கத்தில் ஓங்குவதே மேலான கல்வி. இத்தனை விதமான பண்புகளைப் பெறுவது முதற் கடமை. எழுதவும் படிக்கவும் தெரிந்துகொள்ளுதல் அதற்கு அடுத்தபடியில் வருகிறது.

சீரான வாழ்க்கை வாழத்தெரியாத நோய் இப்பொழுது நம் நாட்டில் பரவி வருகிறது. படிப்பில் மேலே போகுமளவு

ஒருவன் முடவன் போன்று ஆய்விடுகிறான். உயிர் வாழ்க்கையைப்பற்றிய பிரச்னையும் அவனுக்கு மிகப் பெரியதாய்விடுகிறது. சமுதாயத்துக்குத் தன் ஜீவிதம் எப்படிப் பயன்படப் போகிறது என்ற எண்ணம் அவனுக்குச் சிறிதளவும் இல்லை. சமுதாயத்துடன் கூடி வாழவும் அவன் இன்னும் கற்றுக்கொள்ளவில்லை. ஒழுங்குப்பாடான நித்திய வாழ்க்கையில் நவீன இளைஞனுக்குச் சிறிதும் பயிற்சி ஏற்படுகிறதில்லை. தேசீயப் பண்பாடு எதைப்பற்றிய உணர்ச்சியும் அவனுக்குக் கிடையாது. தக்க முயற்சியெடுத்துக்கொண்டு சமுதாயத்தையே மேலான தரமுடையதாக மாற்றியமைப்பது புதிய கல்வித் திட்டமாகும்.

## இடம்

படிப்புக்கு ஏற்ற இடங்களாகப் பட்டணங்கள் அமைந்திருந்தது இடைக்காலத்து ஏற்பாடுகளாயின. இன்றைக்கோ பட்டணங்கள் பிள்ளைகளுக்குப் பொருந்தாத இடங்களாய்விட்டன. அவர்களுடைய மனதைக் கலைத்துக் கெடுப்பதற்கான பிரதிகூலமான சூழ்நிலைகளைப் பட்டணங்களில் அதிகமாகக் காணலாம். செயற்கை வாழ்வில் நலம் குறைந்தும் கேடு அதிகரித்தும் இருக்கின்றன. இனி நம்நாடு நாடுவது இயற்கையோடு இயைந்த நல்வாழ்வேயாம். அதற்கேற்ற இடங்களில் பள்ளிக்கூடங்கள் அமையவேண்டும். மரம், செடி, கொடிகள், ஆடு மாடுகள், பயிர் செய்யும் நிலம் ஆகியவைகளோடு சிறுவர்களுக்கு முதலில் பழக்கம் ஏற்படுவது முற்றிலும் அவசியம்.

மேலான இயல்புகளோடு கூடிய நல்லதொரு குருகுல முறைப்பள்ளிக்கூடத்துக்கு வசதியான இடம் நாட்டுப் புறங்களில் அகப்படும். அவை நகரங்களில் அகப்படமாட்டா. ஊருக்குப் பக்கத்தில் நல்லதொரு கழனி. அதன் விஸ்தீர

ணம் எவ்வளவு என்பது அடுத்த கேள்வி. ஆங்குப் படிக்கும் சிறுவர் அனைவர்க்கும் ஒரு வேளை உணவு அப்பூமியிலிருந்து கிடைப்பது முற்றிலும் அவசியம். அதைக்கொண்டு நிலத்தின் விஸ்தீரணத்தை நிர்ணயித்துவிடலாம். கிராமத்துப் பணக்காரர் அதைப் பள்ளிக்கூடத்துக்கு மானியமாக விடவேண்டும். பண்டைக்காலத்துப் பெரியோர்கள் கோயிலுக்கு மானியம்விட்டது போன்று இக்காலத்துப் பெரியோர்கள் பள்ளிக்கூடத்துக்கு நிலம் மானியமாக விடுவதற்கு முன் வருவார்களாக. தேவையான இடங்களில் அரசாங்கமும் மானியமாக நிலம் அமைத்துக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறது. இந்த நிலத்தின் அபிவிருத்தியின் பொருட்டுக் கிராமத்துப் பொதுமக்கள் சிலர் உழைக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

நீர்வளம் பொருந்திய நிலத்துக்குப் பக்கத்தில் பள்ளிக்கூடத்துக் கட்டிடம் அமைதல் வேண்டும். காற்றும் வெளிச்சமும் உடையது அவ்வீடு. மாளிகை போன்ற விலையுயர்ந்த கட்டிடம் தேவையில்லை. இந்தியாவின் பொருளாதாரநிலை அதற்கு இடம் கொடாது. கீழ்த்தரமான கூரைக் கட்டிடமோ திரும்பத் திரும்பப் பழுது பார்ப்பதில் பணச்செலவை உண்டுபண்ணிக்கொண்டே இருக்கும். பழுதுபடாத உறுதியான கட்டிடம் அமைப்பது அவசியம். நாளடைவில் அத்தகைய கட்டிடமே வீண்செலவுக்கு ஏதுவாகாத கட்டிடம் என்பது புலப்படும். ஆசிரியர்கள் எல்லோரும் குடும்பங்களுடன் குடியிருப்பதற்கான வீட்டு வசதியும்ஆங்கு இருக்க வேண்டும். மாணாக்கர்களில் பலர் மாறிமாறி இரவும் பகலும் வாசம் செய்வதற்கான இடவசதியும் ஆங்கு அமைதல் தேவை. விளையாட்டுக்கு ஏற்ற மேடையும் பக்கத்திலேயே அமைந்திருப்பது முற்றிலும் அவசியமாகிறது.

## பொருள்

இப்பொழுது வழக்கத்தில் இருக்கிற பிரகாரம் வகுப்புக்கு இவ்வளவு சம்பளம் என்னும் வியாபாரத்திட்டம் உதவாது. ஆரம்பக்கல்வி இலவசமானது என்னும் கொள்கை புதிய வடிவம் எடுத்துவிடவேண்டும். பூஸ்திதி, அதில் வரும் விளைவு, ரொக்கமாகவும் தானியங்களாகவும் ஊரார் கொடுக்கும் பொருள்கள், அரசாங்கத்தின் கொடை இவை யாவும் சேர்ந்து பள்ளிக்கூடத்தின் வருமானம் ஆகின்றது. பிள்ளைகளில் சிலர் ஒரு நாளைக்கு ஒருவேளை அல்லது இரண்டு வேளை பள்ளிக்கூடத்திலேயே சாப்பிடுவார்கள். வேறு சிலர் இரண்டு நாளைக்கு ஒரு தடவை ஆங்கு உணவு ஏற்பார்கள். ஆக, சிறுவர்கள் பள்ளிக்கூடத்தில் குருவிடமிருந்து உணவு ஏற்பது முக்கியமானதொரு பாடமாகும். பெரிய பட்டணங்களில் வாரத்துக்கு ஒரு தடவையாவது பள்ளிக்கூடத்தில் பொது உணவு வழங்கவேண்டும். குரு சிஷ்ய இணக்கத்தை வளர்ப்பதற்கு இது துணைபுரிகிறது. நல்ல ஆசாரம் உடையவராக குரு இருக்கவேண்டும். பள்ளிக்கூடத்துப் போஜனசாலையில் தூய உணவே அங்கீகரிக்கப்படுவதாகும். ஜாதி மத வேற்றுமை பள்ளிப் பிள்ளைகளுக்கிடையில் இருக்கலாகாது. உணவு விடுதி அவர்களுக்கு நல்ல பயிற்சியைக் கொடுக்கும். தேசீய உணர்ச்சியை வளர்ப்பதற்கு உணவுச்சாலை சிறந்த இடமாகும்.

பெற்றோர்கள் பிள்ளைகளுக்குச் சாப்பாடு வீட்டில் போடுதற்குப் பதிலாகப் பள்ளிக்கூடத்தின் மூலம் போடுகிறார்கள். ஆதலால் பொருள் செலவு அதிகம் கிடையாது. சிறு பிள்ளைகள் வயிறு காய்ந்து பள்ளிக்கூடத்துக்கு வருகிறார்கள். வேறு சிலர் மிகைப்பட உண்டுவிட்டு வருகிறார்கள். புதிய கல்வி முறையில் கிட்டத்தட்ட எல்லாச்

சிறுவர்க்கும் ஒரே விதமான சத்துடைய உணவு கிடைக்கிறது. நாட்டுக்கு அது நல்ல ஊதியமாகும். பள்ளிக்கூடத்துக்கு உணவுப் பொருள்களை அனுப்புவது தேவாராதனைக்குச் சமானமானதென்று பொதுமக்கள் உணர்வார்களாக. பழைய காலத்து அன்னச்சத்திரங்கள் இனித் தேவையில்லை. அவைகளுக்குப் பதிலாகப் பள்ளிக்கூடங்கள் ஓரளவில் போஜன சாலைகளாகின்றன. ஊரார்கூடி ஊர்ப்பிள்ளைகளுக்கே பொது உணவு படைக்கிறார்கள். நாட்டின் நல்ல வளர்ச்சிக்கும் மனவுறுதிக்கும் இந்த ஏற்பாடு தேவையாயிருக்கிறது.

ஆசிரியர்களும் அவர்களுடைய மனைவிமார்களும் இக்குடும்பத்தை நிர்வகிப்பார்கள். ஆதலால் தாய் தந்தையர் மனப்பான்மை அவர்களுக்கு இயல்பாக வந்துவிடும். தங்கள் பண்டகசாலைக்குத் தானியங்களும் ஏனைய உணவுப் பொருள்களும் பள்ளிக்கூடத்து நிலங்களினின்றும் பெற்றோர்களிடமிருந்தும் வந்துகொண்டேயிருக்கும். பிள்ளைகளுக்கு உணவு அளிக்கும் வாய்ப்பு ஆசிரியர்களுடையது. ஆகவே தரித்திர மனப்பான்மை ஆசிரியர் உள்ளத்தினின்று பறந்தோடிவிடும். வள்ளல் ஒருவருடைய பரந்த உணர்ச்சி தலையெடுக்கும். எல்லார்க்கும் பொதுவான போஜன சாலை ஏற்படுத்துதற்குப் பள்ளிக்கூடம் ஒன்றே பொருந்திய இடமாகும். எல்லாரும் ஒன்று சேர்ந்து அதை நிர்வகிக்கின்றனர்; எல்லாரும் ஒன்று சேர்ந்து உண்டி அருந்துகின்றனர். பொருளை விரயமாக்குதற்கோ முறை தவறிக் கையாளுதற்கோ ஆங்கு இடமில்லை.

## ஏவல்

தங்கள் பிள்ளைகளின் மேலாம் வளர்ச்சியை முன்னிட்டு ஊரார் எல்லாரும் பள்ளிக்கூடத்தின் பொருட்டுச் சிறிது

உழைக்க ஆயத்தமாயிருப்பார்கள். அதற்குரிய நிலத்தை உழுது திருத்தவும், அதில் விதைக்கவும் எப்பொழுதுமே ஊராரிடமிருந்து உதவி கிடைக்கும். பொது ஸ்தாபனம் ஒன்றுக்கு இடையூறு செய்யாதிருப்பது நல்ல பயிற்சி. அதற்கு உதவிபுரிவது அதிலும் மேலானது. ஊக்கத்துடன் நடாத்தப்பெறும் பள்ளிக்கூடத்துக்கு விதவிதமான அலுவல் களை நிறைவேற்றுதற்கு ஆள் உதவி கிடைப்பது முற்றிலும் அவசியமானது.

மற்ற ஏவல்களையெல்லாம் விடச் சிறந்தது நல்லாசிரியர் என்னும் ஏவல். ஆசிரியரின் பாங்கு எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியதாகும் பள்ளியின் பண்பு. எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும் இப்பேருண்மை நிரூபிக்கப்பெறுகிறது. குருகுலப் பள்ளிக்கூடம் ஒன்றை ஒழுங்காக நடாத்துதற்கு ஒருவர் கல்விக் களஞ்சியம் ஆகவேண்டிய அவசியம் இல்லை. பின்பு இப்பொழுது அரசாங்கம் அளித்துவரும் ஆசிரியர் பயிற்சி போதாது. ஏட்டுக்கல்வி ஒன்றை மட்டும் குறிக்கோளாக வைத்துக் கொண்டால் அது போதுமானது. வாழ்க்கையைப்பற்றிய கல்வியை வழங்குதல் என்றால், அதை வழங்குகின்ற மனிதன் நல்வாழ்வே வடிவெடுத்திருக்கவேண்டும். ஊக்கம், உழைப்பு, பிள்ளைகளிடத்து உள்ளன்பு, எளிய வாழ்வில் திருப்தி ஆகிய இந்நான்கும் உடைய ஆசிரியர் இரண்டு அல்லது மூன்று பேர் சேர்ந்து ஓர் அரிய கல்வி ஸ்தாபனத்தை நன்கு அமைத்துவிடமுடியும்.

பழைய காலத்துப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயரிடம் பெரிய மதிப்பைப் பொதுமக்கள் காட்டி வந்தனர். உபாத்தியாயர்களின் சீரிய வாழ்வும் ஓரம் சாராத உழைப்புமே அதற்குக் காரணமாயிற்று. அந்தப் பெருமை திரும்பவும்

தழைத்து ஓங்கவேண்டும். கிராமப் பிணக்குகளில் ஆசிரியர்கள் கலந்துகொள்ளலாகாது. எந்தப் பெரியவர் வீட்டுக்கும் பொருள் தேடி ஆசிரியர் போகலாகாது. அவர் அளிக்கும் நல்ல பயிற்சியை நாடிப் பிள்ளைகளைப் பெற்றோர் அவரிடம் அழைத்து வரவேண்டும். எல்லாக் குழந்தைகளையும் சமனாகப் பாராட்டி அவர்களுக்குப் பயிற்சியளிக்கும் ஆசிரியருக்கு மதிப்பு தானாக வந்துவிடுகிறது. மதிப்பைத் தொடர்ந்து ஏனைய உதவிகளும் வலிய வந்து சேரும். ஆக, நல்வாழ்வு ஒன்றே ஆசிரியருக்கு மூலபலம் ஆகும்.

**நித்திய வாழ்க்கைத்திட்டம்**

பிள்ளைகள் எல்லாரும் பெரிதும் பள்ளிக்கூடத்திலேயே வசிப்பார்கள். உண்கின்ற வேளைகளில் மட்டும் சிலர் சில வேளைகளில் பெற்றோர் இருக்கும் வீட்டுக்குச் சென்று வருவார்கள். அதிகாலையில் துயில் எழுந்திருத்தல், உடற்பயிற்சி, நீராடுதல், இறைவணக்கம் முதலியன முறையாக நடைபெறும். படிப்பும் உழைப்பும் பின்பு மாறி மாறி வரும். ஆயாசத்துக்கோ, சோம்பலுக்கோ, பதைபதைப்புக்கோ பள்ளியில் இடமில்லை. சில பாடங்களை ஓதிக்கொண்டே உழைத்தல், அல்லது உழைத்துக்கொண்டே ஓதுதல் முற்றிலும் சாத்தியமாகும். இரவில் படுக்கப்போகும் வரையில் எல்லாம் ஒரே பள்ளிக்கூடத்து அலுவலாக இருக்கும். ஆசிரியர்களுக்கு ஓய்வு எங்கே என்ற கேள்வி எழலாம். குடும்பத்தை நடாத்துகின்ற தாய் தந்தையர்க்கு ஓய்வு எங்கே என்ற எதிர்க் கேள்வி அதற்கு விடைகொடுக்கும். உண்மையில் உழைப்பும் ஓய்வும் சேர்ந்தே அமைந்திருக்கும். வேலைத்திட்டத்தில் ஓய்வும் தக்கதொரு இடம் பெறும். பள்ளிக்கூடத்தில் இருக்கும் நேரம், வீட்டில் இருக்கும் நேரம், விளையாடும் நேரம், ஓய்வு எடுத்துக்

கொள்ளும் நேரம் என்ற பிரிவினைகளை யெல்லாம் ஒரே வாழ்வு நேரம் என்று சமரசப்படுத்துவதே குருகுலக் கல்வித் திட்டமாகும்.

மேற்பார்வையிடும் அதிகாரிகளைத் திருப்திப்படுத்து தற்காகக் குறித்த நேரத்தில் பள்ளிக்கூடத்துக்கு வருவது, பாடம் நடாத்துவதாக ஒப்பேற்றுதல், அதைப்பற்றிக் குறிப்பு எழுதிவைத்தல் ஆகிய வெளிப்பகட்டான வாழ்க்கை முறை போய்விடவேண்டும். விதவிதமான வாழ்க்கைப் பயிற்சியில் ஒவ்வொரு கணப்பொழுதையும் நன்கு பயன் படுத்த வேண்டும் என்ற ஊக்கம் உதயமாகும் காலமே நாட் டுக்கு நலன் தரும் காலமாகும். சிறப்பாகக் கவனிக்கவேண் டிய ஏதேனும் அலுவலை முன்னிட்டு அன்றாட கால அட்ட வணையை ஒருவாறு ஒத்திவைக்கும் சுதந்திரம் ஆசிரியருக்கு உரியதாகும். பிறரிடம் அதற்கு உத்தரவு கேட்பது உதவாது.

விழாக்களையோ பண்டிகைகளையோ முன்னிட்டு இக்காலத்தில் பள்ளிக்கூடங்களுக்கு விடுமுறை கொடுப்ப துண்டு. அத்தகைய நாட்களெல்லாம் பெரிதும் வீணே கழித்த நாட்களாகப் போய்விடுகின்றன. தேசியப் பேரியல் போடு கூடிய பண்டிகைகளையும் விழாக்களையும் பள்ளிக் கூடங்களிலேயே நன்கு கொண்டாடவேண்டும். பண்டிகை கள் கொண்டாடத் தெரிந்துகொள்ளுதலும் நல்ல பயிற்சி யாகும். சீரிய உணர்ச்சிகள் வளர்தற்கு அவை பெரிதும் பயன்படுகின்றன.

## சிறுமிகளுக்கு ஏற்பாடு

எழுதப்படிக்கத் தெரிந்துகொள்வது ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவானது. ஆனால் வாழ்க்கைப் பயிற்

சியோ ஆண்களுக்கு வேறு, பெண்களுக்கு வேறு. ஆகவே குருகுலப் பள்ளிக்கூடங்களில் எழுதப்படிக்கக் கற்றுக் கொள்ளுதற்கு மட்டும் சிறுமிகள் பள்ளிக்கூடத்திற்கு வரலாம். நாள்தோறும் சுமார் இரண்டுமணி நேரத்திற்குமேல் அவர்கள் பள்ளிக்கூடத்தில் இருப்பது அவசியமல்ல. வீட்டு அலுவல்களை அவர்கள் தாயினிடத்திருந்து தெரிந்துகொள்வார்கள். நாள்தோறும் தாய்க்குத் துணைபுரிதலும் கல்வியாகும். இப்பொழுது உள்ள ஏற்பாட்டில் காலமெல்லாம் ஏட்டுக்கல்விக்கே ஒப்படைக்கப்படுகிறது. அதைத் தவிர வேறு ஒன்றும் ஒரு சிறுமிக்குத் தெரியாது. ஆனால் இனி அமையவேண்டிய புதுமுறையில் எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ளுதலும் வாழ்க்கைப் பயிற்சியில் ஓரளவு இடம் பெறுகிறது. பெண் ஒருத்திக்கு வாழ்வு என்னும் வாய்ப்பு பயன்படுகிற பெருவாழ்வாக மேலோங்கிக்கொண்டு போகிறது. அதற்கேற்ற கருவியாகவே எண்ணும் எழுத்தும் அவளுக்கு வந்தமைகின்றன. சிறுமிகளில் பெரும்பான்மையோர்க்கு ஆரம்பப்படிப்புப் போதுமானது. உயர்நிலைப்பள்ளிக்கு ஒரு சிலர் போவார்கள். அப்பொழுது அவர்களுக்குத் தனிப் பள்ளிக்கூடம் அமையும். பதினோரு வயதுக்கு மேற்பட்ட சிறுமிகள் ஆண்களுடன் சேர்ந்திருந்து கல்வி கற்கலாகாது.

## விடுமுறை நாட்கள்

இப்பொழுது வழக்கத்தில் இருந்துவரும் விடுமுறை நாட்கள் வாழ் நாட்கள் ஆகா. வீண் நாட்களாக அவைகள் விரயம் செய்யப்படுகின்றன. மனோமுயற்சியுடையவர்களுக்கு ஓய்வு தேவையென்பது உண்மை. ஆனால் மிகைபட்ட ஓய்வு கற்றதை மறப்பதற்கு ஏதுவாகும். மிகைபட உண்பவன் அஜீரணத்தால் வருந்துவான். குறைபட உண்பவன் வலிவை இழப்பான். இவ்வுண்மை அறிவுத்துறைக்

கும் பொருந்துகிறது. ஓயாது வாசித்துக்கொண்டே இருப்பவனுக்கு அறிவு மழுங்கும். வாசிப்புக்கு இடையில் இடையீடு அதிகரித்தால் கற்றதை மறந்துவிடும்படி நேரிடும். அளவுபடுத்தி உணவு உண்பது போன்று அளவுபடுத்திக் கற்றுக்கொண்டு இருப்பதும் அவசியமாகிறது.

பள்ளிக்கூடத்தோடு தொடர்வில்லாத விதத்தில் நீண்ட விடுமுறை வந்து அமைவது நம் நாட்டுக்குப் பொருந்தாது. எல்லாப் பள்ளிக்கூடங்களையும் ஒரே காலத்தில் விடுமுறைக்காக மூடிவைப்பதிலும் பொருள் இல்லை. அந்தந்த ஊரினுடைய நிலைமையை அனுசரித்து ஓய்வுகாலம் வெவ்வேறு மாசங்களில் அமைவது பொருத்தமானது. பொது நன்மைக்காக உழைக்கும் காலமாக ஓய்வுகாலம் அமைய வேண்டும். ஜெர்மனி, ரஷ்யா, ஜப்பான் போன்ற நாடுகளில் நாற்று நடுதல், அறுவடை செய்தல் ஆகிய காலங்களில் பள்ளிக்கூடங்களை மூடிவிடுகின்றனர். சிறார் அனைவரும் அப்பொழுது கழனிகளில் உழைக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். உழைப்புக்கு மதிப்புக் கொடுக்கின்ற நாடுகளெல்லாம் முன்னேற்றமடைவது திண்ணம். உழைப்பது இழிவு என்னும் பான்மை இந்நாளிலும் நம் நாட்டில் இருந்துவருகிறது. இழிந்த மனமுடையவர்க்குச் சில தொழில்கள் இழிவானவைகளாகத் தோன்றும். உண்மையில் எல்லாத் தொழில்களும் உயர்ந்தவைகளே. பகைவன் நாட்டின்மீது படையெடுத்து வரும்பொழுது எல்லார்க்கும் வேலையிருக்கிறது. பசியென்னும் பகைவன் படையெடுத்து வாராவண்ணம் நாட்டு மக்கள் எப்பொழுதுமே உழைத்துப் பாடுபட்டு வாழவேண்டும். உழைக்கக் கற்றுக்கொள்ளுதல் புதிய கல்வித்திட்டமாகும். கிருஷியை அடிப்படையாகக் கொண்டுள்ள நம் நாட்டில் நிலத்தில் பாடுபடும் பயிற்சி இளமை

யிலேயே துவங்குவது தேவையாயிருக்கிறது. அந்தந்த இடத்துக்கு ஏற்றவண்ணம் அது கட்டாயப் பாடமாக அமைவது ஆகுக. கழனியில் எல்லாருடைய உழைப்பும் வேண்டியிருக்கும்போது பள்ளிக்கூடத்துக்கு விடுமுறையும் வந்துவிடும். நெசவுபோன்ற உபதொழில் அடுத்தபடியாக இடம்பெறும். இரண்டு மூன்று நாள் விடுமுறையானது விழாக்களை முன்னிட்டு வரும். வாரக்கணக்கான விடுமுறை சமூகத்துக்கு உழைத்தலை முகாமையாகக்கொண்டு ஏற்படும். வாரத்தில் ஒரு நாள் விடுமுறை நித்திய வேலைத்திட்டத்தினின்று மாறியிருக்கவும், நெடுநேர விளையாட்டுக்களில் கலந்துகொள்ளவும் வந்தமையும். நாடெங்கும் இந்த ஏற்பாடு அமுலுக்கு வரும்போது நம் சமுதாயத்துக்குப் புதிய வாழ்வு உதயமாகும்.

## பாடம் கற்பதும் பரீக்ஷையும்

அறிவு வளர்ச்சிக்காகக் கற்பது கல்வி. பரீக்ஷையில் தேர்வதற்காகக் கற்பது வெறும் மனோ முயற்சிக்குரிய ஒப்பந்தமாகும். இன்றைக்கு இருக்கும் மனப்பான்மை பரீக்ஷக்கு ஆயத்தப்படுத்தும் மனப்பான்மையாகும். எதில் பரீக்ஷ ஏற்படுவதில்லையோ அதைப்படிப்பதே கிடையாது. கோணல் முறைகளைக் கையாண்டு பரீக்ஷையில் தேறுபவர் கல்வியில் கருத்து அற்றவர் என்பதை நன்கு நிரூபித்து விடுகின்றனர். பரீக்ஷக்காகப் படிப்பது என்னும் மனப்பான்மையைக் களையெடுத்து எறியவேண்டும்.

ஆரம்பப்பாடசாலையில் சுமார் ஐந்து ஆண்டு வாசித்தல் என்ற நியதி ஏற்படுத்திக்கொள்வோம். எண்ணும் எழுத்தும் முதன்மைபெறும். புஸ்தகங்களும், நோட்டுப்புஸ்தகங்களும் எண்ணிக்கையில் மிக மிகக்குறைந்துபோம். மனப்

பாடம் பண்ணுவதும் மனக்கணக்கும் பண்டைக்காலத்து முறைப்படி முதன்மை பெறும். அதற்காக இராக் காலங் களில் மங்கிய வெளிச்சத்தில் உட்கார்ந்துகொண்டு முறை வைப்பது சாலச்சிறந்தது. இரவில் சுடர் வெளிச்சத்தில் புஸ்தகத்தைப் பார்த்துப்படித்து அல்லது எழுதி விரைவில் கண்ணைக்கெடுத்துக் கொள்ளலாகாது. கேட்டுத் தெரிந்து கொள்ளுதல் என்னும் பயிற்சி ஓங்குமளவு ஞாபக சக்தி அதிகரிக்கும். நாட்டிலுள்ள அத்தனையத்தனை சிறுவர் பொருட்டு ஏராளமான புஸ்தகங்களை ஆண்டுதோறும் ஆயத்தப்படுத்தவேண்டிய அவசியமில்லை.

ஐந்து ஆண்டுகளில் கற்கவேண்டிய புஸ்தகங்கள் எவை என்று வரையறுத்து வைக்கப்படும். அவரவர் திறமைக்கு ஏற்றவாறு பாடங்களில் சற்று முன் பின் போய்க்கொண் டிருக்கலாம். பொது விஷயங்களை ஆசிரியர் வகுப்புக் களாகப் பிரித்துவைத்துக்கொண்டு புகட்டுகிறார். பாடம் கற்பதில் சிறு சிறு பிரிவினருக்கு அவர் வழிகாட்டிக் கொடுக் கிறார். நடந்து செல்லுகின்றவர்கள் அவரவர் திறத்துக்கு ஏற்றபடி இரண்டுபேர் மூன்றுபேராகப் பிரிந்துகொள்கின்ற னர். அதே போன்று பல வகுப்புக்கள் அமைந்து இருக்கும். மிக மெதுவாகக் கற்கும் கடை மாணாக்கனுக்கும் இப்புதிய ஏற்பாட்டில் நன்மையுண்டாகும். ஐந்து ஆண்டுக்கு உரிய படிப்பு என்பதை அவரவர் அறிவுக்கு ஏற்ப நான்கு ஆண்டு முதல் ஏழு ஆண்டுக்குள்ளாக எல்லோரும் வெற்றிகரமாக முடித்துவிடுவர். இலக்கியத்தில் சில முக்கியமான பகுதிகள் இதில் அடங்கிவிடும். இத்தகைய ஆரம்பப் படிப்பு கட்டாய மானது. இப்படிக் கற்பவர்களில் பாதிப்பேர் இத்துடன் படிப்பை நிறுத்திவிட்டுத் தொழிலுக்குப் போகலாம். மற்றைய பாதிப்பேர் உயர்நிலைப் பள்ளிப் படிப்பில் ஈடுபடு

வார்கள். அப்படிப்பும் குருகுல் முறையிலேயே நடைபெற்று வரும்.

பரீக்ஷையைப் பற்றிய எண்ணமே மாணாக்கர் மனதில் வரலாகாது. ஆசிரியர் ஒவ்வொரு மாணாக்கனையும் ஆண்டுகளாக்க் கவனித்து வருகிறார். அவருடைய கண்காணிப்புக்குப் பரீக்ஷை என்ற பெயர் கொடுக்கலாம். பள்ளிக்கூடத்தை விட்டு மாணாக்கன் போகும்பொழுது அவர் எழுதிக்கொடுக்கும் அபிப்பிராயமே அவன் கற்ற கல்விக்கு அத்தாட்சியாகும். உயர்நிலைப்பள்ளிக்குப் போகும் ஒரு சிறு பிரிவினருக்கு மட்டும் பிரவேசப் பரீக்ஷை என்பது சிறிய முறையில் நிகழும். பிறகு கல்லூரிப் படிப்புக்குப் போகின்றவர்களுக்கும் முறையான பரீக்ஷை நிகழும். மற்றவர்களுக்கு அது எளிதானதாக இருக்கவேண்டும். இங்ஙனம் ஏட்டுக் கல்வியை ஒட்டியது அல்லாது வாழ்க்கையை ஒட்டிய கல்வியே மக்களை நன்மக்கள் ஆக்கும். அதற்கு ஏற்ற முயற்சி எடுத்துக்கொள்வது சமுதாயத்தின் கடமை.

---

# 6. கல்வித்துறையில் சீரமைப்பு

## கல்வி என்பது வளர்ச்சி

பொதுமக்கள் எல்லோரும் கல்வியைப்பற்றிய ஓர் அடிப்படைத் தத்துவத்தை அறிந்திருப்பது முற்றிலும் அவசியம். வளர்கின்ற செடிக்கும் வளர்க்கின்ற தோட்டக் காரனுக்கும் என்ன தொடர்வு இருக்கிறதோ அதே தொடர்வு கல்வி கற்கின்ற மாணாக்கனுக்கும் ஏனையவர் களுக்கும் இடையில் இருக்கிறது. தோட்டக்காரன் செடி யைச் சிருஷ்டிப்பதில்லை. அது தானே வளர்கிறது. வளர்ச் சிக்கு இடைஞ்சலாய் இருக்கின்றவைகளை அவன் அகற்று கிறான்; அனுகூலமாய் இருப்பவைகளைச் செடியோடு சேர்த்து வைக்கிறான். வேலி கட்டி ஆடு மாடுகள் வராது தடுப்பது, கிளறிக் களை பிடுங்குவது, நோய் வராது தடுப் பது ஆகிய செயல்கள் பிரதிகூலமான சூழ்நிலைகளை அகற்றுதலாம். மண்ணைத் திருத்துவது, எரு இடுவது, நீர் பாய்ச்சுவது முதலிய செயல்கள் அனுகூலமான சூழ் நிலையை உண்டுபண்ணுதலாம். இவ் இருவிஷயங்களில் தோட்டக்காரன் தகுந்த எச்சரிக்கை எடுத்துக்கொண்டால் செடி தானே ஓங்கி வளர்ந்தாகவேண்டும். மாணாக்கனு டைய நல்வளர்ச்சிக்கு விபத்து விளைவிக்கும் விக்கினங் களை அகற்றவேண்டும்; துணைபுரியும் வசதிகளை அமைத் துத் தரவேண்டும். இதுவே ஆசிரியரும் பெற்றோரும் மற்றவரும் கூடி மாணாக்கர்களுக்குக் கல்வித்துறையில் செய்கின்ற சேவையாகும். சூழ்நிலையை அங்ஙனம் அமைத் துக் கொடுத்துவிட்டால் தன் இயல்புக்கு ஏற்ப அறிவு வளர்ச்சி மாணாக்கனுக்கு எளிதில் அமைந்துவிடும். மாணாக்கனுக்கு எவை அனுகூலமான சூழ்நிலை, எவை பிரதிகூலமான சூழ்நிலை என்பவைகளை ஆராய்வோம்.

**பணம்**

உற்ற நோயைக் களைதல் நல்வாழ்வு வாழ முயலுபவர்களது முதல் கடமையாகும். நோய் எவ்வளவு பெரியதோ அதற்கேற்ற சிகிச்சை முறையைக் கையாண்டாக வேண்டும். மனதில் சூழ்ந்துள்ள மாசு ஒருவித நோய் ஆகும். மனத்துக்கண் மாசு இல்லாதவன் ஆதல் கல்வியின் நோக்கமாகும். இந்த மாசை அகற்றுதற்குத் தக்க உபாயத்தைக் கையாண்டாக வேண்டும். கைவசம் இருக்கும் பணத்துக்கேற்ற படிப்பு என்னும் கொள்கை உதவாது. நோயைப் போக்குதற்கு எங்ஙனம் பணத்துக்கேற்ற வைத்தியம் என்பது பொருந்தாதோ அதே கோட்பாடு கல்விக்கும் உரியது. ஆபத்தான நோய் வந்துவிட்டால் கடன் வாங்கியோ, யாசகம் பண்ணியோ ஏதேனும் ஒருவிதத்தில் நோயைக் களைந்தே ஆகவேண்டும். இப்பொழுது நம் மக்கள் மனத்தகத்துப் புகுந்திருக்கும் நோய் மிகக் கொடியது. நல்ல கல்வி முறையைக் கையாண்டாலொழிய இந்நோயை அகற்ற முடியாது. மன நோய் மக்களை விலங்கிலும் கொடியவராக்கி விடுகிறது. விலங்கு போன்ற பான்மை உடையவர் பெரிய வீடு கட்டி வாழ்வதால் ஆவதென்ன? தொழில்கள் பல புரிந்து சம்பாதிப்பதால் ஆவதென்ன? அலங்காரமாக ஆடைகள் அணிந்து வாழ்வதால் ஆவதென்ன? யந்திரங்களை வேண்டியவாறு நிர்மாணிப்பதால்தான் ஆவதென்ன? மனநோயை அகற்றுதற்கேற்ற உபாயத்தைக் கையாளவேண்டும். அதற்காகப் பணம் எவ்வளவு செலவானாலும் அதைச் செய்ய சமுதாயம் கடமைப்பட்டிருக்கிறது. ஏனைய துறைகளில் செலவைக் குறைத்து கல்வித்துறைக்கென்றே அதிகச் செல்வம் செலவிட்டாலொழிய நாட்டுக்கு விமோசனமில்லை. வெள்ளம், கொள்ளை நோய் முதலிய

வைகளால் ஏற்படும் கஷ்ட நிவாரணத்துக்குச் சமுதாயம் ஏதேனும் ஒருவிதத்தில் பணம் கண்டுபிடிக்கிறது. அதைவிட அதிகமான பொறுப்பு எடுத்துக்கொண்டு கல்விக்குப் பணம் தேடியாக வேண்டும். அப்படிச் செய்வது கல்விக்கு அனுகூலமான சூழ்நிலையை உண்டுபண்ணுதற்கு முதற்படியாகும்.

## காலம்

கல்விக்கும் காலத்துக்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. உணவு உண்பதற்குச் சிறுவர்கள் எல்லோரும் ஒரே அளவு நேரம் எடுத்துக்கொள்வதில்லை. விரைவில் உண்கின்றவர் இருக்கின்றனர், நிதானமாக உண்கின்றவர் இருக்கின்றனர், சற்று வற்புறுத்தினால் நெடுநேரம் எடுத்துக்கொண்டு சிறிது சிறிதாக உண்கின்றவர்கள் இருக்கிறார்கள். ரயில் வண்டிக்கு ஓடுகின்றவன் அவசரப்பட்டு ஏதோ சிறிது உணவை ஏற்றுக்கொண்டு ஓடுவது போன்று தினசரி வாழ்க்கை அமையலாகாது.

கல்வித்துறையில் மாணாக்கர்கள் கல்வியை ஏற்றுக் கொள்ளுதற்கு எல்லோரும் ஒரே அளவு காலம் எடுத்துக் கொள்வதில்லை. விரைவில் கற்கின்றவர் இருக்கின்றனர். எவ்வளவு விரைவில் கற்கின்றனரோ அவ்வளவு விரைவில் மறக்கின்றவர் இருக்கின்றனர். நிதானமாகக் கற்கின்றவர் இருக்கின்றனர். வற்புறுத்தலுக்கேற்ப தாமதப்பட்டுச் சிறிது சிறிதாகக் கற்கின்றவர்களும் இருக்கிறார்கள். பிள்ளைகளின் தரத்தில் அமைந்த வேற்றுமையை ஓரளவு பெற்றோர் அறிவர். ஆசிரியர் அதைவிட அதிகம் அறிவார். ஒரு பிள்ளைக்குக் கல்வி எவ்வளவு நேரம் ஒதுக்கி வைப்பது என்பதை ஆசிரியர் தீர்மானிக்கின்றார். பெற்றோர் அதற்கு

உடந்தையாக இருக்கவேண்டும். ஏனையோர் அதில் தலையிட்டு இவ்வளவு நேரம் கல்வி, அதன் பிறகு பிள்ளைகளை விரட்டியோட்டு என்று ஆக்ஞாபிப்பது அடாத செயலாகும். நோயாளி ஒருவனை ஆஸ்பத்திரியில் எத்தனை நாள் வைத்திருப்பது என்பதை டாக்டர் அறிவதுபோன்று மாணாக்கன் ஒருவனுக்கு எத்தகைய படிப்புக்கு அல்லது விளையாட்டுக்கு அல்லது ஓய்வுக்கு எவ்வளவுநேரம் தருவது என்பதை ஆசிரியரே பார்த்துக்கொள்ளவேண்டும். மாணாக்கனுக்கு ஏற்றவாறு கால அட்டவணையைச் சிறிது மாற்றியமைக்கின்ற சுதந்திரமும் அவருக்கே உண்டு. மாணாக்கனுக்கு வேண்டிய அளவு காலம்கொடுப்பது அனுகூலமான சூழ்நிலை. காலத்தைக் குறைப்பது பிரதிகூலமான சூழ்நிலை. இருபத்து நான்கு மணி நேரம் அடங்கிய ஒரு நாளில் எப்பிள்ளைக்குக் கல்விக்கு எத்தனை மணி நேரம் ஒதுக்கி வைப்பது என்பதைச் சட்டதிட்டத்தில் கொண்டு வரலாகாது. பிள்ளைகளின் வளர்ச்சியில் கருத்துடையவர் கால அளவைப்பற்றிய இக்கோட்பாட்டில் தக்கபடி கருத்தைச் செலுத்துவது அவசியமாகிறது.

### முயற்சி

சிறுவர்க்கிடையில் கல்வியைப் பரப்புதற்கு முயற்சி என்னும் கோட்பாடும் மிக முக்கியமானது. ஓர் இடத்திலிருந்து புறப்பட்டு மற்றோர் இடம்போய்ச் சேர, நிற்காது ஓடுபவர் இருக்கின்றனர், வேகமாக நடக்கின்றவர் இருக்கின்றனர், மெதுவாக நடப்பவர் இருக்கின்றனர், வழியில் நின்று நின்று போய்ச் சேருபவரும் இருக்கின்றனர். அவரவர் வலிவுக்கு ஏற்ப நடந்து செல்லுதற்கு வசதி ஏற்படுத்தித்தரவேண்டும். விரைவில் நடக்க இயலாதவர்களுக்கு நடப்பதற்கேற்ற அவகாசம் கொடுக்காது தடுத்து விடுவது முறையாகாது.

கல்வித்துறையில் தலைமாணாக்கர், இடைமாணாக்கர், கடைமாணாக்கர் என்பவர் இருக்கின்றனர். மூன்று தரத்தார்க்கும் ஏற்றவாறு சந்தர்ப்பங்களை அளிப்பதே நல்ல கல்வித்திட்டமாகும். ஒருவிதத்தில் கடைமாணாக்கனையே ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அதற்கேற்றவாறு கல்வித் திட்டத்தை அமைக்கவேண்டும். இவையாவையும் ஆழ்ந்து யோசிக்குங்கால் கட்டுப்பாடான சட்டதிட்டங்கள் உதவா. கல்வி கற்பவர்க்கு வேண்டியவாறு அவகாசம் கொடுப்பதே சாலச்சிறந்தது ஆகும். இதைக் கருத்தில் வைத்துக் கொள்ளாவிட்டால் சமுதாய முன்னேற்றத்தின் பொருட்டு நாம் எடுத்துக்கொள்ளும் முயற்சி வீண் போய்விடும். பள்ளிக்கூடங்களை நடத்துவதற்குப் பல தரப்பட்ட கால அளவைகளும் முயற்சிகளும் இன்றியமையாதவைகள் என்பதை யாவரும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

உணவுப்பொருள் ஒன்று; அதில் உண்டுபண்ணும் உணவு வகைகள் பல. ஒருவகை உணவு ஒருவனுக்கு ஒத்துக் கொள்ளலாம்; மற்றவனுக்கு அது ஒத்துக்கொள்ளாது போய் விடலாம். யாருக்கு எவ்வகை உணவு பிடிக்கின்றதோ அவ்வகை உணவை அவனுக்குக் கொடுப்பது முறை. கல்வித் துறைக்கும் இக்கோட்பாடு பொருந்தும். விதவிதமான பள்ளிக்கூடங்கள் இருக்கவேண்டும். விளையாட்டின் மூலம் பாடம் புகட்டும் பள்ளிக்கூடம், தொழில்கள் மூலம் பாடம் புகட்டும் பள்ளிக்கூடம், நாடகங்கள் மூலம் பாடம் புகட்டும் பள்ளிக்கூடம், சுற்றுப் பிரயாணங்கள் மூலம் பாடம் புகட்டும் பள்ளிக்கூடம், பல ஆண்டுகளாகக் குருகுல வாசம் செய்ய இயலுபவர்களுக்கேற்ற பள்ளிக்கூடம், குறிப்பிட்ட வேளையில் வந்து ஏதோ கொஞ்சம் கற்றுக்கொண்டு போகின்றவர்களுக்கேற்ற பள்ளிக்கூடம்—இப்படியெல்லாம்

பள்ளிக்கூடங்கள் அமையப்பெற்று இருந்தால் பல பாங்குடையவர்களுக்குக் கல்வி கற்பது எளிதாகிறது. இத்தனை வித முயற்சிகளையும் எடுத்துக்கொள்ளச் சமுதாயம் கடமைப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்தால் எல்லாவித மாணாக்கர்களுக்கும் கல்வி வசதி ஏதேனும் ஒரு விதத்தில் எட்டுவதாகிறது.

## அஸ்திவாரம்

ஒரு நாட்டில் பலதரப்பட்ட வீடுகள் இருக்கின்றன. குடிசைகள் உண்டு, இடைத்தரமான வீடுகள் உண்டு, பெரிய மாளிகைகளும் உண்டு. இவைகளுக்காகவென்று அமைக்கும் அஸ்திவாரங்கள் கண்ணுக்குப் புலனாகாதவைகள். அவை மண்ணினுள் மறைந்துகிடக்கின்றன. அப்படி அவை மண்ணில் மறைந்து கிடப்பவைகள்தானே என்று எல்லாக் கட்டிடங்களுக்கும் ஒரே விதமான அஸ்திவாரம் போடுவதில்லை. கட்டிடத்துக்கு ஏற்ற அஸ்திவாரம் அமைந்தே ஆகவேண்டும்.

மக்கள் தங்கள் மனத்தகத்து அறிவு என்னும் வீடு கட்டுகின்றனர். அப்படி அறிவு வீடு கட்டுகிறவர்களுள் குடிசைகளைக் கட்டி முடிப்பதே சிலர்க்கு முடியாத காரியமாயிருக்கலாம். இன்னொரு இயல்புடையவர் குடிசைகளை நன்கு கட்டி முடித்து விடலாம். பெரும்பாலர் சிறு வீடு கட்டுகின்றனர். அறிவு மாளிகைகளைக் கட்டுகிறவர்களும் சமுதாயத்தில் இருக்கின்றார்கள். இவர்கள் கட்டுவது குடிசையா அல்லது மாளிகையா என்பதைச் சிறு வயதில் கண்டு பிடிப்பது சிரமமான காரியம். ஆனால் அதை முன்னிட்டு எல்லார்க்கும் சிறு குடிசைக்கு ஏற்ற அஸ்திவாரம் போட்டு விடவேண்டும் என்கின்ற சட்டதிட்டம் கொண்டு வருவது முறையானதன்று. தீர்க்கதரிசிகள் அத்தகைய

குறுகிய நோக்கில் போகமாட்டார்கள். ஆரம்பக்கல்வியே கல்வி கற்பவர்களுக்கு அஸ்திவாரமாகிறது. ஆரம்பக்கல்வி விதவிதமான பாங்குடையதாக இருக்கவேண்டும் என்பதை யாரும் மறந்துவிடலாகாது. உலகில் உள்ள மற்ற நாடு களில் சென்று பார்த்தால் எத்தனை விதமான முறை களில் ஆரம்பக் கல்வியை அவர்கள் வகுத்து வைத்திருக் கிறார்கள் என்பது புலனாகும். பொருளாதாரத்துறையில் அவரவர் திறமைக்கு ஏற்ப மக்கள் பொருள் சம்பாதிக் கின்றனர். அதற்கேற்ற வசதிகளையெல்லாம் சமுதாயம் அமைத்து வைத்திருக்கிறது. கல்வித்துறையில் அவரவர் திறமைக்கு ஏற்ப விதவிதமான வசதிகளைச் செய்து கொடுப்பது அதைவிட முக்கியமான பொறுப்பு ஆகின்றது. இளைஞன் ஒருவனுக்கு அறிவும் ஆற்றலும் இருக்கின்றது.. காலம் முழுதையும் கல்வி, கேள்விப் பயிற்சியிலேயே செல வழிக்கும் வசதியும் இருக்கின்றது. அத்தகைய இளைஞன் ஒருவனைச் சிறிது நேரத்துக்குமேல் பள்ளிக்கூடத்தில் இருக்கலாகாதென்று அப்புறப்படுத்துவது முறையாகாது. யார் கல்வியில் எவ்வளவு ஆழ்ந்து செல்ல விரும்பு கின்றானோ அதற்கேற்ற சூழ்நிலையை ஆரம்பத்திலிருந்தே அவனுக்குச் செய்து கொடுப்பது நல்ல அஸ்திவாரமாகும். கட்டிடம் கட்டிய பிறகு அஸ்திவாரத்தைக் கலைக்க முடி யாது. கலைத்தால் கட்டிடமே போய்விடும். வசதியுடைய வர்களை வசதியற்றவர்களாக்குவதும் முறையன்று. தங்கள் குழந்தைகளுக்குக் கல்விக் கட்டிடத்தில் நல்ல அஸ்திவாரம் அமைந்து வருகிறதா என்று பார்த்துக்கொள்வது பெற்றோ ருடைய கடமை. வலிவான அஸ்திவாரத்தில் சிறிய வீடு கட்டுவதில் குற்றமில்லை. வலிவற்ற அஸ்திவாரத்தில் பெரிய வீடு கட்ட முடியாது. அஸ்திவாரம் போடும்

பொறுப்பைப் பிறர் கையில் ஒப்படைத்து விடலாகாது. மக்கள் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயங்களில் இது ஒன்று ஆகும். செடியைத்தின்னும் புழு பூச்சி செடியின் மீது பரவினால் தோட்டக்காரன் எங்ஙனம் தகுந்த மருந்து போட்டு அப்பூச்சிகளை அகற்றுகின்றானோ அங்ஙனம் கல்வியில் ஆழ்ந்து செல்ல விரும்புகின்றவர்கள் வலிவற்ற அஸ்திவாரத்தை அறவே நிராகரிப்பது அவசியம்.

## பொலிவு

சரியான முறையில் வளர்ச்சி அடைந்து வரும் சிறுவர்களுக்குப் பொலிவு என்பதொன்று உண்டாகிறது. வேறு பல பெயரிட்டும் அதை அழைக்கலாம். வியக்தி, தோற்றம், நிறைவு, பாவனை ஆகிய இச்சொற்களெல்லாம் அதே பொருளைக் குறிக்கின்றன. ஆங்கிலத்தில் இதற்கு Personality என்பது பெயர். பொலிவு முறையாக உருவெடுப்பதற்கு ஏற்ற கோட்பாடு ஒன்று உண்டு. கல்வித்துறையில் அது மிக முக்கியமானது. புகட்டுபவர், புகட்டப் பெறுபவர் ஆகியவர்களுக்கிடையில் உள்ள இணக்கம் இதற்கு மிக முக்கியமானது. வேறுபல துறைகளிலும் இக்கோட்பாடு நன்கு நிரூபிக்கப்படுகிறது. மதுரைக் கோயிலில் அற்புதமாக செதுக்கப் பெற்ற சில உருவங்களைக் காணலாம். அவைகளில் சில வேலைப்பாடு நிறைவேறப் பெறாது இருக்கின்றன. அவ்வேலையைத் துவக்கிய மனிதனே அதை முடித்து வைக்கவேண்டும் என்பது கோட்பாடு. எக்காரணத்தை முன்னிட்டாவது அம்மனிதனால் அது நிறைவேறாது போய் விட்டால் வேறு ஒரு மனிதன் அவ்வேலையில் கை வைப்பதில்லை. துவக்கி வைத்த மனிதனுடைய பாவனையை அக்கல்லின் மீது வேறு ஒரு மனிதன் கொண்டுவர முடியாது என்று அன்னவர் கருதி வந்தனர். சிற்பம் ஒரு மனிதனது

கைப்பட்ட வேலையாகவே இருக்கவேண்டும். ஓவியமும் அத்தகையது. ஒரே மனிதன் ஒரு படத்தைத் தீட்ட வேண்டும். பலபேர் கைப்படுமளவு படத்தின் பொலிவு ஒழிந்துபட்டுப்போம். சர்க்கஸ் விளையாட்டுக்கு விலங்கு களுக்குப் பயிற்சி கொடுக்கின்றனர். ஒரு விலங்கை ஒரே மனிதன் பழக்கவேண்டும் என்னும் ஏற்பாடு உண்டு. அவன் விலங்கின் இயல்பை அறிந்துகொள்கின்றான். விலங்கு அவனுடைய இயல்பை அறிந்துகொள்கிறது. அதன் மூலம் பயிற்சி நன்கு நிறைவேறுகிறது. நீராவி யந்திரம், மோட் டார் வண்டி போன்ற உயிரற்ற கருவிகள் இருக்கின்றன. அவைகள் இயங்கும் தன்மை உடையவைகள். ஒரு யந்திரத்தை ஒரே யந்திரி இயக்கிக் கொண்டு வருவானாகில் அதை நன்றாகப் பயன்படுத்தலாம். பலபேர் அதைக் கையாளுமளவு அது விரைவில் கெட்டுப்போய்விடுகிறது. ஒருவன் துவக்கிய சமையல் வேலையை அவனே பூர்த்தி பண்ணி வைக்கவேண்டும். சமைக்கப்படும் உணவு எவ் வளவு மேலானதாக இருந்தாலும் பலபேர் கைப்படுமளவு அவ்வுணவின் பாகம் கெட்டுப் போய்விடும். இக்கோட் பாடுகள் கல்வித்துறையிலும் கையாளப்பட்டுள்ளன.

நோய்வாய்ப்பட்ட மனிதன் ஒருவன் தன்னை ஒரு டாக்டரிடம் ஒப்படைக்கின்றான். அவர் மேற்பார்வையில் அவன் சிகிச்சை பெற்றுவரும்பொழுது அவனுக்குப் பணி விடை செய்கின்றவர்கள், உணவு அளிக்கின்றவர்கள், கலந்து உறவாடுகின்றவர்கள் ஆகிய எல்லாரும் டாக்ட ருடைய உத்திரவுக்கு உட்பட்டாகவேண்டும். உறவாடும் விஷயத்தில் தலையிடுதற்கு டாக்டருக்கு அதிகாரம் கொடுத் தது யார் என்னும் கேள்வி எழ இடமில்லை. நோய்வாய்ப் படுதலும், அதற்குச் சிகிச்சை பெறுதலும் வாழ்க்கையின்

எதிர்மறைச் செயல்கள். எதிர்மறைச் செயல்களுக்கே இத்தனை விதமான நியமனங்கள் இருக்கின்றன.

கல்வி பெறுவது வாழ்க்கையின் உடன்பாட்டுச் செயல் ஆகும். கல்வி பெறுதற்கு இளமையே உற்ற பருவம். கல்வி பெறும் மாணாக்கன் ஒருவன் எத்தகைய சூழ்நிலையில் வைக்கப்பட்டிருக்கிறான் என்பது மிக முக்கியமானது. தன் செயல்கள் அனைத்துக்கும் நோயாளி ஒருவன் டாக்டருடைய ஆணையை எதிர்பார்த்து இருப்பது போன்று மாணாக்கன் ஒருவன் தன் நல்வாழ்வு அனைத்துக்கும் ஆசிரியரை எதிர் பார்த்திருக்கிறான். ஆசிரியரிடம் மாணாக்கனை ஒப் படைத்து, அவ் ஆசிரியரிடும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு நடந்து கொள்ளப் பெற்றோர்களும் ஒருவிதத்தில் கடமைப் பட்டிருக்கின்றனர். அத்தகைய சூழ்நிலை பள்ளிக்கூடத்தில் அமையுமானால் மாணாக்கன் நல்ல பொலிவுபெற்று விடு கிறான். இதற்கு நேர்மாறாகக் கடையில் பண்டம் மாற்றுவது போன்று இத்தனை மணி நேரம் ஒரு மனிதனிடம் எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ளுதல், இத்தனை மணி நேரம் இன் னொரு மனிதனிடம் தொழிலைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுதல் என்று இப்படியெல்லாம் இளைஞன் ஒருவ னுடைய இயல்பை மூன்று நான்கு பேரிடம் பங்கிட்டுக் கொடுத்தால் அவனுடைய பொலிவை அழிப்பதற்கு அதுவே உற்ற உபாயமாகும்.

கல்வியில் பல படித்தரங்கள் உண்டு. பொதுவாக மூன்று படித்தரங்களாக அது வகுக்கப்பட்டிருக்கிறது. ஆரம் பக்கல்வி, உயர்நிலைப்பள்ளிப் படிப்பு, கல்லூரிப் படிப்பு என அவைகள் பெயர் பெறுகின்றன. ஒவ்வொரு படித்தரத் திலும் தனக்கு அமைந்துள்ள பாடத்தை மாணாக்கன் படிக் கட்டும். ஆனால் அவனுடைய பொலிவைப் பாதுகாக்கின்ற

ஆதிக்கம் மட்டும் பிளவுபட்டுப் போகாமல் இருக்கவேண்டும். மாணாக்கனை ஒன்றோடொன்று ஒவ்வாத வெவ்வேறு ஆதிக்கங்களிடம் ஒப்பிப்பது பிரதிகூலமான சூழ்நிலை. ஒவ்வொரு படித்தரத்திலும் ஏதேனும் ஒரே ஆதிக்கத்தில் பயிற்சிபெற்று வருவது அனுகூலமான சூழ்நிலை. இளைஞர் வளர்ச்சியில் கருத்துடையவர் இக்கோட்பாட்டை நன்கு கவனிப்பார்களாக.

## மூன்றுவித நோய்கள்

ஒருவன் நோய்வாய்ப்பட்டிருக்கிறான் என்பதைப் பலர் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம். உடல் நிலையும் முகக் குறியும் அவனது நோயைக் காட்டிவிடும். ஆனால் உற்ற நோயை இன்னதுதான் என்பதை எல்லோரும் தெரிந்து கொள்ள முடியாது. ஆனால் மருத்துவ உலகத்துக்கு அது விளங்கும். கல்வித்துறையில் நம் சமூகத்தில் ஏற்பட்டிருக்கும் சீர்கேடும் அத்தகையது. கல்வித்துறையில் ஏதோ குறைபாடு இருக்கிறது என்பது பலர்க்கு விளங்குகிறது. குறைபாடு இன்னது என்பதை உள்ளபடி அறிந்துகொண்டவர் மிகச் சிலர். குறையை உள்ளபடி அறிந்துகொள்ளுதலே அதை அகற்றுதற்கு உற்ற முதல் உபாயமாகும்.

நம்மிடத்து எத்தகைய பண்பாடு இருக்கவேண்டும் என்பதற்கு நமது தேசீயக்கொடி புறச்சின்னமாகும். ஏதோ அலங்காரமாக அமைந்திருக்கும் மூவர்ணக்கொடி அல்ல அது. மேலாம் கோட்பாடுகளுக்கு அது விளக்கமாகிறது. அக்கோட்பாடுகளை வாழ்க்கையில் பழக்கத்தில் கொண்டு வருதலே நமது முதல் கடமையாகும். வெறுமனே கொடியை எவ்வளவு பாராட்டினாலும் அது பாராட்டுதல் அல்ல. அது அறிவுறுத்தும் உயர்ந்த தத்துவங்களை ஜீவிதத்தில் அனுஷ்டிப்பதே சிறந்த பாராட்டு ஆகும். மன அமைப்பில் மேன்மை

புறுமளவு மக்கள் மேலோர் ஆகின்றனர். மனது சீர்கேடுறு மளவு சமுதாயமும் குலைந்து போய்விடுகிறது. சீர்மைகளுள் முதலாயது எது, இரண்டாவது ஆனது எது, மூன்றாவ தானது எது என்பதை நம் தேசீயக்கொடியில் அமைந் துள்ள நிறங்களே விளக்குகின்றன. பூகோளம் கற்பதற்குத் தேசப்படம் பயன்படுவது போன்று பண்பாட்டைப் பெறு தற்கு தேசீயக்கொடியின் தத்துவம் பயன்படுகிறது.

நிறங்களுள் உச்சத்தில் இருப்பது காவி அல்லது தீ நிறம். பற்றி எரியும் தீயானது எரியும் வஸ்துக்கள் அனைத் துக்கும் தீ நிறத்தைக் கொடுத்து விடுகிறது. நல்ல பொருள், கெட்டபொருள் ஆகிய யாவும் தீப்பற்றி எரியும் பொழுது தீயின் நிறத்தை எடுத்துக்கொள்கின்றன தியாகத்தின் சின்னம் தீ. மனத்தகத்துள்ள சிறுமையைத் தியாகம் பண்ணுவது மனிதனுடைய முதல் கடமை. இன்று நாம் பெற்று வரும் கல்வியில் மனதைப் பிடித்துள்ள சிறுமை மேலும் மேலும் பேணப்பெற்று வருகிறது. சிறுமையுள் சிறுமை ஒவ்வொருவரும் தன்னையே பெரியவன் என்று அகங்கரித்துக் கொள்ளுதலாம். 'யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கும் உயர்ந்த உலகம் புகும்' என்பது தியாகத்தைப் பற்றிய கோட்பாடு. இதுகாறும் நாம் பெற்றுவந்துள்ள கல்வியில் யான், எனது என்னும் செருக்கை வளர்ப்பதற்கே உபாயம் அமைந்துள்ளது. சின்னஞ்சிறுவர் யான், எனது என்னும் செருக்கை எப்படி அறுக்கமுடியும் என்று கேட்கலாம். நல்ல கல்வித் திட்டத் தில் அதை அறுப்பதற்கான உபாயம் மிக எளிதாக அமைந் திருக்கிறது. 'யான் எனக்குரியவன் அல்லன். பெற்றோர்க் குரியவன் நான். அதை நிலைநாட்டுதற் பொருட்டுப் பெற்றோரை நான் தினமும் வணங்கவேண்டும்' என்னும்

மனப்பான்மையைச் சிறுவர் உள்ளத்தில் எளிதில் புகட்டலாம். அப்படிப் புகட்டுவது அவர்களுடைய வாழ்க்கையைப் பற்றிய பேருண்மையாகும். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்னும் கோட்பாடு வெறுமனே வாசிப்பதற்கும் எழுதுதற்குமான அமைந்தது அன்று. Learn by doing செயலில் கல்வி கல் என்னும் கோட்பாட்டைப் பழக்கத்துக்குக் கொண்டுவர இது வேண்டியவாறு சந்தர்ப்பம் தருகிறது. இக்காலத்தில் இளைஞன் ஒருவன் யாரையுமே வணங்குவதில்லை. வணங்குவது அடிமைத்தனம் என்று சொல்லி அகங்கரிக்கிறான். பெற்றோரைத் தெய்வமாக வணங்கும்படி அவர்களுக்குக் கற்பிப்பதே மனத்தில் புதைந்துள்ள ஆணவ நோயை அகற்றுதற்கு உற்ற உபாயமாகும். இது நம் நாட்டுப் பண்டைய பண்பு. இன்று நாம் இதை அறவே மறந்துவிட்டோம். உலகில் யாரேனும் இரண்டொருவரையாவது வணங்கத் தெரிந்து கொண்டவனே மனதைப் பண்படுத்தியவன் ஆகின்றான். பெற்றோரை வணங்காதவன் பதர் போன்று ஆய்விடுவான் என்பதில் ஐயமில்லை.

பெற்றோர் தனக்காகவென்று அமைந்தவர்கள் என்பது நவீன இளைஞனுடைய மனதைப் பிடித்துள்ள நோய். பெற்றோர் எனக்குரியவர் என்னும் நோயை மாற்றுதற்கு நான் பெற்றோர்க்குரியவன் என்னும் பண்பு வந்துவிட வேண்டும். எனது என்னும் செருக்கை அறுப்பதற்கு இது சாதனமாகிறது. நாள்தோறும் தன் காயத்தால் பெற்றோர்க்குச் சிறிது நேரம் சிறுவர்கள் சேவை செய்து பழகினால் அதினின்று நல்ல மனப்பான்மை வருகிறது. சிறந்த இக்கோட்பாடு புறக்கணிக்கப்பட்டதே நாம் படிப்படியாகச் சீர்கேடு அடைந்து வருவதற்குக் காரணமாகும். தாய் தந்தையர் பொருட்டுச் சிறுவர்கள் யான் எனது என்னும்

செருக்கை அறுத்துப் பழகுமளவு பண்பில் உயர்ந்தவர் ஆகின்றனர். அதைத் தொடர்ந்து நாளடைவில் ஏனைய பண்புகளெல்லாம் இயல்பாகவே வந்து அமைந்துவிடுகின்றன.

எழுத்து அறிவித்தவன் இறைவன் ஆகும் என்பது அடுத்த கோட்பாடு. குரு பக்தியை வளர்ப்பது நம் நாட்டிலே பல்லாண்டுகளாக நிலைத்துள்ள பண்பு ஆகும். குரு பக்தியை வளர்க்குமளவு மாணாக்கன் சீரியவன் ஆகின்றான். நல்ல குரு அமையாத இடத்தும் குருபக்தி ஓங்குமானால் மாணாக்கனுக்குக் கலைகள் எல்லாம் இயல்பாக வந்துவிடுகின்றன என்பதற்குச் சான்றுகள் ஏராளமாக இருக்கின்றன. ஏகலைவனுக்குத் துரோணாசாரியார் கலை கற்பிக்க மறுத்துவிட்டார். ஆனால் குருபக்தியால் அவன் அவரிடமிருந்து கற்கவேண்டிய கலையையெல்லாம் கற்றுவிட்டான். சிறந்த குருபக்தி கல்விக்கு மிகவும் அனுகூலமான சூழ்நிலையாகும். ஆனால் நாளடைவில் நம் நாட்டில் இளைஞர் உள்ளத்தினின்று குருபக்தி மாயமாய் மறைந்து போய்க்கொண்டிருக்கிறது. ஆசிரியனை வணங்கவும், ஆசிரியனுக்கு அடிபணிந்து நடக்கவும் பிள்ளைகளுக்குத் திரும்பவும் போதித்தாக வேண்டும். ஆசிரியனிடத்துத் தன்னை அறவே ஒப்படைப்பது நல்ல தியாகப் பயிற்சியாகும். இம்முறைகளைக் கையாண்டால் தியாகத்தின் சின்னமாயிருக்கும் தீ வர்ணத்தை உண்மையாகப் போற்றுபவர் ஆவோம். கல்வித்துறையிலே புனிதத்தைப் புகுத்தியவரும் ஆவோம். பண்பு அனைத்தையும் திரும்பவும் பெறுதற்கு இது முற்றிலும் அவசியமானது.

நம்மைப் பிடித்துள்ள இரண்டாவது நோய் ஒழுங்குப்பாடற்ற வாழ்வு. நாளடைவில் இளைஞர்களுக்கிடையில்

ஒழுங்குப்பாடு அதிவிரைவில் மறைந்து வருகிறது. தேசீயக் கொடியில் அமைந்துள்ள வெள்ளை நிறம் ஒழுங்குப்பாட்டின் சின்னமாகும். ஏழு வர்ணங்களும் முறையாகவும் ஒழுங்காகவும் அமைந்தால் அந்த ஏழு நிறமும் சேர்ந்து வெண்மை நிறம் ஆய்விடுகிறது என்பது இயற்கையின் நியதி. பௌதிக விக்ஞானம் சிறிது தெரிந்தவருக்கு இவ்வுண்மை புலப்படும். நம் கொடியிலுள்ள வெள்ளை நிறம் தூய்மைக்கும் ஒழுங்குப் பாட்டுக்கும் புறச்சின்னமாகும். கல்வியின் வாயிலாகவே சமுதாயத்தில் தூய்மையையும் ஒழுங்குப்பாட்டையும் கொண்டு வரக்கூடும். மனிதனிடத்தமைந்துள்ள அகம், புறம் என்னும் இருபகுதிகளுள் அகம் மனதைக் குறிக்கிறது. ஒழுக்கத்தால் மனத்தூய்மை வருகிறது. 'ஒழுக்கம் விழுப் பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்பது நமது தேசீயப்பண்பு. தலைத்தரமான பள்ளியமைப்பைக் கொண்டே ஒழுக்கத்தை ஓம்பமுடியும். இது மிகக் கடின மான லக்ஷியம் எனினும் இதைப் புறக்கணிப்பது பொருந் தாது. இனிப் புறத்தில் அமையும் ஒழுங்குப்பாட்டை எளிதில் அமைக்கலாம். புறத்தில் அமையும் ஒழுங்குப் பாட்டைத்தான் '**disciplined life** நன்கு பயிலுவிக்கப் பெற்ற வாழ்வு' என்று ஏனைய நாட்டார்கள் இயம்புகின் றனர். சுவாசிப்பது நமக்கு எப்படி இயல்பாக அமைந் திருக்கிறதோ அப்படி நன்கு பயிலுவிக்கப் பெற்ற வாழ்க் கைமுறைகள் ஐரோப்பிய சமுதாயங்களில் இயல்பாக அமைந்திருக்கின்றன. பள்ளிக்கூடத்தில் பிள்ளைகளுக்குக் கொடுத்துவரும் பயிற்சியே அதற்குக் காரணமாகும். உண் பது, உடுப்பது, உறங்குவது, உலாவுவது, விளையாடுவது, வணங்குவது ஆகிய அனைத்திலும் பயிற்சியுண்டு. நம் நாட்டார் இதைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்ததும் கிடை

யாது. பல்லாயிரம் ஐரோப்பியர் ஏதேனும் ஒரு விழாவில் கூடினால் அப்பெருங்கூட்டத்தில் அவர்களுக்கிடையில் ஒழுங்குப்பாட்டைக் காணலாம். நம் நாட்டு மக்களோ ஆட்டு மந்தைக்கு ஒப்பாவார். அந்நிய நாட்டவர் ஒழுங்குப்பாட்டுக்கு ஏற்ற பயிற்சியைப் பள்ளிக்கூடத்தில் பெற்றனர். அப்பயிற்சியை நம்மவர் கனவிலும் கருதுவதில்லை. சமுதாய வாழ்க்கையில் நம்மிடத்துள்ள ஒழுங்குகெட்ட நிலைக்குப் பயிற்சியின்மையே காரணமாகிறது.

மாணாக்கனுடைய வாழ்வு மேலும் மேலும் பள்ளிக்கூடத்தோடு தொடர்வுடையதாக இருக்கவேண்டும். உண்பதற்குமட்டும் அவர்கள் வீட்டுக்குச் செல்வது போதுமானது. மற்ற வேளைகளில் எல்லாம் அவர்கள் பள்ளிக்கூடத்திலேயே இருந்து வருவார்களானால் எல்லாவிதமான வாழ்க்கைப் பயிற்சியைத் தருதற்கு அது பொருந்திய சூழ்நிலையாகும். அப்பயிற்சிகளை வகுத்தெடுத்துப் பள்ளிக்கூடத்துக்கு வழங்குதலே தேசாபிமானிகளுடைய முதல் கடமையாகும். இதற்குமாறாகப் பள்ளிக்கூடத்தோடு தொடர்வு வைக்கும் நோக்கத்தைக் குறைக்கின்றவளவு வாழ்க்கைப் பயிற்சி இல்லாது போய்விடுகிறது. வாழ்க்கைப் பயிற்சியின் ஒரு சிறு பகுதி குடிமைப்பயிற்சி என்கின்ற பெயர் பெற்றிருக்கிறது. ஏதோ விளையாட்டாகச் சிற்சில பள்ளிக்கூடங்களில் சிறிய அளவு அது கற்பிக்கப்படுகிறது. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்னும் கோட்பாட்டுக்கு ஒப்ப கருத்தையும் முயற்சியையும் பெரிதும் அதிலேயே செலுத்தினால்தான் நமது சமுதாயம் சீர் உடையதாகப் புதிய வடிவெடுக்கும். சமுதாயநலத்தில் கருத்துடையவர் இத்தகைய சீரிய சூழ்நிலையை வருவித்துக் கொள்ளுதற்கு வேண்டிய முயற்சிகளை யெல்லாம் எடுத்துக்கொள்ளுதல் வேண்டும்.

ஒருவிதத்தில் இது ராணுவப் பயிற்சிக்கு ஒப்பானது. பன்னிரண்டு வருஷம் ஒரு மனிதனுக்கு வாழ்க்கைப் பயிற்சியை முறையாக அளித்து வந்தால் அவன் சீர்மையே வடிவெடுத்த மேன்மகன் ஆவது திண்ணம்.

நம் தேசீயக்கொடியில் அமைந்துள்ள பச்சை நிறம் செழுமையின் புறச்சின்னமாகும். உழைப்பால் செழுமையை அதிகப்படுத்தலாம். உழைப்புக்கும் தொழிலுக்கும் தக்கபடி கருத்தைச் செலுத்துமிடத்து இந்நிலை வந்தமைகிறது. இதைத்தான் **dignity of labour** 'உழைப்புக்கு வந்தனை' என்று பலர் பகர்ந்து வருகின்றனர். தேசீயப் பண்பில் இது மூன்றாவது ஸ்தானம் பெறுகின்றது. ஆனால் ஒரு சிலர் அனாவசியமாக இதை மிகைப்படுத்திக் கூறுகின்றனர். பால்மணம் மாறுதற்கு முன்பே பாலகன் தொழில்புரிந்து பழகவேண்டும் என்று அவர்கள் வற்புறுத்துகின்றனர். நம் நாட்டில் தொழிலுக்கு மரியாதை மறைந்துபோனதற்கு முதற்காரணம் நாம் நெடுநாள் புற ஆட்சிக்கு அடிமைப்பட்டிருந்ததேயாம். அடிமைகளுக்கு இடையிலே உயர்ந்த தொழில் என்றும் இழிவான தொழில் என்றும் வேற்றுமை உண்டு. சுதந்தரம் படைத்த மக்கள் அப்படி எண்ணுவதில்லை. தோட்டித் தொழில்புரிவதும் தெய்வம் தொழுவதும் ஒரே பாங்கில் சுதந்தரம் பெற்ற மக்களால் கருதப்படுகின்றன. உலகில் பல நாடுகளில் சுற்றிப்பார்த்தால் இவ்வுண்மை நன்கு விளங்கும். யாரெல்லாம் அடிமைகளாக நெடுநாள் வாழ்ந்திருக்கிறார்களோ அவர்கள் தொழிலை மேலானது என்றும் கீழானது என்றும் பாகுபடுத்துகின்றனர். யாரெல்லாம் அடிமைப்படாது வாழ்கின்றனரோ அவர்கள் எத்தொழிலை வேண்டுமானாலும் ஊக்கத்துடன் செய்து சாதிக்கின்றனர். நம்நாடு இப்பொழுது அந்நிய

ஆட்சியினின்று விடுதலை பெற்றுவிட்டது. தொழில் வேற்றுமை ஏற்கனவே ஏராளமாக அகன்றுபோய்விட்டது. இன்னும் ஒரு தலைமுறையில் அது இருக்குமிடம் தெரியாது மறைந்து போகும். அதற்கிடையில் தொழிலுக்கு வந்தன்ன என்று பகர்ந்துகொண்டு பள்ளிக்கூடத்துச் சிறார்களை உபத்திரவப்படுத்தலாகாது.

நல்ல மனப்பான்மையைச் சிறுவர்க்கிடையில் உண்டு பண்ணுதல், முதியோர்க்கு அவர்கள் பணிவிடை செய்தல், தூய ஒழுங்குப்பாடான வாழ்க்கையிலே அவர்களைப் பயிலுவித்தல், பள்ளிக்கூடத்தை ஒட்டிய சிறு வேலைகளைச் செய்யும்படி அவர்களைத் தூண்டுதல் ஆகியவைகள் மனநோயைக் களைதற்கு உற்ற உபாயங்களாகும்.

## ஆசிரியன்

இந்தியாவில் நெடுங்காலமாகப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் சமுதாயத்தில் உயர்ந்ததொரு ஸ்தானம் வகித்து வந்திருந்தார். சிறுவர்களையும் சிறுமிகளையும் உபாத்தியாயரிடம் ஒப்படைத்தான பிறகு பெற்றோர்களும் தங்கள் சிறார் விஷயங்களில் உபாத்தியாயரின் ஆணைக்கு உட்பட்டு நடக்கக் கடமைப்பட்டிருந்தனர். தம்மிடம் கல்வி பயின்று வரும் சிறார்களின் நித்திய வாழ்க்கை முழுதும் ஆசிரியருடைய கண்காணிப்பில் இருந்து வந்தது. அதிகாலையில் எழுந்து அவர்கள் ஆசிரியரிடம் வந்து சேரவேண்டும். நீராடப்போவதும் அவருடைய பார்வையில் இருந்தது. கூட்டு வழிபாட்டை அவர் முறையாக நடாத்தி வைத்தார். உண்ணப் போனபொழுது பிள்ளைகள் அவரை விட்டுச் சிறிது பிரிந்திருந்தனர். வீட்டில் ஏதேனும் இடைஞ்சல்களைச் சிறுவர்கள் செய்தால் அவைகளைப்பற்றிப் பெற்

றோர் ஆசிரியரிடம் தெரிவித்து வந்தனர். அவர்களுடைய தகாத செயல்களை அவர் திருத்தியமைத்து வைத்தார். தோட்டக்காரன் பார்வையில் பயிர்கள் யாவும் வளர்ந்து வந்தது போன்று ஆசிரியர் பார்வையில் பிள்ளைகள் வளர்ந்து வந்தனர்.

சிறுவர்களின் வெவ்வேறு இயல்புகளை ஆசிரியர் நன்கு அறிந்திருந்தார். சிறுவர்களின் இயல்புகளுக்கேற்ற நடை முறைகளை அவர் கையாண்டு வந்தார். அவர் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளைத் தட்டிச் சொல்ல யாருக்கும் அதிகாரம் கிடையாது. சில வேளைகளில் யமபடர்போன்று கொடூரமான முறைகளைக் கையாண்டு வந்த ஆசிரியர்களும் இருந்தனர். ஆனால் அத்தகையோர் விதிவிலக்கான யாரோ சிலர் ஆவர். பொதுப்பட பள்ளிக்கூடத்து உபாத்தி யாயர் மாணாக்கர்களுடைய வணக்கத்துக்கு உரியவராக இருந்தவர்மட்டுமல்ல, பொதுமக்கள் எல்லாருடைய வணக் கத்துக்கே இலக்காக அமைந்திருந்தார். அன்பு காட்டவும் அவருக்குத் தெரியும்; தீவிரமான நடவடிக்கை எடுத்துக் கொள்ளவும் அவருக்குத் தெரியும். அதன் விளைவாகத் திரி கரணங்களாலும் ஆசிரியர்களைப் பின்பற்றுவது மாணாக்கர் களுக்கு இயல்பாக அமைந்தது. படிப்பு முடிந்தான பிறகும் ஆயுட்காலமெல்லாம் மாணாக்கர் மரியாதையுடன் பழைய ஆசிரியரிடம் ஒழுகி வந்தனர். அத்தகைய பேரிணக்கத்தைச் செயற்கையாகச் செய்துகொள்ள முடியாது. உண்மையான தகுதி ஆசிரியரிடம் இருக்கவேண்டும். வாஸ்தவமான சீரமைப்பு பிள்ளைகளிடம் நல்வாழ்வாக வடிவெடுத்திருக்க வேண்டும். அப்பொழுதே நிலைத்த நலன் ஏற்படும். நெடுங் காலமாக இந்தியாவில் இத்தகைய நல்வாழ்வு பள்ளிகளின் மூலம் அமைவதாயிற்று. இத்தனை நூறாண்டுகள் என்று

அதைக் கணக்கிடமுடியாது. பல்லாயிரம் ஆண்டுகள் என்று பகர்ந்தால் அது மிகையாகாது.

ஆங்கில ஆட்சி நாட்டினுள் நிலைபெற்ற பிறகு நிலைமை விரைவில் மாறுபாடு அடைந்தது. கல்வி இலாகாவை அரசாங்கம் கைப்பற்றிற்று. சமுதாயத்தை அடிமைப்படுத்துதற்குக் கல்வி இலாகாவே தகுந்த துறையாகத் தென்பட்டது. ஆசிரியர்களுக்கு மேல் அதிகாரிகள் உண்டு என்று அவர்களுக்குக் காண்பிக்கப்பட்டது. அதிகாரிகள் பள்ளிக்கூடங்களைப் பார்வையிட வந்தபொழுதெல்லாம் ஆசிரியர்களை நடுநடுங்கச் செய்தனர். பிள்ளைகள் உள்ளத்தில் அது எவ்வளவு பெரிய கேட்டைப் புகுத்தி வந்தது என்பதை யாரும் அறிந்துகொள்ளவில்லை. தங்கள் ஆசிரியருக்கு மிக்கார் யாரும் உலகில் இல்லை என்னும் குருபக்திக்கு மாறாக ஆசிரியர் அதிகார வர்க்கத்தின் கையிலுள்ள ஒரு வெறும் கருவியே என்ற மனப்பான்மை உதிப்பதாயிற்று. கல்வியின் புனிதம் அன்றைக்கே சீர்குலைவு அடைந்தது. நாளடைவில் கல்வி இலாகா ஒன்று மட்டுமல்ல, முனிசிபாலிடி, ஜில்லா போர்டு போன்ற பொது ஸ்தாபனங்களும் ஆசிரியர்களுக்கு மேல் அதிகாரம் வகிப்பவைகளாக அமைவனவாயின. ஆசிரியர்களை வெறும் அடிமைகள் ஆக்கியது ஆங்கில ராஜ தந்திரத்தின் வெற்றிகரமான செயல்களில் ஒன்றாகும். நூறு வருஷங்களுக்குள் கல்வி தனது புனிதத்தை இழந்துவிட்டது என்றால் குரு சிஷ்ய இணக்கத்தை வெற்றிகரமாக வெளி நாட்டார் கலைத்ததே அதற்கு மூலகாரணமாகும்.

இந்தச் சீர்க்கேட்டை இன்றைக்கு யாரும் உள்ளபடி உணர்ந்து கொள்ளவில்லை. ஆசிரியருடைய நிலை நாளுக்கு நாள் மோசமானதாக ஆய்க்கொண்டு வருகிறது. சந்தைக்

கடையில் விலை கூறுதற்கு எடுத்துச் செல்லப்படும் கால் நடைகளினுடைய நிலை எத்தகையதோ அத்தகையது என்றே ஆசிரியர்களின் நிலையைச் சொல்லலாம். வாடகைக்கு அமைந்துள்ள வண்டியில் யார் யாரோ சவாரி செய்கின்றனர். அதுபோன்று ஆசிரியரிடம் யார் யாரோ வந்திருந்து சிறிது நேரம் எழுதப்படிக்கத் தெரிந்துகொண்டு போய்விடுகிறார்கள். அதன் பிறகு மாணாக்கர் என்று பெயர் பெற்றிருக்கும் சிறாருக்கும் ஆசிரியருக்கும் வாழ்க்கைத் தொடர்வு ஒன்றும் கிடையாது. வீதியில் தங்களுக்குத் தோன்றியவாறு முறைதவறி சிறார் காலங்கழித்துக்கொண்டிருந்தாலும் அவர்கள்மீது நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ள ஆசிரியருக்கு அதிகாரமில்லை. குறிப்பிட்ட சில நேரங்களில் போலீஸ்காரன் வீதியில் செய்கின்ற வேலையை ஆசிரியர் பள்ளியில் பாடம் நடத்துகிறபொழுது செய்தால் போதுமானது. இத்தகைய வருத்தத்துக்குரிய நிலைக்கு இப்புண்ணிய பூமியிலே கலைமகளின் செல்வம் வந்திருக்கிறது.

இந்தச் சீர்கேட்டை உள்ளூற உணர்கிறவர்கள் ஆசிரியருக்குப் பண்டைப் பெருமைகளைத் திரும்பவும் மனமுவந்து கொடுப்பதற்கான சூழ்நிலையை வரவழைக்க வேண்டும். தக்க ஆசிரியர் இல்லாது போய்விட்டாலும் குழந்தைகளை நாளெல்லாம் அவர்களின் கண்காணிப்பில் வைத்துப் பழக்க வேண்டும். பெற்றோர் தாமே ஆசிரியரிடம் மிக மரியாதையாக நடந்துகொள்ளுவது அவசியம். பெற்றோரைப் பார்த்துப் பின்பு பிள்ளைகளும் அங்ஙனம் நடந்துகொள்ள யத்தனிப்பர். இந்த நல்லிணக்கம் ஒன்றே மிக முக்கியமானது. சிறார் பண்படுதற்கு இது மிகவும் அனுகூலமான சூழ்நிலையாகும். தங்கள் சந்ததியார் நலத்திலே மனம் வைக்கும் நல்

லோர் ஆசிரியர் உலகை இங்ஙனம் புனிதப்படுத்துவார்களாக.

## உணவு

நம் நாட்டில் நெடுங்காலமாக இரண்டு பெரிய இயக்கங்கள் செல்வத்தைப் பற்றிச் சிந்திக்காது நிகழ்ந்து வந்தன. கையில் பணத்தைத் தொடாது தேசமெங்கும் தீர்த்த யாத்திரை செய்யலாம். கற்க விரும்பியவர்கள் காசைப்பற்றிக் கவலையற்றவர்களாக வேண்டியவாறு கல்வி கற்கலாம். அத்தகைய யாத்திரை வாசிகளையும் வித்தியார்த்திகளையும் ஏதோ சில இடங்களில் இன்றைக்கும் காணலாம். அவர்களுக்குத் தேவையாயிருந்த உணவு, உடை முதலியவைகளை சமுதாயம் அளித்து வந்தது. கல்வி புகட்டுதலைத் தம் கடமையாகக் கொண்ட ஆசிரியர்கள் நாடெங்கும் இருந்துவந்தனர். இந்தியாவினின்று வெளிநாடுகளுக்குச் சென்றிருக்கும் புத்த மதம் இந்த அரிய அனுஷ்டானத்தை இன்றைக்கும் கடைப்பிடித்து வருகிறது. மாணாக்கர்களும் துறவிகளும் வீடுகளில் சென்று உணவைப் பிக்ஷையாக ஏற்று வருவர். அதை அருந்திய பிறகு கல்வியில் ஈடுபடுவர். பர்மா, இலங்கை போன்ற இடங்களில் இவ்வனுஷ்டானத்தை இன்றைக்கும் காணலாம். பணத்தை நாடாது பசிப்பிணியைத் துடைத்துவிட்டுப் படிப்பில் அவர்கள் ஈடுபட்டு வருகின்றனர். இந்த மேலாம் அமைப்பு உருவெடுத்தது நம் நாட்டில். ஆனால் இங்கு இன்று அறவே அது அழிந்துபோய்விட்டது.

பண்டைச் சிறப்புகளில் சிலவற்றை இக்காலத்துக்கு ஏற்றவாறு புதுப்பிப்பதே நாம் உடன் செய்யக் கிடக்கும் கடமையாகும். நம் சிறுவர்கள் எல்லோரும் இன்றைக்கு

நித்திய வாழ்நாளில் பல மணி நேரம் வெறுமனே வீதியில் சுற்றித் திரிந்துகொண்டிருக்கின்றனர். அப்படி வீண் காலம் கழிப்பதற்குப் பதிலாக வித்தியார்த்திகள் தங்கள் சுதர் மத்தோடு சம்பந்தப்பட்ட ஓர் அரிய செயலை நாள்தோறும் செய்து பழகலாம். நமது பண்டைய ஐதிகம் மாணாக்கர்கள் வீடுதோறும் சென்று அரிசி முதலியவைகளைப் பிக்ஷையாக ஏற்றுக் கொண்டுவந்து சமைத்து உண்பதாகும். அப்படிச் செய்வது தனது மேலாம் அந்தஸ்துக்கு இழிவானது என்னும் மனப்பான்மை இப்பொழுது வந்திருக்கிறது. பொருளாதார நிலைமையும் நாட்டினுள் பெரிதும் மாறிவிட்டது. தங்களுக்காகவென்று செல்வம் படைத்திருக்கும் சிறுவர்கள் அரிசியைப் பிக்ஷையாக ஏற்கவேண்டிய அவசியமில்லை. ஆனால் ஒவ்வொரு பள்ளிக்கூடத்துக்கும் எத்தனை ஏழைப் பிள்ளைகள் வருகிறார்கள்; அவர்களுக்கு உணவு வகை வேண்டிய அளவு ஏன் அகப்படுவதில்லை ஆகியவைகளைப் பற்றி ஒவ்வொரு பள்ளிக்கூடமும் புள்ளி விவரங்கள் எடுக்கலாம். பிறகு நல்ல அந்தஸ்திலிருக்கும் மாணாக்கர்கள் சிறு சிறு கூட்டங்களாகச் சேர்ந்துகொண்டு தங்கள் வீடுகளுக்குச் சென்று ஏழைப் பிள்ளைகளுக்காகவென்று நாள் தோறும் கைப்பிடி அரிசி தானமாக வாங்கலாம். ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும் என்பது கோட்பாடு. தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் செயலை ஒருவன் வாழ்க்கையில் சிறிது நேரம் செய்து பார்த்தாலும் அதில் தான் பண்பாடு அடைந்து வருவதைத் தானே உணர்வான். சிறுவர்கள் ஏழைப்பிள்ளைகளுக்காகவென்று உணவுப் பொருள்களைப் பிக்ஷை எடுப்பதைச் சமுதாயம் பெரிதும் பாராட்டும். எதிர்காலத்தில் சமுதாயத்துக்குத் தொண்டன் ஆக வல்லவன் என்

பதை இப்பொழுது பள்ளிக்கூடத்திலிருக்கும் ஏழைப் பிள்ளைகளுக்குத் தொண்டன் ஆவதன் மூலம் அவன் நிரூபித்துக் காட்டுகிறான். கல்வியின் விளைவாகிய உயர்ந்த பண்பை அதன்மூலம் ஒவ்வொரு மாணாக்கனும் பெறுகின்றான். உணவு சமைப்பதற்குச் சுள்ளி சேகரித்தல் போன்ற செயலும் நல்ல பயிற்சியை அளிக்கிறது. உணவு சமைத்து ஏழைப் பிள்ளைகளுக்கு வழங்குதல் மூலம் அன்பு பெருகுகிறது; ஒற்றுமை வளர்கிறது. கிராமத்தில் வேலையில்லாதிருக்கும் இரண்டொரு முதியோருடைய உதவியையும் உணவு சமைப்பதற்குப் பெற்றுக்கொள்ள லாம். இங்ஙனம் உணவு படைத்திருக்கும் பிள்ளைகள் உணவில்லாப் பிள்ளைகளுக்கு உணவு தேடி ஊட்டி உதவி புரிவது எவ்வளவு சிறந்த கல்வி முறையாகும் என்பதைச் சற்று எண்ணிப்பார்த்தால் புலனாகும். இவ்விதம் பண் டைப் பழக்கம் புதிய உருவெடுத்தால் நம் சமுதாயத்தில் கல்வித்துறையிலுள்ள இரண்டொரு பிரச்னைகளை முறை யாக நீக்கி வைக்கலாம். அதன் மூலம் நம் சிறுவர்களும் வாழ்க்கைக்குரிய நல்ல பயிற்சிகளைப் பெற்று வருவார்கள். தொழிலுக்கு மதிப்புத் தரவேண்டும் என்னும் போதனையை செயற்கை முறையில் சிறுவர்களுக்குக் காட்டவேண்டிய தில்லை. இப்பழக்கத்தால் இயற்கையாக அவர்களுக்கு அது வந்துவிடும். பட்டினி கிடந்துகொண்டு பாடம் படித் தல் என்னும் கொடுமையும் அகற்றப்படும். சமுதாயத் தின் மீது உண்மையாக உள்ளன்பு வைத்திருப்பவர்கள் செய்யக்கிடக்கும் கடமை இதுவேயாம்.

**மானிய நிலம்**

பூமியை மானியமாக விடுவது நெடுங்காலமாக நம் நாட் டில் இருந்துவரும் ஒரு நல்ல பழக்கமாகும். கோயில்

கைங்கரியத்துக்கு நிலத்தை மானியமாக விடுவதுண்டு. பொதுநல சேவை புரிகின்றவர்களுக்கு நிலத்தை மானியமாகக் கொடுப்பதுண்டு. இன்றைக்குப் பொருளாதாரத்துறையில் அது புதியதொரு பெயர் பெற்று ஓர் இயக்கமாக வடிவெடுத்து வருகிறது. பூதான யக்ஞம் என்பது இன்றைக்கு அது புதியதாகப் பெற்றுள்ள பெயர். பூமியைத் தானமாக வழங்குதல் என்னும் வேள்வி என அது பொருள்படுகிறது. இது பாராட்டத்தக்க ஒரு நல்ல இயக்கம். நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுப்பதற்காக என்று இது ஏற்பட்டுள்ளது. நாளைக்கு இதை நடைமுறையில் கொண்டுவரும் பொழுது கடக்க முடியாத கஷ்டம் ஒன்று உருவெடுக்கும். இலவசமாக அகப்படும் நிலத்தை இனி யாருக்கு எடுத்து வழங்குவது, யாருக்கு இல்லை என்று சொல்லுவது என்னும் கேள்வி பெரியதொரு கேள்வியாகும். சிலரைத் திருப்திபடுத்தலாம். அத்துடன் நிலம் அகப்படாத பலர் அதிருப்தியடைந்திருப்பதே அதன் விளைவு ஆகும்.

முதியோர்க்கு நிலம் தருதற்குப் பதிலாக இப்படி இலவசமாக அகப்படும் நிலங்களை அந்தந்த ஊரிலுள்ள பள்ளிக்கூடங்களுக்குக் கொடுத்துவிட்டால் அச்செயலைக் குறித்து யாரும் வருந்தமாட்டார்கள். குறைந்த கேடும் நிறைந்த நலனும் அச்செயலினின்றே உருவெடுக்கும். பள்ளிக்கூடத்துக்கென்று அமைந்துள்ள நிலங்களைப் பண்படுத்திக் கொடுப்பதும் பொது மக்களுடைய கடமையாகும். தங்களால் இயன்ற பணிவிடைகளைச் சிறுவர்கள் அப்பூமிகளில் செய்துகொண்டிருப்பார்கள். தொழில் செய்து பழக வேண்டும் என்ற தூண்டுதலைப் பிறகு யாரும் கிளப்ப வேண்டியது அவசியமில்லை. சூழ்நிலையே தொழில புரியும்படி பிள்ளைகளைத் தூண்டும். பள்ளிக்கூடத்து

உபாத்தியாயருடைய குடும்பமும் பெரிய குடும்பமாய்விடும். எதிர்கால சமுதாயம் என்னென்ன சிறப்புக்களையெல் லாம் உடையதாக இருக்கவேண்டுமோ அத்தகைய சிறப் புக்களையெல்லாம் இன்றைக்குப் பள்ளிக்கூடத்தில் எளி தில் புகுத்திவிடலாம். வீட்டில் உணவில்லாத பிள்ளைகள் பள்ளிக்கூடத்திலேயே உணவு உண்டுகொண்டும் கல்வி கற்றுக்கொண்டும் இருக்கலாம். ஏழை பணக்காரன் என்ற வேற்றுமை சின்னஞ்சிறு வயதில் செயற்கையாக வந்து விடாது. சமுதாயம் முழுதையும் ஒரே குடும்பமாகப் பாராட் டும் மனப்பான்மை வந்தமையும். கற்கின்ற நேரங்களையும், தொழில் புரிகின்ற நேரங்களையும் ஒவ்வொரு பள்ளிக் கூடமும் அதனதன் சூழ்நிலைக்கு ஏற்ப அமைக்கும். வீண் காலம் போக்காது கற்கவும். உணவுப்பொருளைத் திரட்ட வும், அதை உணவாக்கிப் பயன்படுத்தவும் ஒவ்வொரு பள்ளிக்கூடமும் செய்து வருமானால் அது பாராட்டத்தக்க பயிற்சியாகும். அப்பொழுது வீண்காலம் போக்க அவகாச மிராது. உழைப்புக்கு மரியாதை என்பதும் நடைமுறை யிலே புகட்டப்பெறும் பயிற்சியாய்விடும்.

கட்டாயப் படிப்பைப்பற்றி ஏராளமாகப் பேசுகிறார் கள். அதற்குப் பல இடங்களில் பலபேர் முயற்சி எடுத்தும் வருகிறார்கள். ஆனால் இதுவரையில் வெற்றிகரமாக எவ் விதத்திலும் கட்டாயப் படிப்பு வந்து அமைந்துவிடவில்லை. என்ன சட்டதிட்டம் அமைத்தாலும் எத்தகைய தீவிரமான நடவடிக்கை எடுத்துக்கொண்டாலும் அதற்கெல்லாம் அஞ்சி நம் நாட்டு ஏழை மக்கள் பள்ளிக்குத் தங்கள் சிறுவர்களை யும் சிறுமிகளையும் அனுப்பமாட்டார்கள். அப்படி அவர்கள் அனுப்பாதிருப்பதற்குக் காரணம் ஒன்றிருக்க நடவடிக்கை வேறு ஒன்றாக அமையுமானால் அது தோல்வியுறுவது திண்

ணம். வறுமையின் கொடுமையினால் ஏழையர்கள் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதில்லை. பள்ளிக்கூடத்துக்குப் போனால் குழந்தைகளுக்குச் சாப்பாடு கிடைக்கும் என்னும் நிபந்தனை ஏற்பட்டு விட்டால் பள்ளிக் கூடத்துக்கு வரும் குழந்தைகளின் எண்ணிக்கை அதிவேகமாகப் பெருகும். அத்தனை பேருக்கும் அரசாங்கம் பணம் கொடுத்து சாப்பாடு போடுவது ஆகாத காரியம். பள்ளிக் கூடத்துப் பூமிகளில் உணவுப் பொருளைப் பெருக்கி, பள்ளிக்கூடத்திலேயே அப்பொருள்களைப் பயன்படுத்தி, பள்ளியில் இருப்பவர்கள் எல்லாரும் புசிப்பதென்றால் பணச் செலவு இல்லாது சாதிக்கப் பெறும் பெரும்காரியம் இதுவாகும். இது வெற்றிகரமாக நிறைவேறுதற்கு ஒவ்வோர் ஊரிலும் பொது மக்கள் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். இத்திட்டத்தில் அவர்களுக்கு நம்பிக்கை வரவேண்டும். நிலைத்திருந்து நல்ல பலனைத் தரும் சீரமைப்பு இது ஒன்றேயாம்.

## ஔவையார் காட்டிய அறநெறி

குழந்தைகளுடைய மனோ தத்துவங்களை அடிப்படையாகக்கொண்ட சிறந்த கல்வித் திட்டங்கள் பல நம் நாட்டில் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் மறந்துவிட்டுப் புதியதாக ஏதோ பூவுலக வாழ்க்கையைத் துவக்குபவர்கள் போன்று நம்மில் பெரும்பாலர் கல்வித்துறையில் அலைமோதித் திரிகின்றனர். கண்ணைக் கட்டி ஓட்டப்பட்டவர்கள் போன்று அவர்கள் தடுமாற்றம் அடைகின்றனர். சிறுவர்களுக்கென்றே ஔவையார் அருளிச் செய்திருக்கும் வெண்பா ஒன்றில் சிறுவர்களின் மனோ முயற்சிக்கு விஷயம் இருக்கிறது. கல்வி புகட்டுதலை எங்ஙனம் கொண்டு செலுத்துதல் என்று ஆசிரியர்களுக்கு வழி

காட்டுதற்கு வேண்டிய விஷயங்களும் அதே வெண்பாவில் அடங்கியிருக்கின்றன. அதாவது:

**வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்**
**நோக்குண்டாம் மேனிநுடங்காது—பூக்கொண்டு**
**துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்**
**தப்பாமற் சார்வார் தமக்கு.**

கல்வியின் குறிக்கோள் மக்களை நல்ல மனமுடையவர் ஆக்குதல். மனத்தை உடையவன் மனிதன். அவனுடைய மனது கெட்டுப் போய்விட்டால் அவன் மனிதன் அல்லன். மனத்தை நல்லது ஆக்குதற்கு சூழ்நிலை மிக முக்கியமானது. சூழ்நிலையை முற்றிலும் வசதியானதாக ஔவையாரின் கல்வித் திட்டம் செய்துவிடுகிறது. இக்காலத்தில் சாரணர் இயக்கம் **(Scout movement)** என்பது ஒன்று சிறுவர்களுக்கு உண்டு. அதைத் தெய்வீகமான இயக்கமாகத் தமிழ்ப் பாட்டி செய்து விடுகிறாள். பிள்ளைகள் எல்லார்க்கும் தலைவன் பிள்ளையார். இவ்வெண்பாவில் அவன் தும்பிக்கையான் என்னும் பெயர் பெறுகிறான். பிள்ளைகள் என்னும் சாரணர்க்கு அவன் யாண்டும் தலைவன். தூய்மையும் திட்பமும் நிறையப் பெற்றது அவனுடைய திருமேனி. விதவிதமான வந்தனை வழிபாடுகளாக அமைந்துள்ள விளையாட்டுக்களே அவனுக்குகந்த ஆராதனைகள் ஆகின்றன.

இந்தியப் பண்பில் சிறப்பு ஒன்று உண்டு. ஜீவன் தனது ஜீவபோதத்தை மறக்குமளவு நல்ல மனமுடையவன் ஆகிறான். தான் தனது என்னும் ஜீவபோதத்தை வளர்க்குமளவு அவன் தீய மனமுடையவன் ஆகிறான். சான்றோர்க்கே இக்கோட்பாடு நன்கு புலப்படும். கணபதி வழிபாடு என்று சொல்லிக்கொண்டு பிள்ளைகள் அனுஷ்டிக்கின்ற விளையாட்டுக்களில் சுயநலம் அகன்றுவிடுகிறது.

தன்னடக்கம் தானாக வந்தமைகிறது. ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் உடற்பயிற்சிக்கும் அதில் ஏராளமாக இடமிருக்கிறது. பிள்ளையாருக்காக என்று பிள்ளைகள் வீடு வீடாய்ச்சென்று கடலை, பொரி, அவல், கனி, கற்கண்டு, பால், தயிர் முதலியன சேகரித்து வருவார்கள். அக்காலத்தில் சமுதாயம் அளித்த நல்லுணவு வகைகள் ஆகும் அவை. பிள்ளையார்க்கென்று அவைகள் சேர்க்கப்பட்டமையினால் சிறுவர்கள் அவ்வுணவு வகைகளை ருசிபார்த்து எச்சில் படுத்தமாட்டார்கள். தன்னடக்கம் இயல்பாக வந்தமைகிறது. நீராட்டி, பூக்கொண்டு பிள்ளையாரைப் போற்றுவது அவர்களின் முக்கிய செயல். பூக்கொய்தல், மாலை தொடுத்தல் முதலிய லலித கலைஞானங்களும் இயல்பாக அவர்களுக்கு வந்தமைகின்றன. பிள்ளையாரின் பிரசாதத்தை முறையாக ஆசிரியர்க்கும், முதியோர்க்கும், தங்களுக்கும் பகுத்தெடுத்து வழங்குதலின்மூலம் சுயநலப் பற்றின்மையை அவர்கள் பழகி வந்தனர். தூய செஞ்சொல்லால் தும்பிக்கையானை அவர்கள் தொழுது வந்தனர். விதவிதமான உடற்பயிற்சிகளுக்கு அவ்வழிபாடு இடந்தந்ததினால் அவர்களுடைய மேனி நுடங்கிவிடுதற்கு இடமில்லை. சுறுசுறுப்பும் ஆரோக்கியமும் அவர்களிடத்திருந்தது. பள்ளிக்கூடத்து வாழ்க்கையில் பிள்ளையார் வழிபாடு மிக முக்கியமான இடம்பெற்று வந்தது. நம் நாட்டினுள் தேடிப்பார்த்தால் அதன் அறிகுறிகளை இன்றைக்கும் ஏதோ சில இடங்களில் காணலாம். வெறும் ஏட்டுக் கல்வி உதவாது. செயலின் மூலமாகவே சிந்தனையை வளர்க்க வேண்டும் என்று புகல்கின்றவர்கள் இந்த உயர்ந்த கோட்பாட்டைச் சிறிது எண்ணிப் பார்ப்பார்களாக. மனம், மொழி, மெய் என்னும் திரிகரணங்களுக்கும் உயர்ந்த பாங்கில் இந்த அனுஷ்டானம்

உணவளிக்கிறது. பிள்ளையார் வழிபாடு என்று பெயர் பெற்று பிள்ளைகளே போற்றப் பெற்றனர். இம்முறையை நாடெங்கும் திரும்பவும் பழக்கத்துக்குக் கொண்டுவந்தால் பிள்ளைகளை நல்லவழியில் பயிலுவிப்பதற்கு இது எவ் வளவு தூரம் பயன்படும் என்பது சொல்லாமலே விளங்கும். வாரத்தில் இரண்டொரு நாளைக்காவது பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் பிள்ளையார் வழிபாடு என்னும் பண்பைப் பழக் கத்தில் கொண்டுவருவார்களானால் அவர்களுக்கிடையில் ஒற்றுமையையும், உள்ளன்பையும், சுயநலத் தியாகத்தையும், பிறர்க்குத் தொண்டுபுரியும் பேரியல்பையும் அது வளர்க்கும். கல்வித்துறையில் நம்நாடு படைத்திருந்த இந்த மேலாம் பழக்கத்தை எக்காரணத்தைக்கொண்டும் எதிர்கால இந் தியா கைநழுவ விட்டுவிடலாகாது.

## சமயப்பயிற்சி

சுதந்திரம் பெற்றுள்ள நம்நாடு இன்றைக்கு சமயச் சார்பில்லாத (Secular Government) ஆட்சியை உடைய தென்று நாம் சொல்லிக் கொள்கிறோம். சமயச் சார்பில்லாத அரசாங்கம் என்பதன் பொருள் சமயப்பற்றற்ற நாஸ்திக அரசாங்கம் என்பதல்ல. ஹிரண்ய கசிபு என்ற அசுரன் ஒருவன் ஒரு காலத்தில் ஆண்டபொழுது மக்கள் தன்னையே வணங்கவேண்டும், தெய்வத்தை வணங்கலாகாது என்ற சட்டம் போட்டான். அதைச் சமயப்பற்றற்ற ஆட்சி என்று பகரலாம். இன்றைக்கு இந்திய சமுதாயத்திலிருக்கும் பல பிணக்குகளில் ஒன்று சமயத்தைப் பற்றியது. அதை நீக்கி வைத்தற்பொருட்டு அரசாங்கம் சிறிது காலத்துக்கு சமயம் ஒன்றையும் சாராததாக இருக்கும். நாளடைவில் மதங்களுக் கெல்லாம் தாய் மதமாயிருக்கும் இந்து மதம் தன்னகத்து இஸ்லாமியம், கிறிஸ்துமதம் போன்ற புற மதங்களுக்குத்

தக்க ஸ்தானங்கள் வகித்துக்கொடுக்கும். அப்பொழுது சர்வமத சமரசம்தான் நமது அரசாங்கத்தின் மதமாக வந்தமையும்.

நமது தேசீயக் கொடியைத் திரும்பவும் ஒருமுறை ஆராய்ந்து பார்ப்போம். தியாகமும் தூய்மையும் தொண்டும் நம் தேசிய லக்ஷியம் என்பதை மூவர்ணங்கள் விளக்குகின்றன. இந்த மூவிதப்பண்புகள் சமய அனுஷ்டானத்துக்கு அஸ்திவாரங்கள் ஆகின்றன. பிறகு அசோக சக்ரவர்த்தியின் தர்ம சக்கரம் தேசீயக் கொடியை அலங்கரிக்கிறது. அசோகர் எல்லாச் சமயங்களையும் அன்புடன் ஆதரித்தார். எல்லாச் சமயங்களும் சமரசபான்மையில் தழைத்தோங்கத் தக்க ஆதரவுகளைக் கொடுத்தார். சமயத்துக்கே தர்மம் என்பது மற்றொரு பெயர். மேலாம் வாழ்வு தத்துவங்கள் யாவும் அதில் அடங்கியிருக்கின்றன. தர்மம் தலைகாக்கும் என்பது கோட்பாடு. தர்மத்தைக் கடைப்பிடித்துத் தட்டழிந்து போனவர் யாருமில்லை. தர்மத்தைப் புறக்கணித்துத் தக்கார் ஆனவரும் எவருமில்லை என்பதைத்தான் உலக சரித்திரம் திரும்பத் திரும்ப நிரூபித்து வந்திருக்கிறது. அறம் காப்பவர் அழிந்துபட்டுப் போவதில்லை என்பதைத்தான் இனியும் நம்நாடு நிரூபித்துக் காட்டுதற்கு இருக்கிறது.

நமது தேசீயக் குறிக்கோளாக सत्यमेव जयते சத்ய மேவ ஜயதே என்னும் வேத வாக்கைப் பொறுக்கியெடுத்திருக்கிறோம். வேதத்தின் போதனைகள் யாவும் ஒரு விதத்தில் இந்த ஒரு மஹாவாக்கியத்தில் அடங்கியிருக்கின்றனவென்று பகரலாம். நாம் நாஸ்திக மார்க்கத்தில் செல்பவர்கள் அல்லர் என்பதற்கு இதுவும் ஒரு சான்று ஆகிறது. சத்தியத்தைக் கடைப்பிடிப்பவன் தானே சத்பொருள்—

அழியாப்பொருள்—ஆகின்றான் என்பது கோட்பாடு. நமது தேசீய லக்ஷியம் இத்தகைய உன்னதமானதாயிருக்க நம்முடைய நித்திய வாழ்க்கையில் சமய அனுஷ்டானம் சிறந்த ஸ்தானம் பெற்றாக வேண்டும். நமது கல்வித் திட்டத்தில் சமய போதனையும் சமய அனுஷ்டானமும் எவ்வளவுக்கெவ்வளவு ஆழ்ந்த இடம் பெற்று வருகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு நாம் விரைவில் மேன்மக்கள் ஆவோம். ஆத்மீக வாழ்க்கை நமது சமுதாயத்தில் எத்தகைய இடம் பெற்று வருகிறது என்பதை விவேகானந்த சுவாமிகள் இங்ஙனம் விளக்குகிறார் :

**'Religion and religion alone is the life of India, and when that goes, India will die inspite of politics, inspite of social reforms, inspite of Kubera's wealth poured upon the head of every one of her children.'**

'அத்யாத்மிக வாழ்க்கை ஒன்றே இந்தியாவுக்கு உயிர். ஞான வாழ்க்கை மறைந்து போனால் இந்தியா அழிந்து பட்டுப்போம். அரசியல்துறையில் எவ்வளவு முன்னேறியிருந்தாலும், சமுதாய சீர்திருத்தத்தில் எவ்வளவு வெற்றி பெற்றிருந்தாலும், குபேரனுடைய செல்வமே நாட்டு மக்களிடத்துக் கொண்டு வந்து குவிக்கப் பெற்றிருந்தாலும் சமய அனுஷ்டானம் அழிந்துபட்டுப்போம் பொழுது இவையாவும் இருக்குமிடம் தெரியாது மறைந்துபோம்' என்று அத்தீர்க்க தரிசி நமக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார். ஞான வாழ்க்கையில் நாம் முன்னேற்றமடைந்த காலங்களில்தான் ஏனைய துறைகளிலும் நாம் முன்னேற்றம் அடைந்து வந்தோம் என்பதை நமது தேச சரித்திரம் நிரூபிக்கிறது. இன்றைக்கு நம் நாட்டுச் சிறுவர்களும் சிறுமிகளும் கற்கும் கல்வியில் சமய போதனைக்கும் சமய அனுஷ்டானத்திற்கும் இடமில்லை.

முடியரசு செலுத்திய ஹிரண்யகசிபு தன்னையே வணங்கும்படி மக்களைத் தூண்டினான். குடியரசு செலுத்துகிற இக்காலத்தவர் அக்கோட்பாட்டைச் சிறிது மாற்றியமைத்திருக்கின்றனர். எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்பது குடியரசுக் கோட்பாடு. எல்லாரும் தங்களைத் தாங்களே பெரியவர் என்று அகங்கரித்துக் கொள்ளவேண்டும் என்னும் கொள்கையில் வந்து முடிகிறது இக்காலத்தவர் போக்கு. இது நமக்கு உதவாது.

எந்தச் சமயத்தைப் புகட்டுவது என்னும் பெரிய கேள்வி பிறப்பதால் ஒரு சமயத்தையும் புகட்டவேண்டாம் என்னும் முடிவுக்குப் பலபேர் அவசரப்பட்டு வந்துவிடுகின்றனர். 'சத்யமேவ ஜயதே' என்னும் கொள்கை எந்தச் சமயத்தைச் சார்ந்தது? எல்லாச் சமயங்களுக்கும் அது பொதுவானது. 'எல்லார்க்கும் அன்பாயிரு' என்னும் கொள்கை எந்தச் சமயத்தைச் சார்ந்தது? எல்லாச் சமயங்களுக்கும் அது பொதுவானது. 'பெரியோர்க்குப் பணிவிடை செய்' என்னும் கோட்பாடு எந்தச் சமயத்தைச் சார்ந்தது? எல்லாச் சமயங்களுக்கும் அது பொதுவானது. 'காலையிலும் மாலையிலும் கடவுளை வணங்கு' என்னும் கோட்பாடு எந்தச் சமயத்தைச் சார்ந்தது? எல்லாச் சமயங்களுக்கும் அது பொதுவானது. தெய்வத்துக்கு எப்பெயரிட்டு அழைப்பது என்னும் பிரச்னை வருகிறது. ஓர் நாமம், ஓர் உருவமும் இல்லாத அவனுக்கு ஆயிரக்கணக்கான பெயர்களைக் கொடுத்து வணங்கலாம். பெயரொன்றும் இல்லாதும் அவனைப் போற்றலாம். 'பாச அடவிக்குள்ளே செல்லாதவர்க்கு அருள்பழுத்தொழுகு தேவதருவே, பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே' என்னும் வணக்கம் எந்தச் சமயத்துக்குரியது? எல்லாச்

சமயங்களுக்கும் அது பொதுவானதே. இதுபோன்ற பிரார்த்தனை வகைகளை ஏராளமாக எல்லாச் சமய சாஸ்திரங்களிலிருந்தும் பொறுக்கியெடுக்கலாம்.

கல்வித்துறையில் சமய அனுஷ்டானத்தைச் செலுத்தாது நம் சமுதாயம் பராமுகமாய் இருப்பது நம்மிடத்து போதியவளவு சிரத்தை இல்லை என்பதைக் காட்டுகிறது. எதிர்காலப் பிரஜைகளை விலங்கு இனங்களாக மாற்றுதற்கு இதுவே உற்ற உபாயமாகும். சென்ற இரண்டொரு தலைமுறைகளாகக் கல்வித் துறையில் சரியான முறையில் சமயம் புகட்டப்பெறாமையினால் வந்துள்ள கேடுகளை இன்றைக்கு நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். இதே போக்கில் கல்வித்துறை இன்னும் சிறிது காலம் செல்லுமாகில் நமது சமுதாயம் தட்டழிந்து போவது திண்ணம். இப்பொழுதே விழிப்படைந்து நமது எண்ணத்தை நாம் மாற்றிக்கொள்ள வேண்டும். தீவிரமான முறையில் சமரச சன்மார்க்க அனுஷ்டானத்துக்குக் கல்வித்துறையில் வேண்டியவாறு இடம் வகுத்துவைப்பது அவசியம்.

## சமுதாயத்தின் பொறுப்பு

கல்வியைப் பற்றிய பொறுப்பு முற்றிலும் அரசாங்கத்துக்குரியது என்பது சுதந்திரநாடு ஒன்றுக்கு ஒவ்வாது. அடிமைப்பட்டுள்ள நாட்டிலே ஆட்சிபுரிபவர் வேண்டுமென்றே கல்வியைத் தங்கள் கைவசம் வைத்திருக்கின்றனர். அறிவுத்துறையில் மக்களை அடிமைகளாக வைத்திருப்பதே அத்தகைய ஆட்சியினருடைய கொள்கையாகும். சுதந்திர நாடுகளிலோ எத்தகைய உணவை உண்பது என்பதை அவரவரே தீர்மானிப்பதுபோன்று எத்தகைய கல்வியைத் தங்கள் குழந்தைகளுக்குத் தருவது என்பதைப் பொது மக்களே தீர்மானிப்பது முறை. ஏழைகளாக இருப்பவர்

அன்னச் சத்திரத்துக்குச் சென்று ஆங்கு அகப்படும் கஞ்சியையோ, கூழையோ, உணவையோ ஏற்கின்றனர். சிறிது செல்வம் படைத்தவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவைத் தாங்களே ஆயத்தப்படுத்திக்கொள்கின்றனர். கல்வித் துறையிலும் மக்களுடைய மனப்பான்மை அங்ஙனம் அறவே மாறியமைவது உசிதம்.

## குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தில்

ஓர் இடத்துக்கு அருளை உண்டுபண்ணுபவர் மக்கள். ஓர் இடத்திலுள்ள அருளை மறைத்துவிடுபவரும் மக்கள். இக்கோட்பாட்டைக் கொண்டே தேவாலயங்கள் உருவெடுக்கின்றன. அல்லும் பகலும் ஏதேனும் ஓர் இடத்தில் ஆராதனை நிகழ்ந்துகொண்டே இருந்தால் அவ்விடத்தில் அருள் சக்தி வியாபகமாகிறது. ஆங்குச் செல்லும் சாதகர்களை நல்வழியில் நடாத்துதற்கு அத்தகைய சூழ்நிலை பெரிதும் பயன்படுகிறது. கொண்டாடுகிற இடத்திலேதான் தெய்வ சக்தி திகழ்கிறது என்பதன் கோட்பாடு இதுவேயாம்.

குழந்தைகள் தெய்வப் பெற்றியுடையவர். தக்க சூழ்நிலையில் வைத்து அவர்களைப் பழக்கி வந்தால் அவர்களிடத்து ஏற்கனவே உள்ள தெய்வத்தன்மையை மேலும் வளர்க்கலாம். பிரதிகூலமான சூழ்நிலையில் அவர்களை விட்டுவிட்டால் தெய்வத்தன்மை அவர்களிடத்திருந்து மறைந்துபோய் விடுவது மட்டுமல்ல; விலங்குத் தன்மை அவர்களிடத்துத் தலையெடுக்கப் பிரதிகூலமான சூழ்நிலையே உற்ற உபாயமாகும். ஒரு பள்ளிக்கூடத்துக்கு முக்கியமாக வேண்டப்படுவது அனுகூலமான சூழ்நிலை. சிறுவர்கள் மகிழ்வுடன் ஆங்குச் செல்லவேண்டும். விளையாட்டுப் போன்ற பலவிதமான செயல்கள் அவர்களை

உற்சாகப்படுத்துகின்றன. காலம் போவதே அவர்களுக்குத் தெரிகிறதில்லை. பகல் வேளை முழுதும் நொடிப்பொழுது போன்று போய்விடுகிறது. இதற்கிடையில் ஆடுவது, பாடுவது, கற்பது, கேட்பது, பேசுவது ஆகிய வெவ்வேறு செயல்கள் ஒன்றன்பின் ஒன்றாக அமைந்து வருகின்றன. தேவாலயத்தில் அதிகாலையிலிருந்து அர்த்தஜாமம் வரையில் பலதரப்பட்ட வழிபாடுகள் அமைவதுபோன்று பள்ளிக்கூடத்தில் குழந்தைகளுக்கு மகிழ்வூட்டும் சம்பவங்கள் பல அமைந்தால் அது நல்ல பள்ளிக்கூடம் ஆகும். பிள்ளைகள் நல்ல முறையிலே ஆங்கு ஆராதிக்கப்படுகிறார்கள் என்றே பகரலாம். பிள்ளைகளின் ஆராதனை முறைகள் ஓங்குமளவு அவர்கள் பெருமக்கள் ஆவார்கள். மக்களை நன்மக்களாக உருப்படுத்துவதற்கு அதுவே உற்ற உபாயம். தேவாலயம் போன்றவைகளும் பிள்ளைகளின் ஆராதனைக்குரியவைகளுமான நல்ல பாடசாலைகளைத் தேடிப்பெற்றோர் தங்கள் பிள்ளைகளை ஆங்கு அனுப்பி வைப்பார்களாக. அத்தகைய பாடசாலைகள் உண்டாவதற்குத் தாங்களே இடம், பொருள், ஏவல் அளித்து உதவி புரிவார்களாக. சமுதாய சேவை என்பதும் அதுவே. கல்வித்துறையில் சீரமைப்பு என்பதும் அதுவேயாம்.



## 7. குருகுல முறையில் கல்லூரிப்படிப்பு

### இப்பொழுது இருந்துவரும் இழுக்கு

இக்காலத்திய இளைஞர் கல்லூரியில் எத்தகைய கல்வி பெறுகின்றனர் என்பது கேள்வி. அறிவுத்துறையில் அவர்கள் தரகுக்காரர்களாகத் தயாரிக்கப்படுகின்றனர். தனக்காகவென்று தரகன் பண்டம் ஒன்றும் வாங்குவதில்லை. யாருடைய பொருளையோ அவன் யாருக்காகவோ வாங்குகிறான். பின்பு தரகுக்காசுமட்டும் தனக்குச் சொந்தம். ஏதோ புஸ்தகங்களில் யாதோ விஷயங்களை மாணாக்கர் மனதில் வாங்குகின்றனர். பரீக்ஷை மண்டபத்தில் செல்லுபடியாகின்றவைகளை மகிழ்வுடன் விடைத்தாளில் பொறிக்கின்றனர். பிறகு கற்றவை யாவையும் சிறிது சிறிதாக மறக்கின்றனர். கல்விமான்கள் என்னும் பட்டம் பெறுதல் அவர்களுக்குக் கிடைத்த தரகு ஆகும். ஆயிரக்கணக்கான இளைஞர் பெற்றுவரும் ஞானப் பேறு இதுவேயாம்.

கொடியொன்று உயரப்போமளவு அதற்குப் பற்றுக்கோடு இன்றியமையாதது. தானாக அது நிமிர்ந்து நிற்க முடியாது. இயற்கையாக வளர்ந்த விருக்ஷத்தை அல்லது ஊன்றிய கழியை அது பற்றி நிற்கும். கல்லூரிப் பட்டதாரிகளும் அத்தகையவர்களே. அன்னவர் பிதிரார்ஜிதசொத்தைப்பற்றி நிற்பர், அல்லது பிறர் கொடுக்கும் உத்தியோகத்தை நாடி நிற்பர். தங்களைத் தாங்களே உருவாக்கிக்கொள்ள அவர்களுக்கு இயலாது. கல்லூரிப் படிப்பில் மேலோங்குமளவு பராதீனத்துக்கும் அவர்கள் முற்றும் வசப்படுகின்றனர்.

எளிய வாழ்வும் உயர்ந்த எண்ணமும் பல்லாண்டுகளாக நமது நாட்டு லட்சியமாய் இருந்து வந்தது. கற்றவர்

அத்தகைய லட்சியத்துக்கு முற்றும் இலக்கு ஆயினர். ஆகையால் அத்தகையவர்க்கு வாழ்வில் பிரச்னை யொன்றும் கிடையாது. இன்றைக்குக் கற்றவர் நிலைமை இதற்கு நேர்மாறானதாகப் போய்க்கொண்டிருக்கிறது. ஆடம்பர வாழ்வும் உரிமைகளில் பெருமிதமான நாட்டமும் இவர்களுக்கு இயல்பாய் அமைந்துவிட்டது. இதன் விளைவாகப் புதிய புதிய பிரச்னைகள் வாழ்வில் வடிவெடுத்து வருகின்றன.

முதியோர்க்குப் பணிந்து நடத்தல் என்னும் பண்பு போய்விட்டது. பணிவு அடிமைகளின் இயல்பு என்ற விபரீத புத்தி படித்தவர்களுக்கிடையில் புகுந்திருக்கிறது. பெற்றோர் முன்னிலையில் பணிவு, சான்றோர் சன்னிதியில் சென்னிசாய்த்தல், வயதில் முதுமைக்கு மரியாதை—இவை போன்ற செம்மைகள் நவீனக் கல்விமான்களிடத்திருந்து விலகிவிட்டன.

முறை வகுத்த வாழ்வை இக்காலத்து வாலிபரிடம் காணமுடியாது. உண்ணுதல், உறங்குதல், உழைத்தல் ஆகியவைகளில் அவர்களிடம் ஒழுங்குப்பாடு இல்லை. காலத்தை வீணே கழிப்பதில் அவர்கள் கைதேர்ந்தவர்கள் ஆய்விட்டனர். தக்க பயிற்சியின்மையே இத்தனைக்கும் காரணமாயிற்று. வாழ்க்கை வேறு, கல்வி வேறு என்ற செயற்கையான பிளவு என்றைக்கு இந்நாட்டினுள் புகுந்ததோ அன்றைக்கே சீர்கேடும் தலையெடுக்க ஆரம்பித்துவிட்டது. வாழ்வு உயிர் போன்றது; கல்வி உடல் போன்றது. உயிரையும் உடலையும் பிரித்துவைத்தால் மனிதன் பிணமாய்விடுவான். இப்பொழுது நமக்குத் தென்படும் இளைஞர் செத்தப்பிணங்களல்ல, நடமாடும் பிணங்கள். உயர்ந்த காரியம் எதற்கும் அவர்கள் உதவமாட்டார்கள்.

மக்கள் கீழ்மையுற்றுவிட்டால் பிறகு மிஞ்சியிருப்பது ஒன்று மில்லை. இத்தகைய கீழ்மையினின்று நமது சமுதாயத்தை மீட்டெடுப்பது நமது குறிக்கோளாகும்.

## குருகுலம்

புஸ்தகத்தில் படிக்கிற படிப்பு புள்ளி விவரங்களைத் தெரிந்துகொள்வதோடு நின்றுவிடுகிறது. பிறரைப் பார்த்துப் பழகும் பழக்கம் வாழ்வுக்குரியதாகிறது. நல்வாழ்வுக்கு முன்மாதிரியாக இருக்கும் ஆசிரியர்கள் கல்லூரிக்கு அருகில் குடும்ப சகிதர்களாக வாழவேண்டும். வயதில் முதிர்ந்த தம்பதிகள் மாணாக்கர்களுக்குத் தாய் தந்தையர்களாய் அமைந்து அவர்களுடைய வாழ்வைச் செப்பனிடலாம். பண்டைக்காலத்து ரிஷி ஆச்ரமமும் இக்காலத்து ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் போன்ற சர்வகலாசாலையமைப்பும் ஒன்று சேர்ந்து, இனி வரும் இந்தியக் கல்லூரிகளாக அமைவது அவசியம். ஒப்பந்த முறையில் ஆசிரியர்கள் வகுப்புகளுக்கு வந்து, அலங்காரமாக வீற்றிருந்து, வகுத்து வைத்த பாடங்களைப் புகட்டிவிட்டு, வேற்றாராக வெளியேகிவிடுவது இன்றைக்கு வழக்கத்தில் இருந்து வருகிறது. மாணாக்கர்களை அவர்கள் பெரிதும் அடையாளம் தெரிந்துகொள்ள மாட்டார்கள். குருகுல அமைப்பிலோ எல்லோரும் சேர்ந்து ஒரு குடும்பம் ஆய்விடுகிறார்கள். மாணாக்கர்களுக்குத் தாங்கள் தாய் தந்தையர் என்ற மனப்பான்மை ஆசிரியர் கூட்டத்தின் மனதில் ஆழ்ந்து படிந்துவிட வேண்டும். அவர்களுடைய ஓய்வு, ஒழிவு, களியாட்டம், உறவு, ஊக்கம், உழைப்பு, வாழ்வின் லட்சியம் ஆகிய எல்லாம் குருகுலத்தில் ஒன்றுபட்டுவிடுகின்றன. தொடர்ந்தமையும் இத்தகைய தூய இணக்கத்தினின்று எல்லா நன்மைகளும் தோன்றுவனவாகும்.

மாணாக்கர்களில் சுமார் ஓராயிரம்பேர் ஒன்றுகூடி ஒரு கல்லூரியிலே வாழ்ந்திருக்கவேண்டும். குருகுல வாசம் செய்து வாழ்வைச் செப்பனிடுவதே அதன் நோக்கமாகும். பொருளாதார நெருக்கடியோ பொருள் வீண்விரயமோ ஏற்படாதிருப்பதற்கு ஓராயிரம் பேருக்குக் குறையாமல் ஓர் இடத்தில் வசிப்பது முற்றிலும் அவசியமாகும். வசதியான வாழ்வுக்குத் தேவையாயுள்ள அனைத்தையும் அப்பொழுது சிக்கனமாக அமைத்துவிடலாம். யந்திரங்களைக்கொண்டு நிறைவேற்றும் காரியங்கள், மானுட உழைப்பால் ஆக வேண்டிய காரியங்கள் ஆகிய இரண்டும் ஆங்குத் தக்க இடம் பெற்றுவரும். ஐக்கிய வாழ்வில் உண்டாகும் அனுகூலங்களுக்கு அத்தகைய குருகுலம் நல்லதொரு எடுத்துக் காட்டு ஆகும்.

கல்லூரியின் அருகிலேயே சுமார் பன்னிரண்டு பேராசிரியர்கள் குடும்ப வாழ்வு வாழ்வார்கள். குடும்ப வாழ்க்கைக்கு அவர்கள் நல்லதொரு எடுத்துக்காட்டு ஆகவேண்டும். சொந்தக் குடும்ப அலுவல்களும் கல்லூரி அலுவல்களும் அந்த ஆசிரியர்களுக்கு ஒன்றேயாகும். சில வேளைகளில் அவர்கள் மனைவி மக்களோடு உணவு உண்பர்; இன்னும் சில வேளைகளில் மாணாக்கர்களோடு உணவு அருந்துவர். பொருளாதாரப் பிரச்னை அதற்கு இடைஞ்சலாகக் குறுக்கே வந்து நிற்காது. ஆசிரியர்களின் தேவைகளையெல்லாம் கல்லூரி தாராளமாக எடுத்து வழங்கிக்கொண்டிருக்கும். நல்வாழ்விலும் கல்வியறிவிலேயும் கண்ணும் கருத்துமாயிருக்கும் ஆசிரியர்களும் தேவைக்கு மிஞ்சிய பொருளில் ஆசை வைக்காதிருப்பார்கள். பண்பாட்டிலே யாண்டும் கண்ணும் கருத்துமாயிருக்கும் சமுதாயம் ஒன்று பொருளின்மீது மிகைபட்ட வாஞ்சை வைக்காது என்பதற்கு இத்தகைய கல்வி ஸ்தாபனம் எடுத்துக்காட்டாக மிளிரும்.

மக்கள் கீழ்மையுற்றுவிட்டால் பிறகு மிஞ்சியிருப்பது ஒன்று மில்லை. இத்தகைய கீழ்மையினின்று நமது சமுதாயத்தை மீட்டெடுப்பது நமது குறிக்கோளாகும்.

## குருகுலம்

புஸ்தகத்தில் படிக்கிற படிப்பு புள்ளி விவரங்களைத் தெரிந்துகொள்வதோடு நின்றுவிடுகிறது. பிறரைப் பார்த்துப் பழகும் பழக்கம் வாழ்வுக்குரியதாகிறது. நல்வாழ்வுக்கு முன்மாதிரியாக இருக்கும் ஆசிரியர்கள் கல்லூரிக்கு அருகில் குடும்ப சகிதர்களாக வாழவேண்டும். வயதில் முதிர்ந்த தம்பதிகள் மாணாக்கர்களுக்குத் தாய் தந்தையர்களாய் அமைந்து அவர்களுடைய வாழ்வைச் செப்பனிடலாம். பண்டைக்காலத்து ரிஷி ஆச்ரமமும் இக்காலத்து ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் போன்ற சர்வகலாசாலையமைப்பும் ஒன்று சேர்ந்து, இனி வரும் இந்தியக் கல்லூரிகளாக அமைவது அவசியம். ஒப்பந்த முறையில் ஆசிரியர்கள் வகுப்புகளுக்கு வந்து, அலங்காரமாக வீற்றிருந்து, வகுத்து வைத்த பாடங்களைப் புகட்டிவிட்டு, வேற்றாராக வெளியேகிவிடுவது இன்றைக்கு வழக்கத்தில் இருந்து வருகிறது. மாணாக்கர்களை அவர்கள் பெரிதும் அடையாளம் தெரிந்துகொள்ள மாட்டார்கள். குருகுல அமைப்பிலோ எல்லோரும் சேர்ந்து ஒரு குடும்பம் ஆய்விடுகிறார்கள். மாணாக்கர்களுக்குத் தாங்கள் தாய் தந்தையர் என்ற மனப்பான்மை ஆசிரியர் கூட்டத்தின் மனதில் ஆழ்ந்து படிந்துவிட வேண்டும். அவர்களுடைய ஓய்வு, ஒழிவு, களியாட்டம், உறவு, ஊக்கம், உழைப்பு, வாழ்வின் லட்சியம் ஆகிய எல்லாம் குருகுலத்தில் ஒன்றுபட்டுவிடுகின்றன. தொடர்ந்தமையும் இத்தகைய தூய இணக்கத்தினின்று எல்லா நன்மைகளும் தோன்றுவனவாகும்.

மாணாக்கர்களில் சுமார் ஓராயிரம்பேர் ஒன்றுகூடி ஒரு கல்லூரியிலே வாழ்ந்திருக்கவேண்டும். குருகுல வாசம் செய்து வாழ்வைச் செப்பனிடுவதே அதன் நோக்கமாகும். பொருளாதார நெருக்கடியோ பொருள் வீண்விரயமோ ஏற்படாதிருப்பதற்கு ஓராயிரம் பேருக்குக் குறையாமல் ஓர் இடத்தில் வசிப்பது முற்றிலும் அவசியமாகும். வசதியான வாழ்வுக்குத் தேவையாயுள்ள அனைத்தையும் அப்பொழுது சிக்கனமாக அமைத்துவிடலாம். யந்திரங்களைக்கொண்டு நிறைவேற்றும் காரியங்கள், மானுட உழைப்பால் ஆக வேண்டிய காரியங்கள் ஆகிய இரண்டும் ஆங்குத் தக்க இடம் பெற்றுவரும். ஐக்கிய வாழ்வில் உண்டாகும் அனுகூலங்களுக்கு அத்தகைய குருகுலம் நல்லதொரு எடுத்துக் காட்டு ஆகும்.

கல்லூரியின் அருகிலேயே சுமார் பன்னிரண்டு பேராசிரியர்கள் குடும்ப வாழ்வு வாழ்வார்கள். குடும்ப வாழ்க்கைக்கு அவர்கள் நல்லதொரு எடுத்துக்காட்டு ஆகவேண்டும். சொந்தக் குடும்ப அலுவல்களும் கல்லூரி அலுவல்களும் அந்த ஆசிரியர்களுக்கு ஒன்றேயாகும். சில வேளைகளில் அவர்கள் மனைவி மக்களோடு உணவு உண்பர்; இன்னும் சில வேளைகளில் மாணாக்கர்களோடு உணவு அருந்துவர். பொருளாதாரப் பிரச்னை அதற்கு இடைஞ்சலாகக் குறுக்கே வந்து நிற்காது. ஆசிரியர்களின் தேவைகளையெல்லாம் கல்லூரி தாராளமாக எடுத்து வழங்கிக்கொண்டிருக்கும். நல்வாழ்விலும் கல்வியறிவிலேயும் கண்ணும் கருத்துமாயிருக்கும் ஆசிரியர்களும் தேவைக்கு மிஞ்சிய பொருளில் ஆசை வைக்காதிருப்பார்கள். பண்பாட்டிலே யாண்டும் கண்ணும் கருத்துமாயிருக்கும் சமுதாயம் ஒன்று பொருளின்மீது மிகைபட்ட வாஞ்சை வைக்காது என்பதற்கு இத்தகைய கல்வி ஸ்தாபனம் எடுத்துக்காட்டாக மிளிரும்.

உண்பது, உறங்குவது, நீராடுவது, நடப்பது, விளை யாடுவது, உறவாடுவது, பணிவிடை செய்வது, பேசுவது, சம்வாதம் செய்வது, கடவுள் வழிபாடு செய்வது, அறிவு வளர்ச்சிக்கு ஏதுவான யோகசாதனம் செய்வது, பிணியாளி களைப் பேணுவது, சமுதாய சேவை செய்வது, உணவு சமைப்பது, பரிமாறுவது ஆகிய இத்தனை விதமான பயிற்சி கள் நித்திய வாழ்வில் மாணாக்கர்களுக்கு ஆசிரியர்களோடு கலந்து அல்லும் பகலும் நடைபெற்றுவரும். ஆசிரியர் குழாம் இத்தனை விதமான பயிற்சிகளிலும் வல்லுநராயிருப்பார்கள். வாழ்க்கைக்கு மக்களை ஆயத்தப்படுத்துவதே குருகுலப் படிப்பின் நோக்கமாகும்.

## சூழ்நிலை

பெரிய கல்விச் சாலைகளெல்லாம் இக்காலத்தில் சென்னை, கல்கத்தா, பம்பாய் போன்ற பெரிய நகரங்களில் அமைக்கப்பெற்றிருக்கின்றன. ஆங்கில ஆட்சிக்கு சிப்பந்தி களாக மக்களை ஆயத்தப்படுத்துவதற்கு அவைகள் இதுகா றும் பயன்பட்டு வந்தன. இன்றைக்குத் தேசீய வாழ்வின் குறிக்கோள் மாறிவிட்டது. நகரங்களின் வாழ்க்கைமுறை யும் பெரிதும் மாறிவிட்டது. மாணாக்கர்களுக்கு நல்ல பயிற்சி பெறுதற்கு நகரங்களில் கிடைக்கும் வசதிகள் மிகக் குறைவு. பொருந்தாத வாழ்வில் அவர்களுடைய மனது சிதறடைந்து போவதற்கு ஏதுக்கள் ஏராளமாயிருக்கின்றன. வெறும் பரீக்ஷைக்குப் பாடத்தைப் புகட்டுதற்காகவென்று இக்காலத்திய கல்லூரிகள் அமைந்திருக்கின்றன. அவை களை நிர்வகிப்பவர்க்கிடையில் வர்த்தக மனப்பான்மை நுழைந்துள்ளது. இத்தகைய நோக்கமோ சூழ்நிலையோ கல்விக்கு உதவாது.

குருகுல முறையில் அமையும் கல்லூரி ஒன்று ஜனக் கூட்டத்துக்கு இடையில் இருக்கலாகாது. நகரங்களும் பட்டணங்களும் அதற்கு உதவமாட்டா. ஆங்கு மாணாக்கர்களுக்கு விளையும் கேடுகளை இன்று கண்கூடாகப் பார்த்து வருகிறோம். பண்டைக்காலத்து ரிஷி ஆச்ரமங்கள் இயற்கை வனப்புக்கிடையில் அமைந்திருந்தன. நதி தீரம், மலைச் சாரல், ஆரண்யம் ஆகிய இடங்களை அவர்கள் பயன் படுத்தினர். செயற்கையுலகம் அல்லாது இயற்கையுலகில் வாழ்வது கல்விக்கு ஏற்ற சூழ்நிலையாகும். இனி, நாம் அமைக்கும் குருகுலக்கல்லூரிகள் ஆங்காங்கு இருக்கும் பட்டணங்களுக்குச் சற்று எட்ட இயற்கையழகு வாய்ந்த சூழ்நிலையில் நிலைபெறுவது முற்றிலும் அவசியம். தேவை யேற்படும்போது நல்ல மருத்துவ உதவியைப் பெறுதற்கு ஒரு பட்டணத்துக்கு அருகில் குருகுலம் இருப்பது பொருந்தும். பின்பு பண்டங்களை விலைக்கு வாங்குதல், சில பிரமுகர்களின் அறிவையும் அனுபவத்தையும் பயன்படுத்துதல் ஆகிய காரியங்களுக்கும் ஒரு பட்டணத்தின் அருகில் குருகுலம் இருப்பது தகும். ஆனால் ஒரு குருகுலத்தின் முதற்கடமை தங்களைத் தாங்களே செப்பனிடுதலாம். தங்களைத் தாங்களே செப்பனிடுதற்கு வெளியுலகத் தொடர்வு அதிகம் தேவையில்லை. ஆமையானது தனது அவயவங்களை உள்ளடக்கியிருப்பது போன்று, மனத் தகத்து உள்ள பண்பாட்டிலேயே மாணவர் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும்.

மானுட உடலுக்கு முட்டையென்பது ஒரு பெயர். கோழிமுட்டை தோன்றுகிறது பிறகு அடைகாப்பதன் மூலம் புதிய உரு அதனுள் உண்டாகிறது. முற்றிலும் வடிவெடுத்த குஞ்சு ஓட்டை உடைத்துக்கொண்டு வெளியே

வருகிறது. அப்படி வடிவெடுப்பதற்கு முன்பு முட்டையின் மேல் ஓடு முற்றிலும் தேவை. புறவுலகில் சம்பந்தப்படாத குருகுலம் அடைகாப்பில் வைத்த முட்டை போன்றது. மானுட உடல் என்னும் முட்டையினுள் மேன்மகன் உரு வெடுக்கும் வரையில் குருகுலம் என்னும் அடைகாப்பு நிகழ்தல் அவசியமாகும்.

## விடுமுறை நாட்கள்

இப்பொழுது நடைபெற்றுவரும் கல்லூரிகளில் வருஷத்தில் செம்பாதி விடுமுறை நாட்களாகப் போய்விடுகின்றன. விடுமுறை நாட்களை நன்கு பயன்படுத்துதல் சிறந்ததொரு கலைஞானமாகும். விடுமுறையைப் பயன்படுத்தத் தெரிந்துகொண்டவன் வாழ்க்கையைப் பயன்படுத்தத் தெரிந்துகொண்டவன் ஆகிறான். நமது நாட்டிலோ விடுமுறை என்னும் பெயரில் வாழ்வில் பெரும்பகுதி வீண் விரயம் ஆய்வருகிறது. அதைப்பற்றிச் சிந்திப்பார் யாருமில்லை. உடலுக்கு உறக்கம் தேவையாயிருப்பது போன்று வாழ்வில் விடுமுறைக்கு இடமுண்டு. மற்று வாழ்நாளை வீண் நாள் ஆக்குவது விடுமுறையன்று. இனியமையும் குருகுலக் கல்லூரியில் விடுமுறை யென்பது புதியதொரு விளக்கம் பெறும்.

குடும்பம் ஓயாது நடைபெற்று வருவது போன்று குருகுலம் ஓயாது நடந்து கொண்டேயிருக்கும். ஓர் அலுவல் மற்றோர் அலுவலாக மாறியமைவதே விடுமுறையின் உட்கருத்து ஆகும். ஆறுமாதத்தில் ஆசிரியர் இப்பொழுது அவசரப்பட்டுப் புகட்டும் அதே பாடம் ஆண்டு முழுதிலும் நிதானமாக நடைபெறும். ஒரு வேளையில் ஏராளமாக உண்ணும் உணவை இரண்டு அல்லது மூன்று வேளைகளில் கொஞ்சம் கொஞ்சமாக உண்டால் அது நன்கு ஜீரண

மாகும். அதனால் உடல் திட்பம் அடையப்பெறும். ஆசிரியர் ஒரு பாடத்தைப் புகட்டிவிட்டு அதை மாணாக்கர் கூட்டம் கூட்டமாய் இருந்து ஆராய்ச்சி பண்ணுதற்கு அவகாசம் கொடுப்பார். இங்ஙனம் கற்பது ஆழ்ந்து கருத்தில் பதியும். உடல் வளர்ச்சிக்கு ஓய்வுமில்லை, அவசரப்படுவதுமில்லை. அறிவு வளர்ச்சியும் அங்ஙனம் அமையும். சிறிது சிறிதாக முறையாகக் கற்பவருக்கு நெடுநாள் ஓய்வு வேண்டியதில்லை. ஓய்வும் உழைப்பும் ஆங்கு சமரசம் பெற்றுவிடுகின்றன.

கல்லூரியை விடுமுறைக்கு மூடிவைப்பது என்பதில்லை. காலமெல்லாம் அது நடைபெற்றுக்கொண்டே இருக்கும். வருஷத்துக்கு ஒருதடவை கல்லூரி முழுதும் புதியதொரு ஊருக்குப் பாடி வாசம் பண்ணப்போய்விடும். ஒரு மாதம் அல்லது இரண்டு மாதம் வேற்றூர் சென்று வசித்து வருவதில் பயிற்சிகள் பல வந்தமையும். கல்வி கற்பதும், பாடி வீடு செல்வதும் சேர்ந்தே அமைந்திருக்கும். கோடை காலத்தில் மலைப்பிரதேசங்களுக்கும் குளிர்காலத்தில் சமவெளியிடங்களுக்கும் போய்வருவது பயன்படும் விடுமுறையாகும். வெவ்வேறு சூழ்நிலைகளில் வெவ்வேறு முறைகளில் மனோமுயற்சிகளையும் தேக முயற்சிகளையும் செய்து வருவதே விடுமுறையென்னும் பெயர் பெறுகிறது.

ஆசிரியர் ஒவ்வொருவரும் தனித்தனியாக ஆண்டுக்கு ஒருதடவை ஒருமாதம் ஓய்வுக்காக வேண்டிய இடங்களுக்குப் போய்வரலாம். ஏககாலத்தில் இரண்டு அல்லது மூன்று பேருக்குமேல் அப்படி ஓய்வை நாடிப் போய்விடமாட்டார்கள். அதனால் கல்லூரி அலுவல்களும் தடைபடாது நடைபெற்றுவரும். கல்லூரி முழுதும் பாடி வீடு போகும் போது ஆசிரியர்களும் அப்படிச் செல்கின்றனர். அது

அவர்களுக்குச் சிறிது ஓய்வு தரலாம். ஆனால் அது விடு முறையென்று கருதப்படமாட்டாது.

உயர்நிலைப்பள்ளியினின்று குருகுலக் கல்லூரிக்கு வரும் மாணாக்கன் ஒருவன் நான்கு அல்லது ஐந்து வருஷங்கள் அக்கல்லூரியிலேயே வசிக்கிறான். ஆண்டுக்கு ஒரு தடவை அவனுடைய பெற்றோர்கள் அவனைக் காணக் கல்லூரிக்கு வருகிறார்கள். அல்லது ஏதேனும் ஒரு தடவை ஒரு வாரத்துக்கு அனுமதி பெற்றுக்கொண்டு அவன் பெற்றோர் இருப்பிடத்துக்குப் போய்வருகிறான். ஆண்டில் அந்த ஒரு வாரத்துக்கு மட்டும் அவன் படிப்பையும் பயிற்சியையும் இழக்கிறான். அது அவனுக்குப் பெரு நஷ்டமாய் விடாது. பன்னிரண்டு வருஷகாலம் ஒருவன் முறையாகக் குருகுல வாசம் செய்வானாகில் அவனுடைய அமைப்பையே மேலானதாகப் புதுப்பித்து விடலாம். அதற்கு உயர்நிலைப் பள்ளியிலேயே குருகுல வாசம் துவங்கவேண்டும். அது சாத்தியப்படாத இடத்தில் கல்லூரியிலாவது ஆழ்ந்து அதைக் கடைப்பிடித்தல் அவசியமாகிறது.

## இராணுவப் பயிற்சி

இடைக்காலத்தில் இராணுவப் பயிற்சியைப்பற்றி நம் நாட்டில் தப்பான அபிப்பிராயம் ஒன்று பரவுவதாயிற்று. அதைப் பெற்றவர்களெல்லாம் முரடர்கள் ஆய்விடுவார்கள் என்றும் இரக்கம் அவர்களிடத்தில் இல்லாது போய்விடும் என்றும் எளியார்களை வாட்டுகிற இயல்பு அவர்களுக்கு வந்துவிடுமென்றும் கருதிவந்தார்கள். ஆனால் அதைப் பற்றிய உண்மை அதற்கு நேர்மாறானது. இராணுவப் பயிற்சியின் மூலம் வீரமும் தீரமும் சேர்ந்து அமைகின்றன. சிறுத்தை மற்ற உயிர்களை வேண்டியவாறு ஏராளமாக வதைக்கிறது. சிங்கம் அங்ஙனம் செய்யாது. தன் உணவுக்கு

வேண்டியதை மட்டும் அது கொன்று ஏற்றுக்கொள்கிறது. மற்றபடி அது கர்பீரமாக நடந்துகொள்ளும். இராணுவப் பயிற்சி பெற்றவன் அக்கிரமத்துக்கு ஆதரவு கொடுக்கமாட்டான்; தானும் அக்கிரமத்தில் பிரவேசிப்பதில்லை. பராக்கிரமம் யாண்டும் அவன்பால் பொலியும். ஏறு என்றும் காளையென்றும் நரசிம்மம் என்றும் இராணுவப் பயிற்சி பெற்றவன் பகரப்படுகிறான்.

இக்காலத்தில் இராணுவப் பயிற்சிக்கு அரசாங்கம் முக்கியமான இடம் அளித்து வருகிறது. குருகுலக் கல்லூரி ஒன்று அந்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக்கொள்ளும். அதிகாலையில் துள்ளிக் குதித்து எழுந்திருத்தல், வீரகர்சனை செய்தல், தனது பேராற்றலை ஞாபகத்துக்குக் கொண்டு வருதல், அணி வகுத்து நிற்றல், நடத்தல், ஐக்கிய நிலையிலிருந்து வினையாற்றுதல், தன்னம்பிக்கையில் ஊறி வளர்தல் இவைபோன்ற பேறு எல்லார்க்கும் கிடைப்பதன்று. நம்நாட்டு இளைஞர் எத்தனைபேர் சீரிய இராணுவப்பயிற்சி பெறுகின்றனரோ அத்தனை தூரம் நம் சமுதாயத்தின் தரம் மேலே போகும். அத்தகைய பயிற்சிபெற்றவர் அரசாங்கப் பொறுப்பை ஏற்பார்களானால் ஆட்சி முறையில் மேன்மை பொலியும்.

இராணுவப் பயிற்சி நம் நாட்டுக்குப் புதிதாக வருவிக்கப்பட்டதன்று. தசரத ராமன் அப்பயிற்சியை நன்கு பெற்ற பின்பே சமுதாயப் பொறுப்பை ஏற்க முன்வந்தான். துவாரகநாத கிருஷ்ணன் பெற்ற பயிற்சியும் அத்தகையது. அவ்விருவரும் தேச சரித்திரத்தை எங்ஙனம் திருத்தியமைத்தனர் என்பது நாடறிந்த விஷயமாகும். வருங்கால இளைஞர்களுக்கு ராமனும் கிருஷ்ணனும் இராணுவத்துறையில் மாதிரி மனிதராக அமைவார்கள். அறம் காக்கும் ஆற்றல் அதினின்று தோன்றுவதாகும்.

## விளையாட்டுக்கள்

விளையாட்டில் வீண்பொழுது போக்காது அல்லும் பகலும், புஸ்தகமும் கையுமாயிருப்பவன் நல்ல மாணாக்கன் என்ற அபிப்பிராயம் இடைக்காலத்தில் நம் நாட்டில் ஆதரவு பெறுவதாயிற்று. உறுதி படைத்த வாழ்வுக்கு விளையாட்டு முற்றிலும் இன்றியமையாதது என்னும் கோட்பாட்டை நம்மவர்கள் மறந்துவிட்டார்கள். சரீரம் மெலிந்து க்ஷீணதசையடைவதே வேறு பல கேடுகளுக்கு மூலகாரணமாகும். சுவர் இல்லாது எப்படி சித்திரம் எழுத முடியாதோ அப்படி உறுதியான உடல் இல்லாது நல்வாழ்வு வாழமுடியாது. உயிர் வகைகள் யாவும் இளமைப்பருவத்தில் விளையாட்டுக்கு முக்கியமான இடம் கொடுத்து வருகின்றன. இளமையில் அவைகள் விளையாட்டாகச் செய்வது முதுமையில் வாழ்க்கைக்குரிய வினையாக வடிவெடுக்கிறது. இரண்டு நாய்க்குட்டிகள் ஒன்றையொன்று கடித்து விளையாடுகின்றன. அவைகளின் எதிர்கால வாழ்வுக்கு அப்பயிற்சி நன்கு பயன்படுகிறது. அக்கோட்பாடு எல்லா உயிர்களுக்கும் பொருந்தும்.

விளையாட்டில் இரண்டு வகைகள் உண்டு. தனி மனிதனது திறமையைக் காட்டுவது ஒன்று. தொகுதி விளையாட்டு என்பது மற்றொன்று. மற்றவர்களோடு ஒத்துழைக்குமளவு தொகுதி விளையாட்டில் வெற்றி கிடைக்கும். சமுதாய உணர்ச்சியை உண்டுபண்ணுவதற்கு அது முற்றிலும் அவசியமானது. நம் இளைஞர்களுக்கு இவ் இருதரப் பயிற்சிகளையும் வழங்குவது உசிதம். விளையாடத் தெரிந்துகொள்ளாத மாணாக்கன் ஒருவன் நல்ல பயிற்சி பெற்றவனாகக் கருதப்படமாட்டான். அதற்கென்று வகுத்துவைத்த நேரங்களில் விதவிதமான விளையாட்டுக்

களில் மாணாக்கர் ஈடுபட்டே ஆகவேண்டும். குருகுலமுறையில் அமையும் கல்லூரிப் படிப்பில் விளையாட்டானது முக்கியமான இடம் பெற்றுவரும்.

போட்டி விளையாட்டுக்களில் எதிர்க் கட்சியைக் கண்ணியமாக நடாத்துதல் மிக முக்கியமானது. இன்றைக்கு அத்தகைய பரந்த பான்மையைக் காண்பது அரிதாகிவிட்டது. புல்லிய நடைமுறையையே பல இடங்களில் கண்டு வருகிறோம். விளையாட்டில் புன்மை படைத்தவன் பிறகு வாழ்க்கையிலும் புன்மை படைத்தவன் ஆவான். நல்ல மனப்பான்மையை வளர்ப்பதற்குப் போட்டி விளையாட்டு சிறந்த சாதனமாகும். வெற்றியையும் தோல்வியையும் சமனாகப் பாராட்டுவது சீரிய செயலாம்.

## ஒழுக்கம்

இக்காலத்திய கல்வித் திட்டம் ஒழுக்கத்தைப்பின் அணியில் எடுத்து வைத்திருக்கிறது. மாணாக்கன் ஒருவன் எதை எண்ணுகிறான், எதில் ஆசை வைத்திருக்கிறான்—என்ற கேள்விகளுக்கும் நவீனக் கல்விமுறைக்கும் ஒருவித மான தொடர்வும் கிடையாது. ஒருவன் எந்த நூலை எப்படிக் கற்றிருக்கிறான் என்பதை மதிப்பிடுவதற்கு மேல், அவன் வாழ்வை மதிப்பிடுவது அவசியமல்ல என்பது இக்காலத்திய கொள்கை. பிறர்க்கு இடைஞ்சல் இல்லாது நடந்து கொள்ளுதலே நல்லொழுக்கம் என்று முடிவு கட்டியிருக்கின்றனர். இது கல்வியின் குறிக்கோள் ஆகாது. மனிதனைப் பண்புடைய நல்ல மனிதன் ஆக்குவதே கல்வியின் லட்சியமாகும். மனிதனுக்கு விழுப்பம் அனைத்தையும் தருவது ஒழுக்கம். எப்படியாவது உயிர் வாழ்ந்திருப்பது மானுடனுக்கு லட்சியமாகாது. நல்லவன் ஆவதே அவ

னுக்கு லட்சியம். ஆதலால் உயிரில் வைத்திருக்கும் பற்று தலைவிட அதிகமான பற்றுதல் ஒழுக்கத்தில் வைப்பது அவசியம்.

எண்ணமும் ஆசையும் சேர்ந்து மனிதனுடைய இயல்பை மாற்றியமைத்து வருகின்றன. மேலான எண்ணமும் தூய ஆசையும் மனிதனை மேலோன் ஆக்கிவிடுகின்றன. எண்ணத்திலும் ஆசையிலும் கீழே இறங்குமளவு மனிதனும் புல்லியன் ஆய்விடுகிறான். மாறுபடுகின்ற இரண்டு விதமான எண்ணங்களோ, இரண்டுவிதமான ஆசைகளோ ஏககாலத்தில் மனதில் உதிக்கமுடியாது. குருகுலவாசத்தில் மாணாக்கன் பெறும்பேறு ஒன்று உண்டு. நல்லெண்ணம் எண்ணுதற்கே சூழ்நிலையானது அவனைத் தூண்டுகிறது. நலன்கள் பலவற்றில் அவன் ஆசை வைக்கும்படி அது அவனை ஏவுகிறது. பழைய ஜன்மாந்தர வாசனையாக வந்துள்ள பல கெட்ட எண்ணங்களும் ஆசைகளும் அவன் உள்ளத்தில் புதைந்து கிடக்கலாம். ஆனால் அவைகள் தலையெடுப்பதற்கு அவகாசம் கிடைப்பதில்லை. வேறு எண்ணங்கள் அவைகளின் வலிவைக் குறைத்து வருகின்றன. புனிதமான எண்ணங்களையும் ஆசைகளையும் பல ஆண்டுகளாகப் பாவித்து வந்தால் புல்லிய பான்மைகள் தாமே பட்டுப்போய் விடுகின்றன. குருகுலவாசம் அளிக்கும் ஒப்பற்ற பேறு இதுவேயாம்.

எண்ணத்தில் ஒருவன் உயர்ந்தவன் ஆய்விட்டால் பிறகு சொல்லிலும் செயலிலும் அவன் உயர்ந்தவன் ஆய்விடுகிறான். சிந்தையானது வித்துப்போன்றது; சொல்லும் செயலும் செடி அல்லது மரம் போன்றவை. வித்து எப்படியோ மரம் செடி கொடிகள் அப்படிப்பட்டவைகளாம். இன்சொல்லே பேசவேண்டும். நற்செயலே புரியவேண்டும்.

என்னும் கோட்பாடுகளுக்கு அடிப்படையாயிருப்பது மாசற்ற மனம். எண்ணத்தின் தொகையும் ஆசையின் தொகையும் சேர்ந்து மனம் ஆகிறது. நல்லெண்ணத்திலும் தூய ஆசையிலும் சிந்தையை வளர்ப்பவன் ஒழுக்கமே வடிவெடுத்தவன் ஆய்விடுகிறான். குருகுல வாசத்தின் வரப்பிரசாதம் இதுவே.

## ஆத்ம சாதனம்

இவ்வுலகோடு சம்பந்தப்படாத துறவியர்க்கே ஆத்ம சாதனம் உரியது என்ற தவறுதலான எண்ணம் உலகில் உலவி வருகிறது. ஆத்ம சாதனத்தின் உட்கருத்தை அறியாதவர்களே அங்ஙனம் ஆரவாரிப்பர். இந்தியப் பண்பனைத்தையும் 'ஆத்ம சாதனம்' என்னும் ஒரு சொல்லில் அடக்கி விடலாம். அதைப் பயிலுமளவு மனிதன் மேலோன் ஆகின்றான். இவ்வுலக வாழ்வை அவன் திறமையுடன் இனிது நடாத்துவான். இங்கு அவனுக்குற்ற நலம் கேடுகளில் அவன் அலைக்கழிக்கப்படமாட்டான். இவ்வுலகினும் உயர்ந்ததொரு நிலை தனக்குச் சொந்தம் என்பதை அவன் உணர்வான். தண்ணீரிலே தோன்றி, தண்ணீரிலே வளரும் தாமரையிலை தண்ணீரில் தோய்வுறாதிருப்பது போன்று நல்ல ஆத்மசாதகன் இவ்வுலகிலே தோன்றி இவ்வுலகிலே வாழ்கிறான். ஆனால் இவ்வுலகில் அவன் கட்டுண்டு போய் விடுவதில்லை.

குருகுலக் கல்லூரியில் நாள்தோறும் மூன்று வேளைகளில் மாணாக்கர்கள் ஆத்மசாதனம் பயிலுவார்கள். சூரியோதயம், உச்சிவேளை, சூரிய அஸ்தமனம் ஆகிய நேரங்கள் இதற்கு முற்றிலும் பொருத்தமானவைகள். இயற்கையில் அது போழ்து சாந்தம் மேலோங்குகிறது. இறை

வணக்கத்துக்குரிய மண்டபத்தில் ஆசிரியர்களும் மாணாக்கர்களும் அமைதியுற்று அமருவர். நல்லதொரு ஆசனம் போட்டு அவர்கள் நிமிர்ந்து உட்காருவார்கள். உடலைத் தூயதொரு ஆலயமாக எண்ணுவர். அதனுள் அறிவு சொரூபமாய் ஆனந்தமயமாய் வீற்றிருக்கும் ஆத்மாவே தங்கள் நிஜசொரூபம் என்பதை அவர்கள் நினைவுக்குக் கொண்டு வருவார்கள். அப்படி நினைவுக்குக் கொண்டு வருவதற்கு ஒவ்வொரு தடவையும் அவர்கள் எடுத்துக் கொள்ளும் நேரம் சுமார் ஐந்து நிமிஷம். ஆனால் இந்த ஐந்து நிமிஷம் வாழ்க்கையில் பயன்படுவது போன்று வேறு எந்த நேரமும் பயன்படாது. மனிதனை உயர்நிலைக்கு உயர்த்தும் நேரம் இது. இவ்வேளையில் கிளப்பிய உயர்ந்த மன நிலையைப் பிறகு மற்ற நேரங்களிலும் நினைவில் வைப்பது சாத்தியமாகிறது. சிறிது நேரத்தில் புசித்த உணவை நெடுநேரம் செமித்துக் கொண்டிருப்பது போன்று மற்ற மனோ முயற்சிகளுக்கிடையில் இவ்வுயர்ந்த எண்ணமும் மனத்தில் தோன்றிக்கொண்டே இருக்கும். இது மனிதனுடைய மாண்பை விரைவில் வளர்க்கவல்லது என்பதை யாரோ சிலரே அறிந்திருக்கின்றனர். ஒப்பு உயர்வற்ற இந்த ஆத்ம சாதனத்தை மாணாக்கர்களுக்கிடையில் புகுத்துதல் குருகுலத்தின் முக்கியமானதொரு நோக்கமாகும்.

## நிர்வாகத் திறமை

கூண்டுக்குள் அடைத்து வைத்து வளர்க்கும் கிளிப் பிள்ளை போன்று ஆய்விட்டார்கள் நவீன இளைஞர்கள். சுய பாஷையை மறந்துவிட்டுச் சொல்லிக் கொடுத்ததை மட்டும் கிளி பேசும். நம் மாணாக்கரும் அத்தகையவரே. நெடுந்தூரம் பறக்கவோ, உணவுதேடவோ, கூடுகட்டவோ

கூண்டுக்குள் வளர்த்த பறவைக்குத் தெரியாது. முற்றிலும் அது பராதீனம் ஆய்விட்டது. இக்காலத்திய இளைஞரும் அந்நிலைக்குக் கொண்டு வரப்பட்டிருக்கின்றனர். வீட்டு அலுவல் எதையும் கவனித்துக்கொள்ள அவர்களுக்குத் தெரியாது. பள்ளிக்கூடத்து நிர்வாகமாவது ஏதாவது தெரியுமாவென்றால் அதுவுமில்லை. வாசிக்கவும், எழுதவும், சிறிது விளையாடவும் தெரியும். சொந்தத் துணிகளைத் துவைக்கவோ, கிழிந்ததைத் தைக்கவோ பலருக்குத் தெரியாது. அதற்கெல்லாம் வசதி வாய்க்காமையினால் அவர்கள் முடவர் போன்று ஆய்விட்டனர். இனி நிலைமை அறவே மாறவேண்டும்.

குருகுலவாசம் நிர்வாகத் திறமையை ஏராளமாக உண்டு பண்ணும். தங்கள் பொருள்களைத் தாங்களே பாதுகாத்துப் பழகுவார்கள். சாமான்களைச் சுத்தமாகவும் ஒழுங்காகவும் வைத்திருப்பதற்குக் குருகுல நடைமுறை தூண்டுதல் செய்யும். சிற்சில வேளைகளில் மாணாக்கர் உணவு சமைக்கப் பழகுவார்கள். எப்பொழுதுமே சமைத்த உணவைப் பரிமாறுவது அவர்களுடைய செயலாகும். வீடு கூட்டிப் பெருக்குதற்கு அவர்களுக்கு வேலையாள் தேவையில்லை தாங்களே அவ்வேலையைச் செய்வார்கள். தோட்டி வேலையிலும் அவர்களுக்குப் பயிற்சி கிடைக்கும். உழைப்பில் உயர்ந்தது தாழ்ந்தது என்பது கிடையாது. அறியாமையால் மனது அங்ஙனம் கருதுகிறது. எல்லாவித அலுவல்களையும் ஊக்கத்துடனும் திறமையுடனும் அவர்கள் செய்து முடிக்கப் பழகுவார்கள்.

நிர்வாகத் தலைவர்களைத் தங்களுள் தாங்களே தேர்ந்தெடுப்பார்கள். பல படைகளாக மாணாக்கர் தங்களைப் பிரித்துக்கொள்வார்கள். குருகுல காரியங்கள் அனைத்தை

யும் அப்படையினர் முறையாக மாறி மாறி எடுத்துக் கொண்டு செய்து முடிப்பார்கள். குடித்தனமோ துரைத் தனமோ என்பது கோட்பாடு. ஒரு சிறிய அரசாங்கத்தை நிர்வகிப்பது போன்று குருகுலத்துக்குரிய பணிவிடைகள் யாவையும் மாணாக்கர்களே ஆற்றி வருவார்கள். எதிர் காலத்தில் சமுதாய நிர்வாகம் எப்படி இருக்கும் என்பதற்கு இக்கல்வி நிலையம் எடுத்துக்காட்டு ஆகும்.

## சமுதாய சேவை

இதுகாறும் நம் இளைஞர் பெற்று வந்த படிப்பில் சமு தாயப் பணிவிடைக்குச் சிறிதும் இடம் தரவில்லை. அதற்கு நேர் மாறாக சமுதாயமே சர்வகாலமும் அவர்கள் பொருட்டு உழைத்து வந்தது. நோயாளி ஒருவன் நிலையில் மாணாக் கர் இன்றைக்கும் இருந்து வருகின்றனர். நோயாளிக்கு மற்றவர் பணிவிடை செய்யவேண்டும். ஆனால் நோயாளி யிடமிருந்து யாரும் எவ்விதமான சேவையையும் எதிர்பார்ப் பதில்லை. அத்தகைய பரிதாபகரமான நிலையில் இக் காலத்திய இளைஞர் இருந்து வருகின்றனர். இது அறவே மாறியமைவது அவசியம்.

பண்டைக் காலத்து குருகுலங்களில் மாணாக்கர் சேவை செய்ய முதலில் கற்றுக் கொண்டனர். மற்ற கல்விகள் அதன் பிறகு வந்தமைந்தன. தாய் தந்தையருக்குப் பணி விடை, குருவுக்குப் பணிவிடை, விருந்தினர்க்குப் பணிவிடை இப்படிப் பணிவிடையானது விரிவடைந்துகொண்டே போயிற்று. இளமையில் கைங்கர்யம் செய்து பழகுகின்ற வர்கள் முதுமையில் சமுதாயத்துக்கு நல்ல தொண்டர் ஆகின் றனர். இளமையில் யாண்டும் பிறரால் பேணி வளர்க்கப் பெற்றவர் முதுமையில் சயநலக்காரர் ஆய்விடுகின்றனர்.

இது வாழ்க்கையைப்பற்றிய தத்துவமாகும். ஆகையால் இளமையில் பணிவிடை செய்து பழகுதலே நல்ல கல்வி முறையாகும். இந்த உயர்ந்த கோட்பாட்டை இனிப் புறக் கணிக்கலாகாது.

சமுதாய சேவை இக்காலத்துக்குப் புதிய முறையில் அமையவேண்டும். கிராமங்களில் பல இன்றைக்கு சுகா தாரத்துறையில் மிகக் கீழான நிலையில் இருக்கின்றன. வீடு, வாசல், வீதியெல்லாம் அழுக்குப் படிந்தும், மலம் நிறைந்தும் கிடக்கின்றன. ஆதலால் இடையிடையே குரு குல மாணாக்கர் வெவ்வேறு ஊர்களுக்குச் சிறு சிறு கூட்டங் களாகச் சென்று தோட்டி வேலை செய்வார்கள்: ஊரிலுள்ள சிறுவர்களை நீராட்டி வைப்பார்கள்; பஜனை பாடிக் கொண்டு வீதி வீதியாகப் போவார்கள்: மக்களைத் திரட்டி வைத்துக்கொண்டு, நல்வாழ்வைப் பற்றிப் புகட்டுவார்கள். இது கல்லூரி மாணாக்கர் செய்யும் சிறந்தொரு கைங்கரிய மாகும். கிராமம் முன்னேற்றமடைவது ஒருபுறமிருக்க மாணாக்கர் இச்சேவையின் மூலம் நல்ல பண்பைப் பெறு வார்கள்.

நம் நாட்டில் ஆலயங்களில் பெரிய உற்சவங்கள் நிகழ் கின்றன. அப்பொழுது ஆயிரக்கணக்கான மக்கள் அவ் விடங்களில் கூடுகின்றனர். ஒழுங்காகக் கோயிலுக்குள் போகவும் வெளியே வரவும் அவர்களுக்குத் தெரியாது. இருக்குமிடத்தைச் சுத்தமாக வைத்திருக்கவும் அவர்களுக் குத் தெரியாது. அவர்களை ஒழுங்காக நடாத்துவதும் நல்ல முறையில் கோயில் தரிசனம் செய்து வைப்பதும் சிறந்த பணியாகும். இத்தகைய திருத்தொண்டையும் இளைஞர் கள் செய்து பழகுவார்கள். சமுதாயத்துக்கும் அவர்களுக் கும் நல்லமுறையில் அங்ஙனம் தொடர்வு ஏற்படும்.

## சுற்றுப் பிரயாணம்

உல்லாசப் பிரயாணம் என்பது ஒன்று இன்றைக்குப் பல பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் வழக்கத்தில் இருந்து வருகிறது. ஆனால் குருகுலக் கல்லூரி ஒன்று அப் படிக் களியாட்டத்துக்காக இரண்டொரு நாள் எங்கேயாவது போய்விட்டு வந்தால் போதாது. விடுமுறைக்குப் பதிலாக ஆண்டுக்கொரு தடவை வேற்றிடத்தில் போய் பாடிவீடு தங்கியிருந்து வரும். அதில் உண்டாகும் அனுபவம் அளப் பரியதாகும். நீலகிரி, கொடைக்கானல் போன்ற இடத்தில் கோடை காலத்தில் போய் இரண்டொரு மாதம் இருந்து வருவது, வசந்த காலத்தில் காசி போன்ற இடத்தில் போய் ஒரு மாதம் இருந்து வருவது ஆகிய பிரயாணம் உடலுக்கு உறுதி தரும்; உள்ளத்தை விரிவடையச் செய்யும். பிரயாணச் செலவு அதிகம் ஆகாதபடி ஏற்பாடு செய்வது சாத்தியம்.

மற்றொரு பிரயாணத்தையும் அதிகப்படி செலவில்லாது செய்து முடிக்கலாம். அதுதான் கடல் பிரயாணம். நமது அரசாங்கத்துக்குச் சொந்தமான கடற்படைக் கப்பல்கள் பல இருக்கின்றன. பயிற்சிக்காக அவைகள் கடலில் இங்குமங் கும் சுற்றித்திரிவது உண்டு. ஒரு கல்லூரி மாணவரின் பயிற்சியின் பொருட்டு அக்கப்பல்களில் ஒன்று வசதியான ஒரு பருவத்தில் பம்பாய், கொச்சி, கொழும்பு, சென்னை, விசாகப்பட்டினம், கல்கத்தா ஆகிய துறைமுகங்களுக்குச் சாமான்ய கட்டணம் வாங்கிக்கொண்டு ஒரு மாதம் சுற்றுப் பிரயாணம் போய்வரலாம். கப்பலில் வழக்கம் போன்று பாடமும் நடைபெறும். ஏனைய பயிற்சிகளும் கிடைக்கும். புதிய ஊர்களையும் ஜனங்களையும் பார்க்கமுடியும். கல் வியோ யாண்டும் வாழ்க்கையோடு சம்பந்தப்பட்டதாகவே இருக்கும். உலக அனுபவமும் புஸ்தகப் படிப்பும் ஒன்றோ டொன்று இணைக்கப் பெற்றிருக்கும்.

**துவிஜன்**

உடல் எடுப்பது முதல் பிறவி. வாழ்க்கை முறையை மேலானதாக மாற்றியமைக்கும்பொழுது அது இரண்டாவது பிறவி. யார் ஒருவன் மேலாம் வாழ்வுக்குத் தகுதியுடையவன் ஆகிறானோ அவன் துவிஜன் அல்லது இருபிறப்பாளன் எனப்படுகிறான். மனிதனை துவிஜன் ஆக்குவது சிறந்ததொரு லட்சியமாகும். நெடுங்காலமாக நம் நாடு இந்த லட்சியத்தைக் கடைப்பிடித்து வந்திருக்கிறது. ஆனால் இன்றைக்கு இளைஞன் ஒருவன் துவிஜனாவது பொருளற்ற ஒரு சடங்காக வடிவெடுத்திருக்கிறது. பொருள் சேராத பல பழக்க வழக்கங்களுள் 'பூணூல் கல்யாணம்' என்பது ஒன்று.

ஆனால் உள்ளபடி மனிதனை துவிஜன் ஆக்கலாம். அது அறிவுடையோரது தனிச் செயல் ஆகும். உடலுடன் கூடியதாக உயிர் ஒன்று பிறப்பெடுக்கிறது. அந்த உடலைப் பேணுதலிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பது உடல் எடுத்துள்ள உயிர் அனைத்துக்கும் பொதுவானது. மனிதனுடைய முயற்சி அத்துடன் நின்றுவிடுமானால் அவன் விலங்குக்கு ஒப்பாகிறான். நவீன மக்களிடத்து விலங்கின் செயலைத்தான் இன்று நாம் பெரிதும் காண்கிறோம். நல்வாழ்வு வாழ்தலில் பயிற்சி பெறாமையே இதற்கெல்லாம் காரணம் ஆகும். குருகுல முறையில் கல்லூரிப் படிப்பை மாற்றியமைத்துவிட்டால் பிறகு சமுதாயமே சில தலைமுறைக்குள் மேலானதாக மாறியமைந்துவிடும்.

பன்னிரண்டு வருஷகாலம் முறையான குருகுலவாசம் செய்யும மாணாக்கன் ஒருவனைப் புதிய மேலான மனிதனாக்கி விடலாம். பிறவியில் வந்துள்ள இயல்பு முற்பிறப்

பில் பெற்ற பயிற்சி என்பதாகிறது. பின்பு இப்பிறப்பில் அமைகின்ற பயிற்சி முன்பு அமைந்த பயிற்சியை மாற்றிவிட வல்லது. விலங்கு இனத்துக்கே பயிற்சியின் மூலம் புதிய பழக்க வழக்கத்தைத் தந்துவிடலாம் என்றால் மானுடர்க்குப் பின்பு எந்த மாறுதலைத்தான் செய்யமுடியாது? நான்கு அல்லது ஐந்து வருஷகாலம் தீவிரமான வாழ்க்கை முறை கல்லூரியில் கையாளப்படும் காலத்தில் ஏற்படுகிற பற்றாக்குறைக்குத் தீவிரமான பயிற்சி என்னும் வேகத்தைக் கொண்டு ஈடுகட்டி விடலாம். மனதுக்குப் பேராற்றலும் பெருவேகமும் உண்டு. தன் முயற்சியால் தன் அமைப்பைத் தானே மாற்றிக்கொள்ள முடியும். ஸம்ஸ்காரத்தின் மூலம் மனிதன் மாறியமைகிறான் என்பது கோட்பாடு. இது பண்டைக்காலத்து இந்தியக் கல்வி முறையின் சிறப்பு இயல்பு ஆகும். அக்கோட்பாடு என்றென்றைக்கும் உண்மையாகிறது. எதிர்கால இந்தியாவின் நலத்திற்காகக் கல்லூரி இளைஞர் பலர் நல்ல ஸம்ஸ்காரத்தை அல்லும் பகலும் உவகையுடன் ஏற்றுக்கொண்டிருப்பார்கள். நாள் ஒரு மேனியும் பொழுது ஒரு வண்ணமும் என்னும் கோட்பாடு அவர்களுடைய உடலுக்கும் உள்ளத்துக்கும் உண்மையிலேயே பொருந்தியிருக்கும். பண்பும் பயனும் வடிவெடுத்த புதிய மனிதர்களாக அவர்கள் குருகுலக் கல்லூரியினின்று சமுதாயத்துக்குத் திரும்பிப் போவார்கள். அத்தகைய நல்ல கல்வி முறை விரைவில் அமைந்தாகவேண்டும்.

# 8. மாணாக்கன்

## இயல்பு

மனிதனுக்கும் மற்ற உயிர்களுக்கும் பெரிய வேற்றுமை ஒன்று உண்டு. மற்ற உயிர்களுக்கு அந்தந்த இனத்துக் கேற்ற இயல்பு இருக்கிறது. நூறு புலிகளை எடுத்துக் கொண்டால் அவைகளுக்கிடையில் புலியின் இயல்பையே காணலாம். நூறு பசுக்களை எடுத்துக்கொண்டால் அவை களுக்கிடையில் பசுவின் இயல்பை மட்டும் காண்கிறோம். இங்ஙனம் ஒவ்வொரு உயிரிடத்தும் அதன் தன்மை விளங்கு கிறது. ஆனால் மனிதனிடத்து நாம் காணும் காட்சி இத் தகையதன்று. நூறு மனிதர்களை ஆராய்ந்து பார்த்தால் எல்லாரிடத்திலும் மனித இயல்பே இருக்கிறதென்று உறுதி கூறமுடியாது. புலியின் இயல்புடைய மனிதர்கள் உண்டு; பாம்பின் இயல்புடையவர்கள் இருக்கிறார்கள்; பசுப் போன்றவர்களையும் காணலாம்; மனுஷத் தன்மை உடைய வர்கள் இருக்கிறார்கள்; யாரோ சிலர் தெய்விக இயல்புட னும் திகழ்கிறார்கள். மனிதர்களாகத் தென்படும் உயிர் களுக்கிடையில் எல்லாவிதமான இயல்புடையவர்களும் இருக்கிறார்கள் என்று இயம்பலாம். இது மனிதனுக் கென்றே அமைந்த சிறப்பு ஆகிறது.

மற்ற உயிர்கள் தங்கள் இயல்புகளை மாற்றிக் கொள்ள முடியாது. பசு புலியைப் போன்று ஆவதும் புலி பசுவைப்போன்று ஆவதும் கிடையாது. ஒவ்வோர் உயிரும் தனக்குரிய இயல்புடனே பிறந்து, வளர்ந்து, வாழ்ந் திருந்து, இறந்துபட்டுப் போகிறது. ஆனால் மனிதனோ தன் இயல்பை மாற்றிக்கொள்ளலாம். எப்பொழுது வேண்டு மானாலும் அதை மாற்றிக்கொள்ளலாம். எவ்வளவு பெரிய

மாறுதல் தன்னிடத்து அமையும்படி வேண்டுமானாலும் செய்து கொள்ள அவனுக்கு முடியும்.

முயற்சிக்கு ஏற்ப மனிதன் தன்னைப் புதிய பாங்குடைய வனாய் அமைத்துக்கொள்ளுகிறான். விரும்பினால் விலங் கின் நிலையிலேயே அவன் இருந்து விடலாம். மகனாக வடிவெடுத்துள்ள அவன் மகனுக்குரிய தன்மைகளைப் பெறக் கூடும். மானுட வடிவத்திலுள்ள தேவனாகவும் தன்னை அவன் செய்துகொள்ள முடியும். அவன் வாழ்ந்து வருகின்ற வாழ்வுக்கு ஏற்ப அவனுடைய இயல்பு மாறுகிறது. ஒரு மனிதன் எத்தகைய வாழ்க்கையை நடத்துகிறான் என்பது மிக முக்கியமானது. அவன் அடையும் மேன்மைக்கும் கீழ் மைக்கும் வாழ்க்கை முறையே முதல் காரணம் ஆகிறது வாழ்க்கையைச் செப்பனிடக் கற்றுக்கொள்வது மிக முக்கிய மானது.

## வாய்ப்பு

நம் கைவசம் பசுவின் பால் இருக்கிறது. இந்தப் பாலினின்று வெண்ணெய் எடுக்க நமக்கு முடியும். அதைத் தயிராக மாற்றிக் கடைவது ஒருமுறை. பாலினின்றே யந்தி ரத்தைக் கொண்டு முதலில் ஆடை எடுத்துப் பிறகு அதை வெண்ணெயாக மாற்றுவது மற்றொரு முறை. எந்த விதத் திலும் பாலின் சாரமாகிய வெண்ணெயைப் பிரித்து எடுத்து விடலாம். இச்செயலை அதிகாலையில் செய்வது சிறந்தது. எல்லா வேளைகளிலும் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுக்க முடியும் என்றாலும் அதிகாலையில் கடையும் தயிரி னின்றே நல்ல முறையில் வெண்ணெய் அகப்படுகிறது. வெண்ணெயைப் பற்றிய இவ்வுண்மை ஒரு விதத்தில் மனித னுடைய வாழ்க்கைக்கு நல்ல உபமானமாக வந்தமைகிறது.

எப்பொழுது வேண்டுமானாலும் மனிதன் தன்னைத் திருத்தி யமைத்துக்கொள்ள முடியும். அந்த முயற்சியை அவன் இளமையிலேயே எடுத்துக்கொள்வானாகில் அதினின்று அவனுக்குப் பெருநன்மை உண்டாகிறது. வாழ்க்கை முறையைப் பற்றிக் கவனம் எடுத்துக்கொள்ளாது தற்செயலாய் அமைந்த போக்கில் வாழ்கின்றவர்களே பலவிதமான இயல்புடையவர்களாகப் போய்விடுகின்றனர். அத்தகையவர்களுக்குக் கடைப்பட்ட இயல்பு, இடை நிலையிலுள்ள இயல்பு, தலைத்தரமான இயல்பு ஆகியவைகள் தற்செயலாய் அமைந்துவிடுகின்றன. ஆனால் இளமையிலேயே நல்ல திட்டம் ஒன்றுக்கு உட்பட்டவர்களாக சிறுவர்கள் வாழ்ந்து வருவார்களாகில் மேலாம் இயல்பு ஒன்றே அவர்களிடத்து மிளிர ஆரம்பித்துவிடும். இளமைப்பருவம் அதற்குத் தகுந்த வாய்ப்பு ஆகிறது. சர்வகாலமும் இளமைப் பருவத்திலேயே யாரும் இருந்துவிடமுடியாது. நாள்தோறும் முதுமையை நோக்கிச் சிறுவன் ஒருவன் பயணம் போய்க் கொண்டிருக்கிறான். இளமையில் இருக்கின்றபொழுது தன்னை நல்ல முறையில் திருத்தி அமைத்துக்கொள்ளும் வாய்ப்பு அவனுக்கு உண்டு. அந்த வாய்ப்பை வீண்போக யாரும் விட்டு விடலாகாது. இக்கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டே, 'இளமையிற் கல்' என்னும் கொள்கை பிறந்தது. கற்றல் என்பது கல் என்னும் அடிச்சொல்லிலிருந்து வந்திருக்கிறது. கல்லுதல் என்றால் கிளறுதல் எனப்பொருள் படுகிறது. மனத்தை முறையாகக் கிளறினால் பண்பட்டுள்ள பூமிக்கு அது ஒப்பாகும். அதனிடத்திருந்து நல்வாழ்வு என்னும் பெரிய விளைவைப் பெறலாம். மனத்தைப் பண்படுத்துவதே கல்வியின் நோக்கமாகும். உலகிலுள்ள பொருள்களைப் பற்றிய புள்ளி விவரங்களைக் கருத்

தில் வாங்குவது அடிப்படைக் கல்வியாகாது; மனதைச் செப்பனிடுவதே அடிப்படைக் கல்வி. இளமை அதற்கு நல்ல சந்தர்ப்பத்தைத் தருகிறது.

இளமையைப் பற்றிய மற்றொரு கோட்பாடு உண்டு. அதையும் ஓர் உபமானத்தைக் கொண்டே விளக்குதல் பொருந்தும். களிமண்ணினின்று நமக்குப் பயன்படும் பல பொருள்களைச் செய்கின்றோம். குழந்தைகள் விளையாடு தற்கு அநேகவிதமான பொம்மைகளைக் களிமண்ணினின்று செய்கின்றோம். தானியங்களைப் பாதுகாத்து வைப்பதற்கு மிடா போன்ற பெரிய மட்பாண்டங்களைச் செய்கின்றோம். சமைப்பதற்கும், நீர் எடுப்பதற்கும் சட்டி, பானை, குடம் போன்றவைகளையும் களிமண்ணினின்று வனைந்தெடுக் கிறோம். கூரை வேய்வதற்கு அதே மண்ணினின்று ஓடு அமைக்கிறோம் சுவர் எடுப்பதற்குச் செங்கல் செய்கின் றோம். இத்தனைவிதமான பொருள்களுக்குக் களிமண் உதவுகிறது. இந்தக் களிமண்ணைப் பண்படுத்துவது மிக முக்கியமானது. எப்பொருளை அதனிடத்திருந்து அமைக்க விரும்புகின்றோமோ அதற்கேற்றவாறு களிமண்ணைப் பண் படுத்தியாகவேண்டும். ஜீவகளை ததும்பும் விக்கிரகத்தை அதனிடத்திருந்து உண்டுபண்ணலாம். அதற்காக அம் மண்ணை எவ்வாறு ஊறவைத்து அதை அரைத்துப் பக்கு வப்படுத்த வேண்டும் என்னும் கோட்பாடு நமக்குத் தெரிந் திருக்கவேண்டும். அதன் உறுதியைப் பற்றி இனி ஆராய் வோம். பண்படுத்தாத களிமண்ணில் செய்யும் செங்கல் சுட்ட பிறகு உறுதியற்றதாய்ப் போய்விடுகிறது. நன்றாகப் பண்படுத்திய களிமண்ணினின்று செய்யும் செங்கல் சுட்ட பின் கருங்கல்லுக்கு நிகராக உறுதியைப் பெற்றுவிடுகிறது. பொருள்களிடத்துப் தென்படும் அழகு, உறுதி, பயன்

ஆகியயாவும் களிமண்ணைக் கையாண்ட விதத்தினின்று உருவெடுத்துள்ளன. களிமண்ணைக் கையாளும் விதத்தைத் தெரிந்துகொள்ளுதல் மிக முக்கியமானது. இந்தக் களிமண்ணின் நிலையில் இருக்கின்றார்கள் சிறுவர்கள். முதிர்ச்சியடைந்த பிறகு சுட்டச்சட்டி போன்று அவர்கள் ஆய்விடுவார்கள். சுடாத களிமண் பருவம் நல்ல வாய்ப்பு. அதை அப்பொழுது எந்தக் காரியத்துக்கு வேண்டுமானாலும் உதவும்படி செய்து விடலாம் களிமண்ணைப் பண்படுத்துவது ஒருவிதக் கலைஞானம். சிறுவர்களுடைய இளமையைப் பண்படுத்துவது அதைவிடப் பன்மடங்கு சிறந்த கலைஞானம். களிமண்ணினின்று உயிரற்ற பொருள்களை உண்டுபண்ணுகிறோம். சிறுவர்களுடைய இளமைப்பருவத்தினின்றோ உயிர்களையே பேருயிர்களாக மாற்றியமைக்கிறோம். அத்தகைய அரும்பெரும் செயலுக்கு இளமைப் பருவம் மிகவும் பொருத்தமானது. ஆதலால் இளமைப் பருவம் கிடைப்பதற்கரிய வாய்ப்பு ஆகின்றது.

## பயிற்சி

கொழுத்திருந்த இளம் காளை ஒன்றை யுவன் ஒருவன் தூக்கிக்கொண்டு இங்குமங்கும் நடந்தான். சாதாரணமாக ஒரு மனிதனால் தூக்கமுடியாத அவ்வளவு பளுவுடையதாக அந்தக்காளை இருந்தது. அந்த யுவன் செய்த செயல் அசாதாரணமானது. அதிசயத்தை உண்டுபண்ணும் அச் செயலைப் பார்த்தவர் வியப்படைந்தனர். மாந்திரிக சக்தியால் அதை அவன் தூக்குகிறானோ என்று ஒரு சிலர் சந்தேகப்பட்டனர். பிசாசின் அல்லது பில்லி சூன்யத்தின் ஏவலால் இம்மனிதன் இங்ஙனம் செய்கின்றானோ என்று வேறு சிலர் வியப்படைந்தனர். இது கண்கட்டி வித்தையாக இருக்கக்கூடுமோ என்று இன்னொரு கூட்டத்தார்

தில் வாங்குவது அடிப்படைக் கல்வியாகாது; மனதைச் செப்பனிடுவதே அடிப்படைக் கல்வி. இளமை அதற்கு நல்ல சந்தர்ப்பத்தைத் தருகிறது.

இளமையைப் பற்றிய மற்றொரு கோட்பாடு உண்டு. அதையும் ஓர் உபமானத்தைக் கொண்டே விளக்குதல் பொருந்தும். களிமண்ணினின்று நமக்குப் பயன்படும் பல பொருள்களைச் செய்கின்றோம். குழந்தைகள் விளையாடு தற்கு அநேகவிதமான பொம்மைகளைக் களிமண்ணினின்று செய்கின்றோம். தானியங்களைப் பாதுகாத்து வைப்பதற்கு மிடா போன்ற பெரிய மட்பாண்டங்களைச் செய்கின்றோம். சமைப்பதற்கும், நீர் எடுப்பதற்கும் சட்டி, பானை, குடம் போன்றவைகளையும் களிமண்ணினின்று வனைந்தெடுக் கிறோம். கூரை வேய்வதற்கு அதே மண்ணினின்று ஓடு அமைக்கிறோம் சுவர் எடுப்பதற்குச் செங்கல் செய்கின் றோம். இத்தனைவிதமான பொருள்களுக்குக் களிமண் உதவுகிறது. இந்தக் களிமண்ணைப் பண்படுத்துவது மிக முக்கியமானது. எப்பொருளை அதனிடத்திருந்து அமைக்க விரும்புகின்றோமோ அதற்கேற்றவாறு களிமண்ணைப் பண் படுத்தியாகவேண்டும். ஜீவகளை ததும்பும் விக்கிரகத்தை அதனிடத்திருந்து உண்டுபண்ணலாம். அதற்காக அம் மண்ணை எவ்வாறு ஊறவைத்து அதை அரைத்துப் பக்கு வப்படுத்த வேண்டும் என்னும் கோட்பாடு நமக்குத் தெரிந் திருக்கவேண்டும். அதன் உறுதியைப் பற்றி இனி ஆராய் வோம். பண்படுத்தாத களிமண்ணில் செய்யும் செங்கல் சுட்ட பிறகு உறுதியற்றதாய்ப் போய்விடுகிறது. நன்றாகப் பண்படுத்திய களிமண்ணினின்று செய்யும் செங்கல் சுட்ட பின் கருங்கல்லுக்கு நிகராக உறுதியைப் பெற்றுவிடுகிறது. பொருள்களிடத்துப் தென்படும் அழகு, உறுதி, பயன்

ஆகியயாவும் களிமண்ணைக் கையாண்ட விதத்தினின்று உருவெடுத்துள்ளன. களிமண்ணைக் கையாளும் விதத்தைத் தெரிந்துகொள்ளுதல் மிக முக்கியமானது. இந்தக் களிமண் ணின் நிலையில் இருக்கின்றார்கள் சிறுவர்கள். முதிர்ச்சி யடைந்த பிறகு சுட்டச்சட்டி போன்று அவர்கள் ஆய்விடு வார்கள். சுடாத களிமண் பருவம் நல்ல வாய்ப்பு. அதை அப்பொழுது எந்தக் காரியத்துக்கு வேண்டுமானாலும் உதவும்படி செய்து விடலாம் களிமண்ணைப் பண்படுத்து வது ஒருவிதக் கலைஞானம். சிறுவர்களுடைய இளமை யைப் பண்படுத்துவது அதைவிடப் பன்மடங்கு சிறந்த கலைஞானம். களிமண்ணினின்று உயிரற்ற பொருள்களை உண்டுபண்ணுகிறோம். சிறுவர்களுடைய இளமைப்பரு வத்தினின்றோ உயிர்களையே பேருயிர்களாக மாற்றி யமைக்கிறோம். அத்தகைய அரும்பெரும் செயலுக்கு இளமைப் பருவம் மிகவும் பொருத்தமானது. ஆதலால் இளமைப் பருவம் கிடைப்பதற்கரிய வாய்ப்பு ஆகின்றது.

## பயிற்சி

கொழுத்திருந்த இளம் காளை ஒன்றை யுவன் ஒருவன் தூக்கிக்கொண்டு இங்குமங்கும் நடந்தான். சாதாரணமாக ஒரு மனிதனால் தூக்கமுடியாத அவ்வளவு பளுவுடையதாக அந்தக்காளை இருந்தது. அந்த யுவன் செய்த செயல் அசாதாரணமானது. அதிசயத்தை உண்டுபண்ணும் அச் செயலைப் பார்த்தவர் வியப்படைந்தனர். மாந்திரிக சக்தி யால் அதை அவன் தூக்குகிறானோ என்று ஒரு சிலர் சந்தேகப்பட்டனர். பிசாசின் அல்லது பில்லி சூன்யத்தின் ஏவலால் இம்மனிதன் இங்ஙனம் செய்கின்றானோ என்று வேறு சிலர் வியப்படைந்தனர். இது கண்கட்டி வித்தை யாக இருக்கக்கூடுமோ என்று இன்னொரு கூட்டத்தார்

ஐயம்கொண்டனர். ஆனால் அந்த யுவனுடன் எப்பொழுதும் பழகி வந்திருந்த நண்பர்களுக்கு வியப்போ, ஐயமோ உண்டாகவில்லை. அவனுடைய முயற்சியை அவர்கள் வெறும்னே பாராட்டினர். கொழுத்த காளையைத் தூக்குதற்கு அவனுக்கு வலிவு எங்கிருந்து வந்தது என்பதை அவர்கள் அறிந்திருந்தனர்.

காளையானது கன்றுக்குட்டியாக இருந்தபொழுது அதைத் தூக்கி நடந்து பழகினான். அந்தப் பயிற்சியை அவன் நாள்தோறும் கடைப்பிடித்து வந்தான். தன் தேகப் பயிற்சிக்கு ஏற்ற சத்துடைய நல்ல உணவையும் அவன் உண்டுவந்தான். கன்று வளர்ந்து பளுவில் அதிகரித்துக் கொண்டே வந்தது. பெரும் பாரத்தைத் தூக்கி நடக்கும் உறுதிப்பாடும் அந்த யுவனிடம் வளர்ந்து வந்தது. இதுவே அச்செயலுக்கு அடிப்படையாயிருந்த உண்மை. விஷயம் தெரியாதவர்கள் பொருளற்ற முறையில் பலவிதமாக அதற்கு வியாக்கியானம் கொடுக்க எண்ணினார்கள். பயிற்சியால் மனிதன் எவ்வளவுதூரம் முன்னேற்றம் அடையலாம் என்பதற்கு அந்த யுவனுடைய செயல் தக்கதொரு சான்று ஆகும். மனிதன் எதைப் பெற விரும்பினாலும் அதற்குப் பயிற்சி முக்கியமானதொரு உபாயம் ஆகிறது. பழக்கத்தால் பலவிதமான ஆற்றல்களை மனிதன் பெற்றுவிடலாம். உடல் பயிற்சியில் பல பகுதிகள் இருக்கின்றன. இடைவிடாது அப்பயிற்சிகளைச் செய்து உடலைப் பண்படுத்தவும் பலப்படுத்தவும் முடியும். அதே போன்று மனோ முயற்சிகள் பல இருக்கின்றன. அவைகளை முறையாகச் செய்வதினின்று மன இயல்பை வேண்டியவாறு மாற்றியமைக்கலாம். அறிவுத் திறனைப் பெறுதற்கும் பயிற்சி இன்றியமையாதது. முறையாக எண்ணுதல், முறையாக ஓர்தல், முறையாக

ஆராய்ச்சி செய்தல், முறையாக ஓதுதல் ஆகியவைகளைக் கையாளுவதால் மனிதன் அறிவைத் தீட்ட முடியும். இத்தனை விதமான பாங்குகள் பயிற்சியினின்று வருகின்றன. நல்ல பயிற்சிகளில் பிரவேசிப்பதற்கு இளமைப்பருவம் மிக வசதியானது. எத்தகைய பயிற்சியில் ஈடுபட்டாலும் அதைச் செவ்வனே செய்து முடிப்பதற்கும் அதில் ஆழ்ந்து முன்னேற்றம் அடைதற்கும் இளமைப்பருவம் மிகவும் அனுகூலமானது. இக்காரணத்தை முன்னிட்டும் 'இளமையிற்கல்' என்னும் கோட்பாடு வந்துள்ளது.

களிமண்ணில் பலவிதமான வஸ்துக்களைச் செய்கின்றவர்கள் அழகு நிறைந்த சித்திரங்களையும் அதன் மீது தீட்டலாம். அப்படித் தீட்டிய பிறகு அதைச் சூளையில் வைத்துச் சுட்டு விட்டால் பிறகு அச் சித்திரங்கள் அழிந்துபட்டுப் போகா. ஆனால் சுட்டெடுத்த ஓட்டின்மீது சித்திரங்களை அமைப்பது சுலபமானதன்று. பச்சைக்களிமண் போன்று பசையுடையது சிறுவர்களுடைய இயல்பு. அவர்களுடைய இயல்பைப் பழக்கத்தால் வேண்டியவாறு திருத்தியமைக்கலாம். முதுமை வந்தான பிறகு இயல்பை மாற்றுவது எளிதன்று. இளமையில் வேண்டியபடியெல்லாம் சிறுவர்களின் வாழ்வு வணங்கியமைகிறது. நல்ல பயிற்சிகளைப் பெறுதற்கு அத்தருணம் சாலச் சிறந்தது. பயிற்சியின் மூலம் பாலர்களை எப்படி வேண்டுமானாலும் சீர்ப்படுத்தி அமைக்கலாம்.

## ஒழுங்குப்பாடான வாழ்வு

இக்காலத்திய இளைஞர்களுடைய வாழ்க்கையில் ஒழுங்குப்பாட்டைக் காண்பது அரிதிலும் அரிதாய்விட்டது. நாள்தோறும் தங்களுக்குத் தோன்றியவாறெல்லாம் புதிய

புதிய செயல்களில் அவர்கள் ஈடுபடுகின்றனர். மனம் போன போக்கிலெல்லாம் அவர்கள் போய்க்கொண்டிருக்கின்றனர். அதைச் சுதந்திர வாழ்வென்றும் அவர்கள் தவறுதலாக எண்ணிக்கொள்கின்றனர். காற்றில் சிதறடைந்து போகும் மேகம்போன்று அவர்களுடைய வாழ்வு அதன் மூலம் சின்னாபின்னமடைகின்றது.

இயற்கையில் பருவங்கள் வருவதிலும், பூமி, சந்திரன், நட்சத்திரங்கள் முதலிய கோளங்கள் சுழலுதலிலும் ஒழுங்குப்பாடு ஒன்று இருக்கிறது. இயற்கையின் பெருமை ஒழுங்குப்பாட்டில் இருக்கிறது என்று இயம்பலாம். தங்கள் வாழ்வைச் செப்பனிட விரும்பும் சிறுவர்கள் ஒழுங்குப்பாடே வடிவெடுத்தவர்கள் ஆகவேண்டும். அதிகாலையில் எழுந்திருப்பது ஒழுங்குப்பாட்டுக்கு இன்றியமையாத ஆதாரமாகும். சூரியோதயத்துக்கு முன்பே சிறுவர்கள் படுக்கையினின்று எழுந்திருக்கவேண்டும். தூக்கத்துக்காகவென்று ஒதுக்கி வைக்கும் நேரம் வயதை அனுசரித்துச் சற்று ஏற்றத்தாழ்வு உடையதாகின்றது. சின்னஞ்சிறு வயதிலிருக்கும் பாலகன் ஒருவனுக்கு ஒன்பது மணிநேரம் தூக்கம் தேவையாகிறது. ஆரோக்கியமான முதியவர் ஒருவருக்கு நான்குமணிநேரம் தூங்கினால் போதுமானது. சிறுவர்கள் சிறிது சிறிதாகத் தூக்கத்தை வென்று பழகவேண்டும். அதற்கு அதிகாலையில் எழுந்திருப்பது முதற்படி ஆகிறது. உணவு குறைந்தால் உடல் உறுதி கெட்டுப்போய்விடும். உறக்கம் குறைந்தால் உடல் வளர்ச்சி தடைப்படும்; மனது தெளிவு அடையாது. இனி மிகைபட்ட உறக்கத்தால் உடல் வளர்ச்சி அடையும்; ஆனால் மனது மந்த நிலைக்குப் போய்விடும். மனத்தைத் தெளிவாக்குவது மக்களுக்கு முக்கியமான செயல். உடலுக்குத் தேவையாய்

இருக்கும் உறக்கத்தை இரவில் முற்பகுதியில் கொடுக்கலாம். வைகறையில் துயில் எழுந்திருத்தலைச் சிறுவர்கள் ஒரு நாளும் புறக்கணித்து விடலாகாது. அதிகாலையில் எழுந்திருப்பவர்கள் மனத்தெளிவு அடைகின்றனர். பிறகு அன்று இரவு படுக்கப்போகும் பரியந்தம் வாழ்க்கையின் செயல்களை வகையுடன் வகுத்துவைக்க வேண்டும். உண்பது இன்னின்ன வேளைகளில், ஓய்வு எடுத்துக்கொள்ளுதல் இவ்வளவு நேரம், மனோ முயற்சிக்கென்று ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் நேரங்கள், தேகப்பயிற்சிக்காகவென்று குறித்துள்ள நேரம்—ஆகியவைகளில் ஒழுங்குப்பாடு இருக்க வேண்டும். ஒவ்வொரு செயலையும் அதற்கென்று குறித்து வைத்துள்ள வேளையில் செய்து பழகினால் உடல் அமைப்பிலும் மன அமைப்பிலும் ஒழுங்குப்பாடு வந்துவிடுகிறது. திறம்படப் பல செயல்களை நாள்தோறும் செய்து சாதிக்கச் சிறுவர்களுக்கு முற்றிலும் இயலும். நல்ல கடிகாரம் முறையாகத் தன் வேலையைச் செய்வது போன்று சிறுவர்களுடைய நித்திய கடமைகள் சிறிதேனும் முறை பிறழாது நிகழ்ந்து வருவது அவசியமாகிறது. தின்பண்டங்கள் அகப்படும் வேளைகளிலெல்லாம் உண்ணுதல், தங்களுக்குத் தோன்றிய வேளைகளிலெல்லாம் வீண்காலம் போக்குதல், சோம்பித் திரிதல், பயன்படாப் புன்மொழிகளைப் பலருடன் கூடிப் பேசிக்கொண்டிருத்தல் ஆகிய செயல்கள் ஒழுங்குப்பாடுடைய வாழ்க்கைக்குப் பேர் இடைஞ்சல்கள் ஆகின்றன. குறிப்பிட்ட வேளைக்கே பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டும். நெடுநேரத்துக்கு முன்பே அங்குச் சென்று வெறுமனே காத்திருப்பது ஒவ்வாது. வேளைக்குப் பிந்திப் போவதும் முறையன்று. வீணாகக் கழித்த நேரத்தைத் திரும்பவும் பெற்றுவிடமுடியாது. ஒவ்வொரு நொடிப்

பொழுதையும் முறையாகப் பயன்படுத்துவது மிக முக்கிய மானது.

## பெற்றோரைப் பேணுதல்

*சிறுவன் ஒருவன் தன்னை மாண்புடையவனாக மாற்றி யமைத்துக்கொள்ள முயன்று வரும்பொழுது அவனுக்கு மாணாக்கன் என்னும் பெயர் வருகிறது. மாண்பைத் தன் னகத்து ஆக்கிக்கொண்டிருக்கிறான் என அது பொருள் படுகிறது. பெற்றோரைப் போற்றுதல் அதற்கு முற்றிலும் அவசியமாகிறது. மரத்தில் தோன்றிய பிஞ்சு ஒன்று கனிந்த கனி ஆகும் பரியந்தம் அந்த மரத்தையே சார்ந்திருக் கிறது. அதைத் தவிர அதற்கு வேறு கதியில்லை. மரத்தி னிடத்திருந்தே தன் வளர்ச்சிக்கு வேண்டிய சாரத்தை அது பெற்றுவருகிறது. கனிவதற்கு முன்பு மரத்தைவிட்டு அது பிரிந்துபோனால் அதன் வளர்ச்சி தடைபட்டு விடுகிறது. நல்ல கனியாக அது உரு எடுக்க முடியாது.*

*இக்கோட்பாடு மற்றொரு விதத்தில் மக்களுக்கிடையில் அமைந்துள்ளது. சிறுவன் பிஞ்சுக்கு ஒப்பானவன்; பெற் றோர் அதை உரு ஆக்கும் விருக்ஷம் போன்றவர். மாணாக் கன் தனது மனப்பான்மையாலும் செயலாலும் பெற்றோர்க் கும் தனக்கும் உள்ள இணக்கத்தை நினைவூட்டுகிறான். அவன் அடையவேண்டிய வளர்ச்சி மனநிலையில் இருக் கிறது. பெற்றோரிடம் அவன் கொண்டுள்ள பக்தி அவனைப் பண்படுத்துகிறது. அவனுடைய நடைமுறையைக்கண்டு களிப்புறும் பெற்றோர்களுடைய எண்ணமும் அவனுடைய மன வளர்ச்சிக்குப் பேராதரவு தருகிறது. மனம், மொழி, மெய் என்னும் மூன்று கரணங்களை உடையவன் மனிதன். இந்த மூன்றின் மூலமாகவும் மாணாக்கன் தாய் தந்தையரை*

வணங்கக் கற்றுக்கொள்ளவேண்டும். ஐந்து வயதுக்கு மேற்பட்ட சிறுவன் தாய் தந்தையரைத் தரையில் வீழ்ந்து வணங்கக் கடமைப்பட்டிருக்கிறான். தன் மனத்தகத்துள்ள எண்ணத்தை இத்தகைய செயல் உறுதிப்படுத்துகிறது. தான் தாய் தந்தையருக்கே உரியவன் என்பதை அத்தகைய வணக்கத்தின் மூலம் உறுதிப்படுத்துகிறான். இது மெய் அல்லது காயத்தால் செய்யும் வணக்கமாகிறது. அதற்கு மேல் காயத்தால் அவன் தாய்தந்தையர்க்குப் பணிவிடை செய்ய முடியும். பணிவிடை செய்யும் பயிற்சி ஐந்து வயது பூர்த்தியானதும் துவங்கவேண்டும். குற்றேவல் புரிகின்ற முறையில் தாய் தந்தையர்க்குச் சிறு பணிவிடைகள் பல வற்றைச் சிறுவன் செய்யமுடியும். நாள்தோறும் அவன் அதை மகிழ்வுடன் நிறைவேற்றக் காத்துக்கொண்டிருக் கிறான். தாய் தந்தையருடைய விருப்பத்துக்கு முரண் பட்ட எண்ணம் எதுவும் அவனுடைய மனத்தினூடு உண் டாகலாகாது. உடல் வேறு எனினும் மன நிலையில் சிறுவன் யாண்டும் பெற்றோரைச் சார்ந்திருப்பவன் ஆகின்றான். பெற்றோர் எதைச் செய்யவேண்டுமென்று தனக்குக் கட்டளையிடுகின்றார்களோ அதையே அவன் மகிழ்ந்து நிறைவேற்றவேண்டும். தனக்கு இடும் கட்டளையில் பெற் றோர்கள் முறைதவறிப் போய்விட்டால் அதனால் மாணாக்க னுக்கு ஒரு கேடும் வந்துவிடாது. முறைதவறிய கட்டளையை யும் முழுமனதோடு நிறைவேற்றுவது அவனுடைய சீரிய செய லாகும். வேடன் அம்பை எய்கிறான். இலக்கைவிட்டு அம்பு தவறிப் போய்விட்டால் அது அம்புக்குச் சிறுமையாகாது. வேடன் கையில் கருவியாய் இருப்பதே அதற்கு அமைந்த சிறப்பு ஆகும். பெற்றோர் கையில் கருவியாயிருப்பதே சிறுவ னுடைய சிறப்பு ஆகிறது. இப்படிச்செய்து வருங்கால் மனம்,

மொழி, மெய் ஆகிய திரிகரணங்களால் அவன் பெற்றோரைப் போற்றுபவன் ஆகிறான். பெற்றோரைப் போற்றாது பெருநிலைக்கு வந்தவர் யாரும் இதுவரையில் உலகில் இருந்ததில்லை. பெற்றோரைப் போற்றிக் கீழ்மையடைந்தவரும் இதுவரையில் உலகில் இருந்தது கிடையாது. பெற்றோரைப் போற்றும் செயலில் தீவிர நிலைக்குப் போகுமளவு சிறுவன் ஒருவன் நல்ல மாணாக்கனாக மாறியமைகின்றான்.

## குருபக்தி

தாய் தந்தையரைப் போற்றிப் பழகிய மாணாக்கன் அப்பயிற்சியுடன் நின்றுவிடுவதில்லை. அதை இன்னும் விரிவுபடுத்துகிறான். மாணாக்கனுடைய அறிவு வளர்ச்சிக்கு ஏதுவாய் இருப்பவர் ஆசிரியர். ஆசிரியரிடமிருந்து சிறுவன் மனபரிபாகத்தைப் பெறுகிறான். அது வியாபார முறையில் அமைவதன்று. கொடுத்த விலைக்கேற்ற பொருளை எதிர்பார்ப்பது வியாபாரம். மனபரிபாகமே அதை நாடுபவனுடைய மனத்தூய்மைக்கும் பணிவுக்கும் ஏற்றதாகிறது. தாய் தந்தையரைப் பேணுவது போன்றே குருபக்தியையும் வளர்ப்பது அவசியமாகிறது. குருபக்தி மேலோங்குமளவு மனத்தெளிவு உண்டாகிறது; மாணாக்கன் மனத்தினுள் மாசு இல்லாதவன் ஆகின்றான். அத்தகையவனுக்கு ஆசிரியருடைய ஆசியும் இயல்பாகவே ஊற்றெடுத்து வருகிறது. குருபக்தி இல்லாதவனுக்குப் பிறவிப்பேறாக அமைந்துள்ள அறிவு தானே மழுங்கிப் போய்விடுகிறது. குருபக்தியுடையவனுக்குப் பிறவியிலேயே அறிவு அமையாது போய்விட்டாலும் நாளடைவில் அது உரு எடுக்க ஆரம்பித்துவிடுகிறது. அறிவை வளர்ப்பதற்கு குருபக்திக்கு நிகரான உபாயம் இல்லை. தாய் தந்தையருக்குத் தருகின்ற

வணக்கத்தையும், அதற்கு மேலான வணக்கத்தையும் குரு விடம் காட்டுவது சான்றோர்களுடைய செயலாக இருந்து வந்திருக்கிறது.

ஜகத்குரு ஆதிசங்கரருக்கு முக்கியமான சிஷ்யர்கள் நான்கு பேர் அமைந்திருந்தனர். அவர்களில் தோடகாசாரி யர் என்பவர் ஒருவர். ஆரம்பத்தில் அவர் அறிவிலியா யிருந்தார். புகட்டுவது ஒன்றும் அப்பொழுது அவருக்கு விளங்காதிருந்தது. ஆனால் குரு பக்தி அவரிடம் மிகைபட இருந்தது. குருபக்தியில் நாளடைவில் நிறைஞானம் அவருக்கு வந்துவிட்டது. ஏகலைவன் என்பவன் குருபக்திக்கு மற் றொரு சான்று ஆகிறான். துரோணாச்சாரியரிடம் வில் வித்தை கற்க அவன் சென்றான். ஆனால் ஆசாரியர் அவ னுக்கு அதைக் கற்பிக்க மறுத்துவிட்டார். துரோணாச்சாரி யரிடம் குருபக்தி வைத்து ஏகலைவன் அதை முற்றும் கற்று விட்டான். அர்ஜுனனுக்கு அவன் நிகர் ஆய்விட்டான். அதை அறிந்த துரோணாச்சாரியர் ஏகலைவனுக்கு அஸ்திர வித்தையில் திறமை எப்படி வந்தது என்று கேட்டார். 'தங்களிடம் கொண்ட பக்தியால்' என்றான் அவன். 'அப் படியானால் குருதக்ஷிணை கொடுப்பாயா?' என்றார் துரோ ணர். ஏகலைவன் அதற்கு இசைந்தான். வலதுகைப் பெருவிரலை தக்ஷிணையாக அவர் வாங்கிக்கொண்டார். மாணாக்கன் மகிழ்வுடன் அதைக் கொடுத்தான். அவ னுடைய குருபக்தியை உலகுக்கு எடுத்துக்காட்டுதற்கு துரோணர் அவ்விதம் செய்தார். சில வேளைகளில் குரு ஸ்தானத்தில் இருப்பவர் மாணாக்கனுடைய வணக்கத்துக் குத் தகுதியற்றவராக இருக்கலாம். ஆனால் அவர் வணக் கத்துக்குத் தகுதியற்றவர் என்ற எண்ணம் மாணாக்க னுடைய மனதில் உதிக்கலாகாது. 'எனக்குக் கல்விபுகட்

டும் ஆசிரியரிடத்தில் குணக்கேடு ஏதோ இருக்கிறதென்று குற்றம் காணும் மனப்பான்மை என் மனத்தகத்து வந்துவிட லாகாது. குணத்தையே காணும் நல்லியல்பு என் உள்ளத் தில் வடிவெடுக்கவேண்டும். அடக்க ஒடுக்கத்துடன் ஒழுகி ஆசிரியரிடமிருந்து நல்லறிவை வாங்குவதே என் கடமை' என்று மாணாக்கன் எண்ணிக்கொள்ளவேண்டும். இத் தகைய இயல்பை வளர்த்துவரும் மாணாக்கன் நல்ல மாணாக்கனாக உரு எடுத்து வருகிறான்.

## புலனடக்கம்

வாழ்க்கையைப் பற்றிய மற்றொரு மேலாம் உண்மை உண்டு. அவ்வுண்மை கீழ்நிலையில் இருக்கும் உயிர்களுக் கிடையில் உடலமைப்போடு நின்றுவிடுகிறது. மேல்நிலைக்கு வந்துள்ள உயிர்களுக்கிடையில் அது மன அமைப்பாக மிளிர் கிறது. சிறிய செடி ஒன்றுக்கு அதன் இளமையில் போதிய உணவு அதிகப்படாது போய்விட்டால் பெரிய மரமான பிறகு எவ்வளவு அதிகமான உணவை ஏற்றாலும் அது உறுதியான மரமாகாது. இளமைப் பருவத்தில் நல்ல உணவைப் பெறாத கன்று ஒன்று காளையான பிறகு எவ் வளவு நல்ல உணவு ஏற்றாலும் அது திறமை வாய்ந்த ஏறு ஆகாது. மக்களுக்கிடையில் சிறுவர்களும் சிறுமிகளும் குழந்தைப் பருவத்தில் உடலுக்குத் தேவையாய் இருக்கிற நல்லுணவைப் பெற்றாகவேண்டும். அந்த வாய்ப்பு அவர் களுக்கு அமையாது போய் விட்டால் ஆயுள் காலமெல் லாம் அவர்கள் உடல் திட்பம் குன்றியவர்கள் ஆய்விடு வார்கள். உடல் அமைப்பிலும் மேலானது மன அமைப்பு. மன வளர்ச்சிக்கேற்ற பயிற்சி உண்டு. உடல் வளர்ச்சிக்கு உணவு இருப்பது போன்று மனதைப் பண்படுத்தும் பயிற்சி இருக்கிறது என்கின்ற கோட்பாட்டைப் பலர் அறியாதிருக்

கின்றனர். அறியாமையினால் அவர்கள் விலங்கு நிலையிலேயே நின்றுவிடுகின்றனர். மனத்தினுள் நாம் ஊட்டும் எண்ணமும் உணர்ச்சியும் சேர்ந்து மனதுக்கு ஆதரவு ஆகின்றன. எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் உண்டு பண்ணுதற்கு ஐம்பொறிகளும் வாயில்களாய் இருக்கின்றன. இக்கோட்பாடு

> சுவையொளி ஊறுஓசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே உலகு

என்னும் பொய்யாமொழியாக வடிவெடுத்திருக்கிறது. இவ்வைந்தின் வாயிலாக மனம்போனபோக்கில் மாணாக்கன் போய்விடலாகாது. புறவுலகோடு தொடர்வு வைப்பதற்கு இவ்வைந்தையும் வாயிலாகக்கொண்டே மனது இயங்குகிறது. இவ்வைந்தையும் முறையாகக் கட்டி ஆண்டு பழகுதல் வேண்டும் என்பது கோட்பாடு.

> பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
> நெறிநின்றார் நீடுவாழ் வார்.

என்னும் மறைமொழியாக அப்புலனடக்கம் வடிவெடுத்துள்ளது. இவ்வைந்தையும் நன்றாகக் கட்டி ஆளுகின்றவனே ஆண்மை படைத்தவனாகின்றான். எதற்கும் தளராத உறுதி அவனுக்கு உண்டாகிறது. எதையும் உள்ளபடி அறிந்துகொள்ளும் நல்லறிவு அவனுக்கு வருகிறது. துன்பத்துக்கு ஏதுவான நிகழ்ச்சிகள் வாழ்க்கையில் தற்செயலாய் வந்தமையுங்கால் அவைகளைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளும் திட்பம் அவனுக்கு வருகிறது. நோய்க்கு இடம் தராத உடல் வலிவும் மனக்கிலேசத்துக்கு இடம் தராத மனபரிபாகமும் அடையப்பெற்றவனே தலைமாணாக்கன். இந்த மேலாம் பாங்குகளைப் பெறுதற்குப் புலனடக்கம் ஒன்றே உற்ற உபாயம்.

ஐம்பொறிகளுள் சுவைத்தல் முதன்மை பெறுகிறது. உணவு உண்ணாது மனிதன் உயிர்வாழ முடியாது. ஆனால் உண்ணும் வகைதெரிந்து நடந்துகொள்பவன் புலனடக்கம் பழகுபவன் ஆகிறான். மிகைபட உணவை ஏற்றால் உடலுக்கோ, உள்ளத்துக்கோ நலன் ஒன்றும் உண்டாகாது. குறைபட உண்டால் உடலும் உள்ளமும் தளர்ந்துபோய் விடும். தேவையான அளவுக்கே ஆகாரத்தை அருந்த வேண்டும். அவரவர் தேவையை அவரவரே நிர்ணயிக்க முடியும். சுவையான உணவு நல்லுணவு. ஆனால் சுவைக்கு அடிமைப்பட்டவனாக ஒருவன் உணவை ஏற்கலாகாது. நல்லுணவைக் காணுமிடத்தெல்லாம் அதில் நாட்டம் வருவது தகாது. மனம் அடங்கியிருந்தால் உணவைக்காணும் பொழுதெல்லாம் நாவில் எச்சில் ஊறாது. மனம் அடங்காதவனுக்கோ உணவைப் பார்த்த மாத்திரத்தில் சளசளவென்று நாவில் எச்சில் ஊற ஆரம்பித்துவிடும். உணவைப் பற்றியே எண்ணிக்கொண்டிருப்பதும் சரியல்ல. ஏதோ சில நாட்களில் நெடுநேரம் பட்டினியிருந்து பழகவேண்டும். பட்டினியிருக்கும்பொழுது யாருக்கு உணவைப்பற்றிய எண்ணமே வருவதில்லையோ அவன் சுவைக்குரிய புலனை வென்றவன் ஆகின்றான். உண்ணும் விஷயத்தில் மாணாக்கன் கட்டுப்பாடே வடிவெடுத்தவன் ஆகவேண்டும்.

உலகில் உள்ளவைகள் கண்ணுக்குப் புலனாகின்றன. அவைகளை மனது எப்படிப் பொருள்படுத்துகிறது என்பது முக்கியமானது. குழந்தை ஒன்றுக்குப் பெண் ஒருத்தி கட்புலனாகின்றாள். அவளைத் தாய் என சிசு பொருள் படுத்துகிறது. மனப்பான்மைகளுள் இது மிகச் சிறந்தது. உலகில் எப்பொருளைப் பார்த்தாலும் மனத்தினிடத்து நல்ல எண்ணத்தையே வரவழைத்துக்கொள்ளும் இயல்

புடையவன் புலனடக்கம் பழகியவன் ஆகின்றான். கெட்ட எண்ணங்களை ஊட்டும் காட்சிகளும் இருக்கின்றன. முடிந்த வரையில் அவைகளைக் கண்ணெடுத்துப் பார்க்காது விலகி இருப்பது மேல். அவைகளைப் பார்க்கும் நிர்பந்தம் வந்து விட்டால் மனத்தில் கெட்ட எண்ணத்துக்கு இடந் தராது இருந்து பழகவேண்டும். அப்பழக்கத்தில் தேர்ச்சி பெற்றவன் கெட்ட காட்சியைப் பார்க்கவேண்டிய நெருக்கடியிலும் அதைப் பார்க்காத மனிதன் போன்று மனத்தை நடுநிலையிலேயே வைத்திருக்கிறான். இதுவும் புலனடக்கத்தின் வெற்றிக்கு அறிகுறியாகும்.

மாணாக்கன் மிருதுவான மெத்தை முதலிய சொகுசான படுக்கைகளில் படுத்து உறங்கலாகாது. கடினமான படுக்கையிலேயே படுத்துப் பழகுதல் மிக முக்கியமானது. பண்டைக் காலத்து ரிஷி ஆச்ரமங்களில் இருந்த மாணாக்கர்கள் தர்ப்பைப்புல் பாயைமட்டும் பயன்படுத்தி வந்தனர். இக் காலத்தவர் கோரைப்பாய், ஜமுக்காளம் முதலியவைகளைப் பயன்படுத்தலாம். தலைக்கு மிருதுவான தலையணை இருப்பதில் குற்றமில்லை. எளிய தூய உடையையே மாணாக்கன் அணிதல்வேண்டும். அலங்காரத்துக்காக ஆடைகள் அணிவது பொருந்தாது. ஏராளமான உடைகளைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ளுதலும் பொருந்தாது. தூய எளிய வாழ்க்கையின் மூலம் உடல் உணர்ச்சியை அடிமைப்படுத்தி வைத்திருப்பது மாணாக்கனுடைய முதல் கடமையாகும். உடல் சுகத்தைப்பற்றிய எண்ணம் உதிக்காத நிலையில் மாணாக்கன் இருக்கமுடியும். அதில் வெற்றி பெறுமளவு அவனுடைய வாழ்வு நல்வாழ்வு ஆகிறது.

காதால் பல விஷயங்களைக் கேட்கிறோம். அவைகளுள் மனத்தை மேன்மைப்படுத்தும் செய்திகளும் உண்டு;

மனத்தைப் பாழ்படுத்தும் செய்திகளும் உண்டு. மேலாம் கருத்துக்களை உள்ளத்தில் ஊட்டும் நல்ல சொற்களையே காதால் கேட்கவேண்டும். புன்மொழிகள் காதில் விழுங்கால் அவைகளைக் கருத்தில் வாங்காதிருந்து பழக முடியும். அயர்ந்து தூங்குகின்றவனுடைய காதில் சொற்கள் விழுகின்றன. ஆனால் அவைகள் மனதில் படிவதில்லை. ஆங்கு மனம் ஒடுங்கியிருப்பதினால் அது சாத்தியமாகின்றது. விழித்திருக்கும்பொழுது புன்மொழிகளுக்கு இடந்தராத நிலையில் மனத்தை வைத்துக்கொள்ள மாணாக்கனுக்குமுடியும். டெலிபோன் கருவியோடு வேண்டுமானால் நம் காதைப் பொருத்தி வைத்துக்கொள்கின்றோம்; வேண்டாமென்றால் அதைப்பிரித்து வைத்துவிடுகின்றோம். அதேவிதத்தில் மாணாக்கனுக்குக் காதோடு பொருந்தியிருக்கவும் பிரிந்திருக்கவும் கற்றுக்கொள்ளமுடியும். மேலாம் செய்திகளுக்குக் காது கொடுக்கவும் புன்மொழிகளுக்குக் காது கொடாதிருக்கவும் பழகுதல் புலனடக்கத்தின் முக்கியமான ஒரு பகுதியாகின்றது. இசையைப் பற்றிய ஓர் உண்மையையும் இங்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்வது அவசியமாகிறது. பக்தியையும் மேலாம் உணர்வையும் உண்டுபண்ணும் இசைகள் இருக்கின்றன. காமம்போன்ற சிற்றியல்பை வளர்க்கும் இசைகளும் இருக்கின்றன. சிற்றியல்பை வளர்க்கும் இசையை மாணாக்கன் அறவே தவிர்த்துவிடவேண்டும். வாய்க்கும் வேளைகளிலெல்லாம் மேலாம் கருத்து ஊட்டும் இசைகளைக் கேட்கவும் பயிலவும் அதே மாணாக்கன் கடமைப்பட்டிருக்கிறான்.

நறுமணம், துர்நாற்றம் என்னும் இரு பகுதிகள் இயற்கையில் உண்டு. துர்நாற்றம் இயற்கையிலுள்ள கேட்டின் அறிகுறியாகும். நறுமணமோ இயற்கையிலுள்ள பண்

புக்கு விளக்கமாகும். நாம் சுவாசிக்கும் தூயகாற்றில் ஒரு விதமான நாற்றமும் இல்லை. மக்கள் அனைவர்க்கும் துர்நாற்றம் உதவாது. சிற்றின்பம் நாடுபவர்க்கு நறுமணத்தில் விருப்பம் உண்டாகிறது. ஆனால் மாணாக்கனுக்கோ தூய காற்றிலேயே திருப்தி உண்டாகவேண்டும். வாசனைத் திரவியங்களை உபயோகப்படுத்துவது முறையன்று. இன்பம் தருவது போன்று நறுமணம் மனிதனைக் கீழ்மையில் இழுக்கிறது. பின்பு இக்கோட்பாட்டுக்கு விலக்கு ஒன்று உண்டு. தேவாராதனையில் பயன்படுத்தும் சாம்பராணித் தூபம் போன்றது நறுமணத்தோடு சேர்ந்தது. ஆனால் அந்த மணம் கடவுள் ஞாபகத்தை ஊட்டுமாகில் அது ஏற்புடையது. உயர்ந்த எண்ணத்தை ஊட்டுதற்கு ஏதுவாய் இருக்கும் நறுமணத்தைப் புறக்கணிக்கவேண்டிய அவசியமில்லை.

எவன் ஒருவன் இங்ஙனம் ஐம்பொறிகளையும் தீவிரமாகக் கட்டி ஆண்டு பழகுகிறானோ அவன் படிப்படியாக மேன்மகன் ஆகின்றான். மேலாம் அறிவு அவனிடத்து உண்டாகின்றது. உலகில் எது நிகழ்ந்தாலும் அதைக் குறித்துத் தளர்வுறாத உறுதிப்பாடு அவனுக்கு வருகிறது. எந்த நெருக்கடியில் எச்செயலைச் செய்யவேண்டும் என்கின்ற விவேகம் அவன் உள்ளத்தில் உரு எடுக்கிறது. புலனடக்கம் ஒன்றே மேன்மகன் ஆவதற்கு உற்ற உபாயம்.

## சேவை

உலகிலுள்ள உயிர்களெல்லாம் ஒன்றோடொன்று இணைக்கப் பெற்றவைகளாய் இருக்கின்றன. நமக்கு அது விளங்காவிட்டாலும் இயற்கையைப்பற்றிய முடிவான உண்மை அதுவே. எண்ணிறந்த அலைகள் கடலில் ஒன்றோடொன்று இணைக்கப்பெற்றிருக்கின்றன. அதே

விதத்தில் உயிர்கள் அனைத்துக்கும் அடிப்படையான பேருயிர் நிலை ஒன்று உண்டு. அப்பேருயிரைப் போற்று கின்ற முறையில் நாம் ஒழுகினால் நமக்கு நலன் அனைத்தும் உண்டாகிறது. அப்படிப் போற்றுதற்கு உற்ற உபாயம் ஒன்று உண்டு. நம்மோடு தொடர்வுடைய மற்ற உயிர்களுக் குப் பணிவிடை செய்வது அவ்வுபாயம் ஆகும். தாய் தந்தை யர், குரு ஆகியவர்களுக்குப் பணிவிடை செய்வது மாணாக்க னுடைய முதல் கடமை. அதன் பிறகு தன்னுடன் கல்வி பயிலும் ஏனைய மாணாக்கர்கள் இருக்கின்றார்கள். அவர் களுக்குப் பணிவிடை செய்ய ஒவ்வொரு மாணாக்கனும் கடமைப்பட்டிருக்கிறான். அவர்களுக்கு எப்படிப் பணி விடை செய்வது என்னும் கேள்வி எழக்கூடும். கல்வியில் திறமை படைத்திருக்கும் மாணாக்கன் திறமைபடையாத வனுக்குத் துணைபுரியலாம். குறிப்பிட்ட சிலவேளைகளில் படிப்பில் பின் அணியில் இருக்கும் மாணாக்கனோடு கூடிப் படித்து அவனுக்கு விளங்காத பகுதிகளை விளங்கவைக்க லாம். அதை அன்புடன் செய்து வருதல் மூலம் அவனுக் கும் தனக்கும் உள்ள இணக்கத்தை நிலைநாட்ட இயலு கிறது. தன்னிடத்தே அறிவு இன்னும் ஓங்குதற்கு அத் தகைய உதவியும் சிறந்ததோர் உபாயமாகிறது. கேணியில் பழைய ஜலத்தை எடுக்குமளவு புதிய ஜலம் ஊறுகின்றது. தன்னிடத்துள்ள அறிவைப் பிறர்க்கு எடுத்து வழங்குமளவு மேலும் தன்னிடத்து அறிவு ஊறுகிறது. அறிவுத்துறையில் மாணாக்கன் ஏனைய மாணாக்கர்களுக்கு வேண்டியவாறு சேவை செய்வதற்குச் சந்தர்ப்பங்கள் ஏராளமாய் இருக் கின்றன. அதற்கேற்ற மன நிலையை வரவழைப்பது சிறந்ததொரு பயிற்சியாகிறது. பிறர்க்குப் பணிவிடை செய்தே பெருமக்கள் பெருநிலைக்கு வந்துள்ளார்கள். சின்

ஐஞ்சிறு வயதிலேயே இப்படிப் பொதுநல சேவையைத் துவக்கிவிட வேண்டும். மாணாக்கனுடைய நல் வாழ்க்கைக்கு இது முற்றிலும் அவசியமாகிறது.

உடல் உழைப்பினால் மற்றவர்களுக்குப் பணிவிடை செய்வது மிக எளிது. எல்லா மாணாக்கர்களும் இதைச் செய்ய முடியும். நான் மற்றவர்களைவிட உயர்ந்தவன் என்கின்ற எண்ணத்தினின்று அகங்காரம் வளர்கிறது. அகங்காரம் உள்ளத்தில் உள்ள மாண்பை அகற்றிவிடுகிறது. பிரியமாகப் பணிவிடை செய்பவனுக்கோ அகங்காரம் தேய்ந்து போய்விடுகிறது. அகங்காரம் அகன்று போகுமளவு மனிதன் மேலோன் ஆகிறான். பிறர்க்குத் தொண்டு புரிவதோடு கூட மாணாக்கன் ஒருவன் தனக்குத் தானே வேலைக்காரனாக இருந்து பழகவேண்டும். துணி துவைப்பது, குடியிருக்கும் அறையைக் கூட்டிப் பெருக்குவது போன்ற செயல்கள் முற்றிலும் மாணாக்கனுக்கே உரியவைகளாகின்றன. வேலைக்காரனைக் கொண்டு அப் பணிவிடைகளை நிறைவேற்றலாகாது. மாணாக்கன் தனக்குத்தானே நல்ல வேலைக்காரன் ஆக முடியும். தனக்கு அன்னியனான வேறு ஒரு வேலைக்காரனைச் சார்ந்திருப்பது அவனுடைய பேரியல்புக்கு ஒவ்வாது. பாடங்களை நன்கு கற்கும் மாணாக்கர் பலர் உடற்பயிற்சியைப் புறக்கணித்து விடுகின்றனர். உடற்பயிர்ச்சியில் கருத்தைச் செலுத்துவது தலை மாணாக்கனுடைய செயல் அன்று என்பது அவர்களின் தவறுதலான கருத்து. உண்மையில் உடல் உறுதியும் மனத்திட்பமும் ஒன்றோடு ஒன்று சம்பந்தப்பட்டவைகள். ஆதலால் ஆண்மை நிறைந்த தேகப்பயிற்சிகள் பலவற்றைச் செய்வது முற்றிலும் அவசியம். அதற்கேற்ற விளையாட்டுக்களைப் பயிலுதலும் முறையேயாம்.

## ஞாபகசக்தி

மனிதனுடைய அமைப்பில் ஞாபகசக்தி மிக முக்கிய மானது. விலங்குகளுக்கு அந்த இயல்பு இல்லை. நாய், குதிரை, யானை போன்றவைகளுக்கு ஒரு விதத்தில் கூரிய ஞாபகசக்தி இருக்கிறது. மனிதனுக்கோ இது சிறப்பாய் அமைந்துள்ளது. இதை உறுதிப்படுத்துவது கல்வியின் நோக்கங்களில் ஒன்று ஆகும். இளமையில் மனதில் ஆழ்ந்து பதிய வைத்தது முதுமையிலும் மறைந்து போகாதிருக் கிறது. ஆனால் வாழ்க்கையின் பிற்பகுதியில் மனத்தில் பதிய வைத்தவைகளெல்லாம் அதிவிரைவில் மனத்தை விட்டு அகன்று போய்விடுகின்றன.

மேலாம் கருத்துக்களடங்கிய நூல்களை மனப்பாடம் பண்ணுவது ஞாபக சக்தியைப் பலப்படுத்துவதற்கு உற்ற உபாயமாகும். தேகப்பயிற்சியால் உடல் உறுதி பெறுவது போன்று மனப்பாடம் பண்ணுவதால் ஞாபகசக்தி வலிவு பெறுகிறது. இக்காலத்துக் கல்வி முறையில் மனப்பாடம் பண்ணும் பயிற்சி பின்னணிக்குப் போய்விட்டது. அதற் கேற்றவாறு மனிதனுடைய ஞாபக சக்தியும் விரைவில் பின்னணிக்குப் போய்க்கொண்டிருக்கிறது. பள்ளிக்கூடத் துப் படிப்பில் ஞாபகசக்திப் பயிற்சிக்கு இடமில்லை என் பதை முன்னிட்டு மாணாக்கன் மனப்பாடப் பயிற்சியைப் புறக்கணித்து விடலாகாது. ஞாபக சக்தியை வளர்ப்பதற் கும் சிறந்த கருத்துக்களைத் தங்களுக்குச் சொந்தமாக்குதற் கும் உற்ற உபாயம் ஒன்று உண்டு. ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், நீதிவெண்பா, திருக்குறள், திருவாசகம், தேவாரம், திருவாய் மொழி ஆகியவைகளுள் அவரவர் வயதுக்கும் வகுப்புக்கும் ஏற்ற நல்ல பகுதிகளை மனப் பாடம் பண்ணிவருவது நல்ல பயிற்சியாகும். இந்த நூல்

களிலுள்ள இனிமையை ரசிக்கும் ஆற்றல் வாழ்க்கையின் பிற்பகுதியில் வரும். ஆனால் மனப்பாடம் பண்ணும் இயல்பு அலாதியாக இளமைக்கே உரியதாகும். ஆதலால் சிறுவர்கள் தங்கள் சொந்த நலத்தை முன்னிட்டுச் சிறந்த பாக்களையும், பாடல்களையும் நாள்தோறும் ஓதிமனப்பாடம் பண்ணிவைப்பார்களாக. வெறும் தேர்வுக்காகவென்று புத்தகங்களைப் படிப்பது தலைமாணாக்கனுக்குப் பொருந்தாது. தேர்வுக்கென்று படிக்கும் பாடங்கள் தேர்வு முடிந்ததும் தாமாக மனதை விட்டு அகன்று போய் விடுகின்றன. தனது பண்புக்காகவென்று கற்கும் கல்வி காலமெல்லாம் மனத்தினுள் உறுதிபெற்று நிற்கிறது. ஆதலால் தனது மனபரிபாகத்துக்கென்று மேலாம் கருத்துக்களடங்கிய நூல்களை ஆராயும் பழக்கம் சிறு வயதிலேயே வந்துவிடவேண்டும். மேலாம் கருத்துக்கள் அமையப்பெறாத பத்திரிகைகளைப் படிப்பதில் மிகைபடக் காலத்தைப் போக்கலாகாது. நவீனப் பத்திரிகைகளில் பெரும்பகுதி மாணாக்கனுடைய மனத்தைக் கலைத்துக் கெடுத்துவிடும் தன்மையுடையவைகளாய் இருக்கின்றன. இன்றைக்கு உலகில் மாணாக்கனால் தீண்டத்தகாத பொருள் ஏதாவது இருக்கிறதென்றால் அது கீழ்மையைப் பரப்பும் பத்திரிகையாகும். ஞாபக சக்தியை வளர்ப்பதற்கு மாணாக்கர்கள் மேலாம் கருத்துடைய தெய்விக நூல்களையே மனப்பாடம் செய்வது உசிதம்.

### கடவுள் வணக்கம்

இக்காலத்திய இளைஞர்களில் பலர்க்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. கடவுள் என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே அவர்கள் அம்முடிவுக்கு வந்துவிடுகின்றனர். பகல் வேளையில் வானத்தில் நக்ஷத்திரங்

கள் தென்படுவதில்லை. ஆதலால் அப்பொழுது வானத்தில் நக்ஷத்திரங்களே இல்லை என்று நாம் முடிவு கட்டலாமா? நமது சித்தத்தினுள் கடவுள் வீற்றிருக்கிறார். நமது அறியாமையினால் அவருடைய சான்னித்தியத்தை நாம் உணர்வதில்லை. மனத்தகத்திருந்து அக்ஞான இருளை அகற்றுவது நமது முதல் கடமையாகும். கடவுளுக்கு மூன்று நல்ல விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நம் உயிர்க் குயிராய் இருப்பவர் கடவுள். நம் உயிரை நாம் கண்ணால் காண முடியாது; ஆயினும் உயிர்வாழ்ந்திருக்கிறோம் என்று உணருகிறோம். நாம் வாழ்ந்திருப்பதைக் குறித்து நமக்குச் சந்தேகமில்லை. நமது வாழ்வைப் பெருவாழ்வு ஆக்கிவிட் டால் இந்த உடலோடு சம்பந்தப்படாத பேருயிர் நிலை நமக்கு உண்டு என்பதை உணருவோம்.

கடவுள் அன்பு சொரூபமாய் இருக்கிறார். அன்பை நாம் அனைவரும் உணருகிறோம். அன்பைச் செலுத்தவும், பெறவும் நமக்கு இயலுகிறது. இந்த அன்பைத் தூயதாக மாற்றியமைக்கவும் நமக்கு இயலும். தூய அன்பு எல்லாம் வல்லது. குழந்தையினிடத்துள்ள அன்பை அதற்குச் சான் றாக எடுத்துக்கொள்ளலாம். குழந்தையின் அன்புக்கு எல்லாரும் வசப்படுகின்றனர். பேரன்பை வளர்க்கும் மனிதன் பெருமகன் ஆகின்றான். அவன் மக்கள் அனைவர்க் கும் உகந்தவன் ஆகின்றான். அன்பே சிவம் (God is Love) என்று பெரியோர்கள் பகர்ந்துள்ளார்கள். தூய அன்பை வளர்ப்பவர்கள் தெய்வ சொரூபம் ஆய்விடுகின்றனர்.

கடவுள் அறிவு சொரூபமாய் இருக்கிறார். மக்களாகிய நாமும் அறிவு சொரூபமாய் இருக்கிறோம். நம்முடையது சிற்றறிவு; கடவுளோ வாலறிவன். மனத்தினுள் இருக்கும் பேரறிவைச் சிந்திக்குமளவு நம்மிடத்துப் பேரறிவு வளர்

கிறது. கடவுள் தன்மையை அப்பொழுது நாம் சொந்த மாக்குகிறோம்.

**கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅ ரெனின்**

என்பது பொய்யாமொழி. இக்கோட்பாட்டை, 'சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே' என்கிறார் தாயுமான வர். அறிவுத் தெய்வம் இல்லை என்று அறிவாளி எவனும் புறக்கணிக்கமாட்டான். புத்தகங்களைப் படித்து அறிவைப் பெறுவதைவிட உயர்ந்தது மனதில் இருக்கும் அறிவுசொரு பத்தை நினைந்து நமது அறிவை வளர்ப்பது. இச்செயலுக் குத்தான் இறை வணக்கம் அல்லது கடவுள் வழிபாடு என்று பெயர். இதைச் செய்ய மறுக்கின்ற மாணாக்கன் தன் மனத் தகத்திருக்கும் மூல அறிவு ஓங்குதற்கு இடம் தராது தடுத்து விடுகிறான். விறகுக் கட்டையினுள் தீ இருக்கிறது. தகுந்த சூழ்நிலையை உண்டுபண்ணினால் அது தோற்றத் துக்கு வருகிறது. கடவுள் வழிபாடு அத்தகையது. உள்ளி ருக்கும் அறிவு சொரூபத்தை அன்புடன் வணங்குகின்றவன் தானே அறிவு சொரூபமாகவும், அன்பு சொரூபமாகவும் ஆகின்றான். தலை மாணாக்கன் ஒருவனுக்குத் தெய்வ வழிபாடு இன்றியமையாதது.

## மனம் குவிதல்

மனதை ஒருமுகப்படுத்துவதால் மாணாக்கனுடைய பண்பு உச்சநிலைக்கு வந்துவிடுகிறது. இரண்டு சான்று களைச் சொல்லிவிட்டுப் பிறகு மன ஒடுக்கத்தைப் பற்றிப் பேசுவோம். சூரிய கிரணங்கள் சிதறடையும் பாங்கில் பூமி யில் வந்து படிகின்றன. Lens என்னும் பூதக் கண்ணாடி யைக்கொண்டு சிதறடைகின்ற கிரணங்களை ஒருமுகப்படுத்

தலாம். அப்பொழுது அதன் வெப்பமும் வெளிச்சமும் பன் மடங்கு அதிகரித்து விடுகின்றன. இது வெப்பத்தையும், வெளிச்சத்தையும் பற்றிய உண்மை. இனி, நீராவியை ஆராய்ந்து பார்ப்போம். கொதிக்கும் நீரிலிருந்து ஆவி கிளம்பி வெளியில் பரவி மறைந்து போகிறது. இதை Boiler என்னும் உறுதியான கொப்பரைக்குள் பிடித்தால் இது வலிவு மிகப்பெறுகிறது; பெரிய வேலைக்கு இது உதவும். நம் மனத்திடத்துப் பேராற்றல் இருக்கிறது. அதை ஒருமுகப்படுத்துமளவு ஆற்றல் நமக்குச் சொந்தமாகிறது. மனது சிதறடைந்து போகுமளவு ஆற்றல் நமக்குச் சொந்தமல்லாது போய்விடுகிறது. நல்ல எண்ணங்களையே எண்ணுதல் ஆற்றலை வளர்க்கிறது. தாய்க்கும் குழந்தைக்கும் இருப்பதுபோன்ற தூய அன்பை வளர்ப்பதன் மூலம் ஆற்றல் வளர்கிறது. காமநோய் தூய அன்புக்கு நேர்மாறானது. ஆற்றலை எல்லாம் அது அறவே அழித்துவிடுகிறது. மாணாக்கன் ஒருவன் எவ்வளவு காலம் காமத்தை மனத்தினின்று ஒதுக்கி வைக்கின்றானோ அவ்வளவுக்கு அவன் மேன்மகனாக உரு எடுக்கின்றான்.

மனதை ஒருமுகப்படுத்துதலைத் தியானம் என்று சான்றோர் சொல்லுகின்றனர். கண்ணை மூடிக்கொண்டு பகல் கனவு கண்டுகொண்டிருப்பது தியானமல்ல. ஆமை அவயவங்களை யெல்லாம் சுருக்கி ஆபத்தினின்று தன்னைக் காத்துக்கொள்கிறது. தலைமாணாக்கன் பொறிகளை யெல்லாம் சிறுநெறி செல்லாது தடுத்துத் தன்னைக் காப்பாற்றிக் கொள்கிறான். காப்பது விரதம் என்னும் கோட்பாடு இச் சீரிய செயலைக் குறிக்கிறது. பொறிவழியே புறவுலகில் செல்லாது மனதைத் தடுத்து உள்ளிருக்கும் அறிவுத் தெய்வத்தைச் சிந்திப்பது தியானம்; அன்புத் தெய்வத்தை உணர்ந்

திருப்பது தியானம். அது சூரியன் போன்று சுயம்ஜோதி உடையது என்றும் உணர்ந்து பழகவேண்டும். இப்படிக் காலையிலும், மாலையிலும் சிறிது நேரம் தியானம் செய்து பழகும் மாணாக்கர்களுக்கு நல்லறிவு வருகிறது. ஒழுக்கம் தானே அமைந்துவிடுகிறது. அவர்கள் அன்பு சொரூபம் ஆய்விடுகின்றனர். இதன் முடிவான விளைவு என்னவென்றால் மானுட வடிவெடுத்திருக்கும் தேவர்களாக மக்கள் மாறியமைந்து விடுகின்றனர். இந்த வாய்ப்பு எல்லார்க்கும் சொந்தம். ஈண்டு பகர்ந்துள்ள நன்னெறிகளைக் கடைப்பிடிக்கின்றவர் தெய்வப்பெற்றி உடையவர்களாக மாறிவிடுகின்றனர். நல்வாழ்வு வாழ்ந்து இப்பேருண்மையைத் தாங்களே உணர்ந்துகொள்வது மாணாக்கர்களின் முக்கியமான கடமையாகின்றது.

# 9. ஆசிரியன்

## உடலில் உயிர்போன்றவன் ஆசிரியன்

குடும்ப வாழ்வு ஒன்றை நன்கு நடாத்துவதற்குத் தேவையாய் இருப்பவைகள் எவை? இதற்கு விடையாகப் பலர் பலவிதமான கருத்துக்களை வெளியிடமுடியும். நல்ல வீடு ஒன்று வேண்டும். அது அமைக்கப்பட்டிருக்கவேண்டிய பாங்கு, அமைந்திருக்கவேண்டிய சூழ்நிலை, வீட்டுக்கு இன்றியமையாத தட்டுமுட்டுச் சாமான்கள், தண்ணீர் வசதி, போக்குவரத்து சௌகரியம் ஆகிய இவை யாவையும்பற்றி ஆராய்ச்சி பண்ணுகிறவர்கள் ஒரு முக்கியமான கேள்வியைக் கிளப்புவதில்லை. வீட்டில் குடியிருக்கும் கணவனும் மனைவியும் எத்தகையவர்கள், அவர்கள் என்ன விதத்தில் வாழ்க்கை நடத்த வேண்டும் என்னும் கேள்வியை அடியோடு மறந்து விட்டு அவர்களுக்கு அமையவேண்டிய வசதிகளைப்பற்றியே பேசிக்கொண்டு போகிறார்கள். உயிர்த் தத்துவத்தைப் புறக்கணித்துவிட்டு வெறும் சுகஜீவனத்தைப்பற்றிப் பேசினால் பயனொன்றுமில்லை. இக்காலத்திய கல்வி முறைக்கு ஏற்பட்டுள்ள கேள்வியும் இத்தகையதே. பள்ளிக்கூடத்துக்கு வேண்டியிருக்கிற கட்டிடங்களைப்பற்றியும், விளையாட்டு மைதானத்தைப்பற்றியும், தட்டுமுட்டு சாமான்களைப்பற்றியும், படிக்கவேண்டிய புஸ்தகங்களையும் பாடங்களையும் பற்றியும் ஏராளமாகப் பேசி வருகிறார்கள். அதற்கு வேண்டிய திட்டங்களையும் வகுத்து வருகிறார்கள். பாடம் புகட்டுகின்ற ஆசிரியன் யார், அவனுடைய பொறுப்பு எத்தகையது, மாணாக்கனோடு அவன் எத்தகைய இணக்கம் வைக்கிறான் ஆகிய கேள்விகளைப்பற்றிச் சிந்திப்பார் யாருமில்லை. ஆதலால்தான் இக்காலத்திய கல்வி வாழ்க்கை

யோடு சம்பந்தப்படாத வெறும் மனோ முயற்சியாகவும் தேகப்பயிற்சியாகவும் முடிந்துவிடுகிறது. அதன் விளைவாக மனிதன் உயிர்வாழும் யந்திரமாக மாறிவருகிறான். வாழ்க்கையை உயர்ந்த உயிர்வாழ்க்கையாக மாற்றியமைப்பது கல்வியின் நோக்கம் என்பதை மக்கள் அறவே மறந்துவிட்டார்கள். கல்விக்கு நடுநாயகமாக இருப்பவன் ஆசிரியன். அவனுடைய தகுதிக்கும் மனநிலைக்கும் ஏற்ப கல்வியை உயர்ந்த நிலைக்கு எடுக்க அவனுக்கு இயலும்; ஒன்றுக்கும் உதவாததாக அதைக் கெடுக்கவும் அவனுக்கு முடியும். கணவனும் மனைவியும் இல்வாழ்க்கைக்குத் தகுதியுடையவர்கள் ஆய்விட்டால் ஒரு வெறும் குடிசையிலும் அவர்கள் வாழ்வாங்கு வாழமுடியும். இல்வாழ்க்கைக்கு அவர்கள் தகுதியற்றவர்களாக இருப்பார்களாகில் நவீன வசதிகள் அனைத்துடனும் அமைக்கப்பெற்றுள்ள மாளிகை ஒன்று அவர்களுடைய வாழ்க்கையைப் பண்படுத்திவிடாது. கல்வித் துறையில் பொருளை ஏராளமாகச் செலவுபண்ணி உபகரணங்களை வேண்டியவாறு சேகரித்துவிட்டாலும் நல்லாசிரியனால் நடாத்தப்பெறாத பள்ளிக்கூடம் ஒன்றுக்கும் உதவாததாகப் போய்விடும்.

## தலையாயவர்களே ஆசிரியர்கள் ஆகவேண்டும்

பூமியில் கிடைத்த விளைவில் தலைத்தரமான தான்யத்தை எடுத்து அடுத்த வருஷத்தில் செய்யவேண்டிய சாகுபடிக்கு வித்தாக கிருஷிகன் வைத்துக்கொள்கிறான். அவன் அதைத் தன் உணவுக்காகப் பயன்படுத்தி விடுவானாகில் அடுத்து வரும் வருஷத்து விளைவு கெட்டுப்போய்விடும். சமுதாயம் ஒன்றில் ஒவ்வொரு தலைமுறையிலும் பண்பட்ட மக்கள் சிலர் இருக்கின்றனர். அப்படிப்பண்பட்டவர்களையே ஆசிரியர் வேலைக்கு ஒதுக்கிவைக்க வேண்டும். அச்சீரிய

பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படி தேர்ந்தெடுத்த நன்மக்களைத் தூண்டுவதும் சமுதாயத்தின் கடமையாகும். ஆங்கிலேயர்களுடைய அரசாட்சி இந்தியாவில் இருந்தபொழுது இதற்கு நேர்மாறான முறையை அவர்கள் கையாண்டு வந்தார்கள். கல்விச்சாலைகளினின்று வெளியில் வருகிறவர்களுக்கிடையில் தகுதி வாய்ந்தவர்களையெல்லாம் அரசாங்கத்துக்கு வேண்டிய சிப்பந்தி உத்தியோகஸ்தர்களாக எடுத்துக்கொண்டார்கள். வேறு எத்துறையிலும் உத்தியோகம் கிடைக்கப்பெறாதவர்களே பள்ளிக்கூடத்து ஆசிரியர் உத்தியோகத்துக்குப் போகலாயினர். கற்றவர்களின் வாழ்க்கைத் திட்டத்தில் அந்நிய நாட்டார் புகுத்தியிருந்த நடைமுறை இன்றைக்கும் மாறியமைந்தபாடில்லை. சமுதாயத்திலுள்ள தலைத்தரமான மக்கள் 'ஆசிரியர் வேலைக்கு வருவது கிடையாது. இன்றைக்கு மக்களுடைய மோகம் பெரும்பாலும் டாக்டர் உத்தியோகத்திலும் இன்ஜினீயர் உத்தியோகத்திலும் போய்க்கொண்டிருக்கிறது. சமுதாயத்தில் உள்ள சாமர்த்திய சாலிகள் எல்லாரும் மருத்துவர்களாகவும், சில்பிகளாகவும் ஆய்விட்டால் நாட்டுக்கு விமோசனம் வந்துவிடாது. திறமை வாய்ந்த எத்தனைபேர் ஆசிரியர் தொழிலுக்கு வருகின்றார்களோ அதற்கேற்றபடி சமுதாயம் விரைவில் மேல்நிலைக்குப் போகும். கல்வி கற்கின்றவர்களுக்கு சமுதாயத்தினிடம் அன்பு இருக்கிறதா என்பதை அவர்களே ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஒரு மனிதன் தன்னுடைய வாழ்க்கையில் செய்யக்கிடக்கும் கடமைகளுள் மிக மேலானது எது? நோய்க்கு மருந்து கொடுப்பது அவசியமானது. யந்திரங்களைக் கையாளுவதும் இக்காலத்தில் தேவையானது. ஆனால் மக்களை மேன்மக்களாக மாற்றியமைப்பது எக்காலத்திலும் எல்லா சமுதாயங்களுக்

கும்.தேவையாய் இருக்கிற சிறந்த பணிவிடையாகும். இந்த மேலாம் பணிவிடைக்கென்றே தங்களை ஒப்படைத்துவிட ஆயத்தமாய் இருக்கிற நன்மக்கள் கூட்டம் அதிகரிக்க வேண்டும். கல்வித்துறைக்குச் சீரிய அஸ்திவாரமாய் இருப்பது ஆற்றல் படைத்த நன்மக்களுடைய பணிவிடையாம்.

## வீட்டுக்கு அஸ்திவாரம் போன்றவர்கள் ஆசிரியர்கள்

ஆசிரியர் தொழிலுக்கு வருகின்றவர்கள் சுகஜீவனத்தைப் பற்றியும் பேரும் புகழையும் பற்றியும் சமுதாயத்தில் உயர்ந்த பதவியைப் பற்றியும் அடியோடு மறந்துவிடவேண்டும். நல்ல வீடு ஒன்று கட்டுகின்ற பொழுது அதற்கு வலிவு வாய்ந்த அஸ்திவாரம் போடவேண்டும். அது பூமிக்குள் புதைந்து கிடக்கிறது. யாருடைய காட்சிக்கும் அது வருவதில்லை. அஸ்திவாரத்தைக் கண்ணெடுத்துப் பார்ப்பாரும் யாருமில்லை. எனினும் கட்டிடம் முழுதையும் தாங்கிப் பிடித்துக் கொண்டிருப்பது பூமிக்குள் புதைந்து கிடக்கின்ற அஸ்திவாரமேயாம். சமுதாயம் என்னும் மாளிகைக்கு அஸ்திவாரமாய் இருப்பவர்கள் ஆசிரியர்கள். சமுதாயத்தில் நிகழ்கின்ற பகட்டான பல நிகழ்ச்சிகளில் அவர்களுக்கு இடமில்லை. ஏனென்றால் தாங்களே மனமுவந்து அவைகளினின்று விலகியிருப்பது தாங்கள் புரிகின்ற உத்தியோகத்துக்கு அனுகூலமாயிருக்கும். அரசியல் கிளர்ச்சிகளுக்கும் அவர்களுக்கும் வெகுதூரம். அரசியல் கிளர்ச்சி பண்ணுகின்றவர்களும் ஒரு விதத்தில் உரிமைகளையும் பதவிகளையும் வசதியான வாழ்க்கையையும் நாடுபவர்கள் ஆகிறார்கள். ஆனால் ஆசிரியர்களோ மக்களை நன்மக்களாக மாற்றியமைக்கிற செயலிலேயே அல்லும் பகலும் கருத்தாய் இருக்கிறார்கள். அவர்களுடைய அரும்பணிக்கும்

அரசியல் கிளர்ச்சிகளுக்கும் வெகுதூரம். சமுதாயத்தில் நிகழ்ந்து வருகிற பல செயல்கள் வாணவேடிக்கை போன்றவைகள். வாணவேடிக்கை நிகழ்ந்து கொண்டிருக்கும் பரியந்தம் அவைகள் கவர்ச்சி நிறைந்தவைகளாகத் தென்படுகின்றன. அது முற்றுப் பெற்ற பிறகு காண்பதற்கும் கண்ணைக் கவர்தற்கும் ஒன்றுமில்லாது போய்விடுகிறது. ஆனால் அதே வெட்ட வெளியில் நக்ஷத்திரங்கள் மிளிர்ந்து கொண்டிருக்கின்றன. மேகங்களும் மூடுபனியும் படர்ந்திருக்கிறபொழுதும் அவைகள் அந்தந்த ஸ்தானங்களில் இருந்து கொண்டு இயற்கையின் நடைமுறைக்குப் பயன்படுகின்றன. அத்தகைய நக்ஷத்திரங்களோடு ஆசிரியர்களை ஒப்பிடலாம். அமைதியாகவும் சளைப்பு இல்லாமலும் அவர்கள் ஆற்றுதற்கான அரும்பணி இருக்கிறது.

## எளிய வாழ்வு

நவீன வாழ்க்கை முறையில் மக்கள் அனைவரும் தங்களைப் பொருளாதார நிலையில் வைத்துக்கொண்டு மதிப்புப் போடுகின்றனர். டாக்டர்களாக விரும்புகின்றவர்களும் இன்ஜினியர்களாக விரும்புகின்றவர்களும் அந்தந்தத் துறைகளிலிருந்து தாங்கள் ஏராளமாகப் பொருள் சம்பாதிக்க முடியும் என்னும் கருத்துடையவர்களாகவே அவ்வுத்தியோகங்களில் செல்ல முந்துகின்றனர். அந்த எண்ணத்தை ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்குங்கால் சுகஜீவனம் பண்ணுவதில் விருப்பம் என்கின்ற முடிவுக்கு அது நம்மைக்கொண்டு வந்து சேர்க்கும். சுகஜீவனத்தில் பற்று வைப்பது பாராட்டத்தக்க பெருநோக்கமாகாது. கழுகு வானத்தில் உயரப் பறக்கிறது. ஆனால் அது கீழே எங்கே செத்த பிணம் கிடக்கிறது என்று தேடுகிறது. பொருளாதார வசதியை மிகைபட நாடுகிறவர்களுடைய மனப்பான்மையோ அந்தக்

கழுகின் இயல்புக்கு ஒத்ததாகும். ஆசிரியர் ஆக விரும்பு கின்றவர்கள் பணக்காரர்கள் ஆக முடியாது. பெருமிதமான வாழ்வும் அவர்களுக்குக் கிட்டாது. மேலும் பெருமிதமான வாழ்வு ஆசிரியன் ஒருவனுக்கு ஒருநாளும் பொருந்தாது. தான் புகட்டுகின்ற பாடத்தின் மூலமாகவன்றி வாழுகின்ற வாழ்வின் மூலமாகவே மாணாக்கர்களுக்கு அவன் சிறந்த அறிவைப் புகட்டுகிறான். எளிய வாழ்வும் உயர்ந்த மனப் பான்மையும் யாண்டும் இந்திய லக்ஷியமாக இருந்து வந் திருக்கிறது. சுகபோகம் நிறைந்த பெருமித வாழ்வுக்கு ஒரு முடிவு இல்லை. அது மனிதனுடைய மனபரிபாகத்தைக் கெடுத்துவிடுகிறது.

அடக்கம் அமரருள் உய்க்கும், அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

என்பது பொய்யாமொழி. அடக்கத்தின் விளைவு எளிய வாழ்க்கை. அடங்காமையின் விளைவு போகத்துக்கு ஏது வான பெருமித வாழ்வு. மண்ணுலகில் மானுடன் எப்படி வாழ்ந்திருக்க வேண்டும் என்பதை ஆசிரியன் ஒருவன் தன் வாழ்க்கையின் மூலம் மற்றவர்களுக்குப் புகட்டுகிறான். எளிய வாழ்க்கை என்பதன் பொருள் வறுமை செறிந்த வாழ்வு அல்ல. எளிமை வேறு, வறுமை வேறு. வறுமையில் வருந்துகின்றவனுக்கு உடல் உறுதியும் இல்லை; மனத் தெளிவும் இல்லை. அவனைப் பிடித்து வாட்டும் மனநோய் மிகக் கொடியது. ஆனால் எளிமையிலோ திருப்தி இருக் கிறது. உடலுறுதியும் எளிய வாழ்க்கை வாழ்கின்றவனுக்கு இருந்தாக வேண்டும். ஒரு உதாரணத்தைக் கொண்டு இதை நன்கு விளக்கலாம். வீணையில் கம்பி அமைந்திருக் கிறது. அதை மிகத் தளர்த்தினால் ஓசை உண்டாகாது. அதை மிகைபட முறுக்கினால் அறுந்துபோம். இருக்க

வேண்டிய நடுநிலையில் அதை அமைத்து வைத்தால் இனிய ஓசை அதனிடத்திருந்து வருகிறது. எளிய வாழ்வும் அத்த கையது. வறுமை நோயால் வருந்துகின்றவன் மனபரிபாகம் அடையான். பெருமித போகத்தில் மூழ்கியிருப்பவன் ஆசிரியன் வேலைக்குத் தகுதியற்றவன் ஆய்விடுவான். குடி யிருக்க வசதியான சிறு வீடு. அதற்கு இனிய சூழ்நிலை. அணிதற்குத் தூய நல்லாடை. உண்பதற்குப் போதுமான சத்து நிறைந்த உணவு. பொருளாதாரத்துறையில் ஆசிரியன் ஒருவனுக்குத் தேவையானது இதுவேயாம். இத்தகைய இனிய நிலையில் அவனை வைத்திருப்பது சமுதாயத்தின் கடமை. பொருளாதாரப் பிரச்னை ஒருநாளும் ஆசிரியன் உள்ளத்தில் புகுந்துவிடலாகாது. அவனுடைய எண்ணம் யாண்டும் அறிவுத்துறையிலும் நல்வாழ்விலுமேயே நிலைத் திருப்பது அவசியம். இத்தகைய பாராட்டத்தக்க எளிய வாழ்க்கையை வாழ விரும்புகின்றவனே நல்லாசிரியன் ஆகத்தகுதியுடையவனாகிறான்.

## ஆசிரியனுடைய பண்பு

ஆசிரியர்களுள் ஆயிரத்தில் ஒருவனாவது நித்திய பிரம்மசாரியாகவும் தூய துறவியாகவும் இருப்பானாகில் அவனுடைய வாழ்வு உலகுக்குப் பெரிதும் பயன்படும். அவன் தலைத்தரமான ஆசிரியன் ஆவான். ஆனல் அந்தப் பெருநிலையில் இருப்பவனை சமுதாயத்தில் காண்பது அரிதிலும் அரிது. ஆசிரியர்களுள் பெரும்பான்மையோர் இல்லறத்தார்களாகவே இருப்பார்கள். இல்லறமல்லது நல்லறமன்று என்னும் கோட்பாடு ஆசிரியர்கள் மூலம் நல்ல விளக்கம் பெறவேண்டும். மக்களை ஏராளமாகப் பெற் றெடுப்பது மானுட வாழ்க்கையின் உயர்ந்த லக்ஷியமல்ல. இல்லறத்தான் இரண்டு மூன்று குழந்தைகளைப் பெற்றெடுத்

தான பிறகு புலனடக்கமே வடிவெடுத்தவன் ஆகவேண்டும் என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பகர்ந்திருக்கிறார். புலனடக்கம் பழகாதவர்கள் விலங்குகளுக்கு ஒப்பானவர்கள். ஆனால் விலங்குகளில் பல அடக்கமுடையவைகளாய் இருக்கின்றன. மக்களில் பலர் அப்படி இருப்பதில்லை. இனி நல்லாசிரியன் ஒருவனோ உலகுக்கு மாதிரி மனிதனாக அமைந்திருக்கிறான். இல்வாழ்க்கையில் ஈடுபடும் ஆசிரியன் இரண்டு மூன்று மக்களுக்குமேல் பெற்றெடுக்கலாகாது. தன்னுடைய ஆற்றலை யெல்லாம் அறிவுத்துறையில் மற்றவர்களுக்குப் பயன்படும்படி ஒப்படைத்து விடுபவனுக்குப் புலனடக்கம் கடினமானதன்று. பொறிவழியில் தன் புந்தியைச் செலுத்துதற்கு அவனுக்கு அவகாசமில்லை. புலனடக்கத்தின் ரகசியம் இதுவேயாம். யார் ஒருவனுக்கு மகப்பேறு பெருமிதமாக அமைந்துவிடுகிறதோ அவனுக்கு வாழ்க்கைப் பிரச்னையும் அதிகரித்துக்கொண்டே போகும்; கல்வித்துறையில் நல்ல பணிவிடை செய்வது அவனுக்குச் சாத்தியமாகாது. ஆசிரியன் ஒருவன் இது விஷயத்தில் எச்சரிக்கை மிக எடுத்துக்கொள்வது முற்றிலும் அவசியமாகிறது.

## ஆசிரிய தம்பதிகள்

இந்தியாவில் இக்காலத்தில் ஆண்கள் படிப்பும் பெண்கள் படிப்பும் அதிவேகமாக விரிவடைந்து வருகிறது. ஆதலால் ஆசிரியர்களும் ஆசிரியைகளும் ஏராளமாகச் சமுதாயத்துக்குத் தேவையாய் இருக்கிறார்கள். இந்தப் புனிதமான பணிவிடையில் இறங்குகின்றவர்கள் மற்றுமொரு லக்ஷியத்தை வாழ்க்கையில் குறிக்கோளாக வைத்துக் கொள்ளலாம். கூடிய வரையில் ஆசிரியனாக விரும்புகின்ற ஆடவன் ஒருவன் ஆசிரியை ஆக விரும்புகின்ற மகளிர் ஒருத்தியை மணந்துகொள்வது மேலானது. கணவன்

மனைவி ஆகிய இருவரும் ஆசிரியத் தொழிலிலேயே தங்கள் கருத்தைச் செலுத்துவார்களாகில் அவர்களுடைய வாழ்வு பாராட்டத்தக்க பெருவாழ்வு ஆகும். மண வாழ்க்கையைப் பாராட்டிப் பேசுகிறவர் "காதலித்திருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம்" என்று பகர்ந்திருக்கிறார். வாழ்க்கையின் குறிக்கோளிலும் செய்தொழிலிலும் இருவர் கருத்து ஒருமித்துவிடுமாகில் அது இனிய வாழ்க்கையாவது திண்ணம். மனைவிக்கு வாழ்க்கைத்துணை என்றும் சகதர்மிணீ என்றும் பெயர்கள் அமைந்திருக்கின்றன. வாழ்க்கை வேறு, வாழ்க்கையில் செய்கிற தொழில் வேறு அல்ல. செய்கின்ற தொழிலே ஒரு மனிதனுடைய தர்மமாகிறது. ஆசிரியனுக்கு அமைந்துள்ள சுதர்மம் மக்களுக்கிடையில் அறிவைப் பரப்புதலாம். வாழ்க்கையில் அவனுக்குத் துணையாக இருக்கின்றவளும் அதே தர்மத்தைச் செய்தால் சகதர்மிணீ என்கின்ற சொல்லுக்கு அது நல்ல விளக்கமாகும். பழங்காலத்து ரிஷிகளும் ரிஷிபத்னிகளும் சேர்ந்து தங்களை அணுகிய மாணாக்கர்களைச் சொந்தப் புதல்வர்கள்போன்று வளர்த்துவந்தார்கள். அது பழங்காலத்துக் கதையாக முடிந்துவிடலாகாது. அந்தப் பண்பு புதிய வடிவத்தில் இந்தியாவில் புத்துயிர் பெற்றாகவேண்டும். பழங்காலத்து குருகுல முறையை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நாடெங்கும் பரப்புகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு கல்விக்குச் சிறப்புமிக உண்டாகும். குருகுலமுறையில் எல்லாப் பள்ளிக்கூடங்களையும் அமைத்துவிட முடியாது. எனினும் கணவனாகவும் மனைவியாகவும் இருக்கிற ஆசிரியனும் ஆசிரியையும் தாங்கள் பாடம் புகட்டுகின்ற மாணாக்கர்களுக்குப் பலவிதங்களில் தாய்தந்தையர் போன்று நடந்துகொள்வார்களாகில் அதினின்று பெருநலன்கள் விளையும். இன்

றைக்கு வெறும் பாடம் புகட்டுதற்காகத்தான் ஆசிரியர்களும் ஆசிரியைகளும் வகுப்பு அறைக்கு வருகிறார்கள். புஸ்தகத்தில் இருக்கிற பாடங்களைப் புகட்டுவதோடு அவர்களுடைய பொறுப்பு முடிந்துவிடுகிறது. ஹோட்டல்காரன் ஒருவனுக்கு வாங்கிக்கொண்ட பணத்துக்கு ஏற்ப நல்ல உணவு படைப்பதோடு அவனுடைய பொறுப்பு முடிந்துவிடுகிறது. ஆனால் வீட்டிலிருக்கின்ற பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு உணவு படைப்பது ஹோட்டல்காரன் படைப்பதுபோன்று அல்ல. குழந்தைக்குக் கஞ்சியை வார்ப்பதாயிருந்தாலும் அது கனிந்த அன்புடன் கலந்தது. குழந்தையினுடைய வாழ்க்கையோடு பெற்றோருடைய வாழ்க்கை இணைந்துள்ளது. இன்றைக்கு ஆசிரியர்கள் பள்ளிக்கூடத்தில் பிள்ளைகளுக்குப் பாடம் புகட்டுவது ஹோட்டல்காரன் உணவு படைப்பது போன்றது. அப்படிப்பட்ட நோக்கத்துடன் பாடம் புகட்டுவதில் நலன் ஒன்றும் விளையாது. தாய் தந்தையர் சிறுவர்களின் உடலைப் பேணுகின்றனர். ஆசிரியனும் ஆசிரியையும் சிறுவர்கள் சிறுமிகளுடைய உள்ளத்தைப் பேணுகின்றனர். ஆசிரியன் ஒருவன் நல்ல தந்தையாக இருக்க முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். ஆசிரியை ஒருத்தி நல்ல தாயாக இருக்க முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். இன்னும் சில வேளைகளில் ஆண்பாலாக இருக்கிற ஆசிரியன் தாய் தந்தை ஆகிய பெற்றோர் இருவருடைய பொறுப்பையும் தன் பொறுப்பாக எடுத்துக்கொள்ளத் தெரிந்திருக்கவேண்டும். அதே தகுதி ஆசிரியை ஒருத்திக்கும் அமைந்திருக்க வேண்டும். வேண்டும்பொழுது தாய் தந்தையர் பொறுப்பை நிறைவேற்றுதற்கான திறமை ஆசிரியையிடத்திலும் இருப்பது அவசியமாகிறது. பிறகு சிறார்களின் உள்ளத்தை அறிவுத்துறையில் பண்படுத்துவது

ஆசிரியர்க்கென்று அமைந்துள்ள தனிச் செயல் ஆகிறது. தாய்தந்தையர்க்கு இயலாததை ஆசிரியர்கள் செய்கின்றனர். ஆகையினால்தான் குரு ஸ்தானத்தில் இருக்கின்ற ஒருவனுக்கு அளப்பரிய மதிப்பு வருகிறது. இதற்கொப்ப

தந்தை தாய் ஆவானும் சார்கதிஇங்கு ஆவானும்
அந்தம் இலா இன்பம் நமக்கு ஆவானும்
எந்தம் உயிர் தான் ஆகுவானும்
சரண் ஆகுவானும் அருட்கோன் ஆகுவானும் குரு

என்னும் கோட்பாடு வந்துள்ளது. எதிர்கால இந்தியா உயர்நிலைக்குப் போவது ஆசிரியர் பொறுப்பில் இருக்கிறது. தாய் தந்தையர் போன்று பிள்ளைகளின் வாழ்க்கையை ஆசிரியர்கள் பண்படுத்தி வந்தால் பெருநலன் உண்டாகும். நாடே புதிய நாடாக மாறி அமைந்துவிடும்.

## ஆசிரியன் யார்க்கு அடிமை?

கல்வித்துறையை அரசாங்கத்தின் முக்கியமான ஒரு இலாக்காவாக அமைத்துக் கொடுத்தது ஆங்கிலேய ஆட்சியின் சிறப்புக்களில் ஒன்று ஆகும். அந்த அரசாங்கம் வகுத்துத் தந்துள்ள இந்த ஏற்பாட்டை இந்தியா இனியாண்டும் கடைப்பிடித்தாகவேண்டும். அதன் விளைவாக சமுதாயத்தினுள் கல்வி ஒரு திட்டத்துக்கு உட்பட்டு விரிவடைந்து வருகிறது. ஆனால் அந்த அரசாங்கம் புகுத்துள்ள மற்றொரு குறைபாட்டைப் பெரிதும் அகற்றிவைப்பது தேசீய அரசாங்கத்தின் கடமையாகும். இன்றைக்குக் கல்வித்துறையில் உழைத்து வரும் ஆசிரியர்கள் பலதரப்பட்ட ஆட்சி முறைகளுக்கும் நிர்வாகக் குழுக்களுக்கும் அடிமைப்பட்டவர்கள் ஆய்விட்டார்கள். அந்த அடிமை மனப்பான்மையும் அவர்கள் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்திருக்

றது. ஒழுங்குப்பாடான கல்வி வளர்ச்சியை முன்னிட்டு ஆட்சி முறையை அமைத்து வைப்பது முற்றிலும் அவசிய னது. ஆனால் அதை முன்னிட்டு ஆசிரியர் உள்ளத்தில் அடிமைத்தனம் புகுந்து விடலாகாது. படகு ஒன்று நீரின் மீது மிதக்கிக்கொண்டிருக்கலாம். ஆனால் படகுக்குள் நீர் புகுந்துவிடலாகாது. ஒரு சிறந்த ஆட்சி முறையில் சம்பந்தப்பட்டவர்களாக ஆசிரியர்கள் இருந்தாகவேண்டும். ஆனால் அந்த ஆட்சி முறையில் அடக்கி வைக்கப்பட்டவர் களாக அவர்கள் ஆய்விடலாகாது. வாழ்க்கையைப் பற்றிய தத்துவம் ஒன்றை ஈண்டு நாம் ஞாபகத்துக்குக் கொண்டுவர வேண்டும். தலைவன் ஒருவனும் அவனுக்குக் கீழ் சில தொண்டர்களும் இருக்கிறார்கள். நாளடைவில் அந்தத் தலைவனுடைய மனப்பான்மை அவனுக்கு வேலை செய்யும் தொண்டர்களுக்கு வந்துவிடுகிறது. கல்வித்துறை இக் கோட்பாட்டுக்கு விலக்கு ஆகாது. ஆசிரியனிடம் அடிமை மனப்பான்மை இருந்தால் நாளடைவில் மாணாக்கர்களிடத் தும் அதே மனப்பான்மை மறைமுகமாக வந்துவிடும். பின்பு யாரெல்லாம் அடிமைகளாக இருக்க விரும்புகிறதில்லையோ அவர்கள் எல்லோரும் அத்துக்கு அடங்காதவர்கள் ஆய்விடு வார்கள். இன்றைக்குப் பள்ளிக்கூடங்களிலும் கல்லூரி களிலும் கட்டுப்பாடு இல்லாது போயிருப்பதற்கு ஆசிரியர் களிடத்து அடிமை மனப்பான்மை புதைந்து கிடப்பதே காரணமாகும். யாருக்கும் ஆசிரியர்கள் அடிமைகளாகலா காது. ஒரு ஆட்சிமுறைக்கு இணங்கியிருப்பது வேறு, அதற்கு அடிமைகள் ஆய்விடுவது வேறு. இதற்கு நல்ல சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். இங்கிலாந்து நெடுங்காலமாக சுதந்தர நாடாக இருந்து வருகிறது. அதில் நல்ல ஆட்சி முறையும் உண்டு. காலம் சென்ற ஆறாம்

ஜார்ஜ் மன்னன் இங்கிலாந்தில் ஒரு பள்ளிக்கூடத்தைப் பார்வையிடப் போனார். பள்ளிக்கூடம் முழுவதையும் சுற்றிக்காட்டிய தலைமை ஆசிரியர் தம் தலையிலிருந்து தொப்பியை நீக்கவில்லை. அது அந்த நாட்டுச் சட்டத்துக்கு விரோதமானது. அரசனுடைய முன்னிலையில் யாரும் தொப்பி அணிந்துகொண்டு இருக்கலாகாது. தொப்பியை அணிந்தவாறே அவரோடு பேசவும் கூடாது. அந்த ஐதி கத்துக்கு மாறாக ஆசிரியர் நடந்துகொண்டதைக் குறித்துச் சிலர் ஆக்ஷேபம் கிளப்பினர். ஆனால் அரசனோ அந்த ஆக்ஷேபத்தைக் கிளப்பலாகாது என்று தடுத்து விட்டார். அதற்குத் தக்க காரணத்தை அவர் பகர்ந்தார். பள்ளிக் கூடத்துக்குள்ளே தங்கள் தலைமை ஆசிரியருக்கு மேலான அதிகாரி யாருமில்லை என்பதை மாணாக்கர்கள் அறிந்து கொள்ளவேண்டும். இதுவே ஆசிரியனுடைய சுதந்திர வாழ்க்கையைப் பற்றிய கோட்பாடு. ஆசிரியனிடத்து அடிமை மனப்பான்மை இருந்தால் மாணாக்கர்கள் உள்ளத் தில் சீரிய மனநிலை ஒருநாளும் அமையாது. இந்தியாவி லுள்ள ஆசிரியர்கள் எல்லாம் வெவ்வேறு ஆட்சிமுறையில் தொடர்புடையவர்களாய் இருக்கலாம். அந்தந்த ஆட்சி முறைகள் பொருளாதாரத்துறையில் அவ் ஆசிரியர்களை ஆதரித்தும் வரலாம். எனினும் 'நாம் யாருக்கும் அடிமைப் பட்டவர்கள் அல்லோம்' என்னும் பான்மையில் ஊறியவர் களாக ஆசிரியர்கள் இருக்கவேண்டும். கட்டுப்பாட்டில் அடங்காத கர்வம் பிடித்தவர்களுடைய பான்மை அல்ல இது. கல்வி எல்லோராலும் போற்றப்படுகிற நிலையில் இருக்கிறது. ஆதலால் கல்வி புகட்டுகின்ற பெருமக்களும் எல்லாருடைய அன்புக்கும் வணக்கத்துக்கும் உரியவர்கள் ஆகிறார்கள். கண்ணியமான முறையில் தங்கள் சீரிய கட

மையை அவர்கள் சிரத்தையுடன் செய்து வருகிறார்கள். ஆதலால் சமுதாயத்தில் இருக்கிறவர்கள் அனைவரும் ண்ணியமான முறையில் ஆசிரியர்களிடத்து நடந்துகொள்ள வேண்டும். ஆசிரியர் மனதினுள் புதைந்துகிடக்கும் அடிமை புத்தி அறவே அகன்றுவிடவேண்டும். பொறுப்பு நிறைந்த சீரிய சுதந்தர புத்தியில் ஊறியிருக்கிறவர்களே நல்லாசிரி யர்கள் ஆகிறார்கள்.

## சொந்தப் பொறுப்பில் பாடம் புகட்டுதல்

இன்றைக்கு நாட்டிலுள்ள ஆசிரியர்களில் பெரும் பான்மையோருக்கிடையில் (Private tuition) சொந்தப் பொறுப்பில் சில மாணாக்கர்களுக்குப் பாடம் புகட்டுதல் என்னும் பழக்கம் இருந்து வருகிறது. அவர்கள் பள்ளிக் கூடத்தில் ஓர் ஒப்பந்தத்துக்கு உட்பட்டு வேலைபார்த்து வருகிறார்கள்.வாரத்தில் எத்தனை மணிநேரம் பள்ளிக்கூடத் தில் அவர்கள் வேலை செய்தாகவேண்டும் என்பதும், என் னென்ன பாடங்களை அவர்கள் புகட்டியாக வேண்டும் என்பதும், பிள்ளைகளைப் பரீக்ஷையில் தேர்வதற்கு எவ் வளவுதூரம் தகுதியுடையவர்கள் ஆக்கியிருக்கிறார்கள் என் பதும் அந்த ஒப்பந்தத்தில் அடங்கியுள்ள நிபந்தனைகளா கும். அவைகளைச் சரியாக நிறைவேற்றி விடுவதும் ஆசிரியர் களின் கடமை. அதற்குமேல் சில மாணாக்கர்களோடு அவர்கள் சொந்தத்தில் ஒரு ஏற்பாடு செய்து கொள்கிறார் கள். குறிப்பிட்ட நேரங்களில் அவர்களுக்குத் தனியாகப் பாடம் புகட்டுகிறார்கள். அதற்காகக் கைக்கூலியும் வேண் டியவாறு கிடைக்கிறது. இத்தகைய பழக்கமும் இப்பழக் கத்தில் ஆசிரியர்களைத் தூண்டுகிற மனப்பான்மையும் கல்வியின் பண்பை அறவே அழித்துவிடும். பணம் சம்பாதிப் பதற்கென்று ஆசிரியத்தொழில் அமைந்ததன்று. சொந்தப்

பொறுப்பில் பாடம் புகட்டுகிற ஆசிரியர்கள் எல்லாம் அந்த மாணாக்கர்களை எப்படியாவது மேல் வகுப்புக்கு எடுத்துச் செல்ல முயலுகின்றனர். அதற்கேற்ற குறுக்குவழி பலவற்றையும் நாடுகின்றனர். இத்தகைய பொருந்தாத ஏற்பாட்டில் கலந்துகொள்ளும் ஆசிரியர்கள், மாணாக்கர்கள், பெற்றோர்கள் ஆகிய எல்லாருடைய மனப்பான்மையும் வியாபாரத்துக்குரியதாகக் கெட்டுப்போய் விடுகிறது. கல்வியின் புனிதமே விரைவில் மறைந்து வருவதற்கு இதுவும் ஒரு முக்கியமான காரணமாகும். வீட்டுத் தலைவன் ஒருவன் குறிப்பிட்ட சில நேரங்களில் தன் வீட்டுக்குரிய காரியங்களைச் செய்வது என்பதும் ஓய்வு நேரங்களில் வேறு யாருக்கோ கைக்கூலிக்காகத் தொண்டு செய்வது என்பதும் கிடையாது. அவன் தன் ஆயுட்காலமெல்லாம் அக்குடும்பத்தின் தலைவனாகவே இருந்து அதற்கு வேண்டிய பணிவிடைகளையெல்லாம் அல்லும் பகலும் செய்து வருகிறான். அப்படியல்லாவிடில் குடும்பத்தின் புனிதம் ஒழிந்து போய்விடும். குடும்பத்திலும் சிறந்தது பள்ளிக்கூடம். அதில் படிக்கின்ற மாணவர்கள் அனைவருடைய முன்னேற்றத்திலும் கருத்தைச் செலுத்துவது ஆசிரியர்களின் கடமை. ஆசிரியன் ஒருவனுடைய பொறுப்பு தந்தையினுடைய பொறுப்பை விடச் சிறந்தது. இடை மாணாக்கர்களிடத்தும் கடை மாணாக்கர்களிடத்தும் தந்தையினுடைய நிலையில் இருந்து கொண்டு ஆசிரியன் அதிகமாக கவனத்தைச் செலுத்திப் பாடம் புகட்ட வேண்டும். அத்தகைய மனப்பான்மை யாரிடத்தில் இருக்கிறதோ அவனே நல்ல ஆசிரியன் ஆகின்றான். நம் நாடு எத்தகைய ஐதிகத்தில் ஊறிவந்துள்ளதோ அந்த ஐதிகத்தை நாம் மறந்து விடலாகாது. ஆசிரியனைப் பேணுவது சமுதாயத்தின் பொறுப்பு. ஏழை மாணாக்கர்களையும்;

புணக்கார மாணாக்கர்களையும், தலைமாணாக்கர்களையும் கடை மாணாக்கர்களையும் ஒரே உயர்ந்த மனப்பான்மை யுடன் கல்வித்துறையில் பக்குவப்படுத்துவது நல்லாசிரிய னுடைய கடமையாகும். வர்த்தக மனப்பான்மை கல்வித் துறையினுள் நுழைந்துவிடலாகாது. கடவுள் வழிபாட்டுக்கு ஒப்பானது கலை வளர்ச்சி. சீரிய மனப்பான்மையுடன் கல்வியை வளர்க்கின்றவர்களே அதன் மகிமையை விளக்கிக் காட்டவல்லவராகின்றனர். ஆகவே நம் நாட்டை நல்ல நாடாக மாற்றியமைப்பதற்கிருக்கும் ஆசிரியர்கள் கைக்கூலிக்காக வென்று தங்கள் சொந்தப் பொறுப்பில் பாடம் புகட்டும் பொருந்தாத பழக்கத்தை அறவே அகற்றிவிட வேண்டும்.

## இடம் மாற்றுகிற பழக்கம்

கல்விச் சாலைகள் பல அரசாங்கத்துக்கு உரியவை களாக இருக்கின்றன. அதற்கு அடுத்தபடியாக மாவட்ட பரிபாலனம், நகர பரிபாலனம் ஆகிய ஸ்தாபனங்கள் பல பள்ளிக்கூடங்களை நடாத்திவருகின்றன. அவைகள் எல்லாம் ஆசிரியர்களை இடம் மாற்றம் (transfer) பழக்கத்தைக் கையாண்டு வருகின்றன. சொந்தப் பொறுப்பில் நடாத்தப் பட்டு வரும் பள்ளிக்கூடங்களிலும் ஆசிரியர்கள் இடை யிடையே தாமாகவே இடம் மாற்றிக்கொண்டு போய்விடு கின்றனர். ஆக, ஆசிரியர்கள் இடம் மாற்றிக்கொண்டு போகிற பழக்கம் நாடெங்கும் ஏதேனும் ஒரு விதத்தில் இருந்து வருகிறது. கல்வி சீர்கேடு அடைந்ததற்கு இது வும் ஒரு காரணமாகும். ஒரு மனிதன் தான் இஷ்டப்பட்ட படி ஒரு குடும்பத்தினின்று விலகிக்கொண்டு இன்னொரு குடும்பத்தில் போய்ச் சேருவதில்லை. அப்படிச் சேர முயன்றாலும் அவன் வேறு குடும்பத்துக்குச் சொந்தமாய்விட முடியாது. ஆசிரியன் ஒருவன் தனது புனிதமான தொழிலில்

இறங்குதற்கு முன்பு எந்த ஊரில் யாருடன் கூடியிருந்து பணியாற்றவேண்டும், என்பதைத் தீர்மானிக்கவேண்டும். ஆரம்பதசையில் ஐந்து வருஷங்களுக்குள்ளாக தனக்குப் பொருந்திய சூழ்நிலையை அவன் ஊர்ஜிதப்படுத்தியாக வேண்டும். அதன் பிறகு இடம் மாறுதல் என்கின்ற எண்ணம் அவனுக்குக் கனவிலும் வரலாகாது. அந்தச் சூழ்நிலையிலுள்ள மக்கள் அனைவரோடும் அவன் சொந்தம் பாராட்ட வேண்டும். அப்பொழுதுதான் சமுதாயத்துடன் நெருங்கிய இணக்கம் வருகிறது. ஆசிரியனுடைய தரத்தையும் சமுதாயத்தார் உள்ளபடி அறிந்துகொள்ளமுடியும். அடிக்கடி இடம் மாறிக்கொண்டு போவதும் அரசாங்கத்தாரே இடம் மாற்றுதல் என்கிற செயலைச் செய்வதும் கல்வியின் புனிதத்தைக் கலைத்து அதை ஒரு வியாபார மன்றமாக மாற்றியமைப்பதற்கு ஒப்பாகும். இந்தக் கெட்ட பழக்கத்தினின்று நம் நாடு அதிவிரைவில் விடுதலையடையவேண்டும்.

## ஓய்வு

ஆசிரியர்கள் மனோ முயற்சியிலேயே ஈடுபட்டு இருப்பதால் அவர்களுக்கு ஓய்வு மிக வேண்டும். ஓய்வில்லாது அறிவுத்துறையில் ஒரு மனிதன் உழைத்தால் அவனுடைய அறிவின் கூர்மை மழுங்கிப்போய்விடும். ஒரு விதத்தில் இக்கோட்பாடு உடலுக்கும் உரியதாகிறது. ஓய்வின்றி ஓயாது உடல் உழைப்பில் ஈடுபடுகின்றவன் தன் உடலைக் கெடுத்து விடுகிறான். ஓய்வு எடுத்துக் கொள்ளுதல் வாழ்க்கைக்கு இன்றியமையாத செயலாகும். பலபேர்க்கு ஓய்வு எடுத்துக்கொள்ளும் முறை தெரியாது. பள்ளிக்கூடத்தில் ஓய்வு எடுத்துக்கொண்டு வீட்டில் சொந்தப் பொறுப்பில் பாடம் புகட்டுவது அல்லது வேறு மனோ முயற்சி செய்வது பல ஆசிரியர்களுடைய பழக்கமாக இருந்து வருகிறது.

வாரத்தில் ஒருநாள் மனோமுயற்சியை அறவே மறந்திருப்பது நல்ல ஓய்வு ஆகிறது. ஒரு வேலையினின்று மற்றொரு வேலைக்கு மாறியமைவதே ஒருவிதத்தில் ஓய்வு ஆகிறது. ஆசிரியனாக இருக்கின்றவன் மனோமுயற்சி வேலையையே வீட்டிலும் செய்து வருகிறான். அதனால் அவனுக்கு ஓய்வு கிடையாது. உடலைக்கொண்டு உழைத்தல் பல ஆசிரியர்களுக்கிடையில் இல்லை. நாள்தோறும் ஒருமணிநேரம் அல்லது இரண்டுமணி நேரம் உடல் உழைப்பு செய்து வந்தால் மனோமுயற்சியில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அது நல்ல ஓய்வு ஆகிறது. காலமெல்லாம் மாணாக்கர்களுடனேயே பழகி வருகிறவர்கள் பாலர்களுடைய மனப்பான்மையைப் பெற்றுவிடுகிறார்கள். ஆரம்பப் பாடசாலைகளில் இருக்கும் ஆசிரியர்களுக்கிடையில் இதை ஏராளமாகக் காணலாம். வயதில் அவர்கள் பெரியவர்கள் எனினும் சிறுபிள்ளைத்தனம் அவர்களிடத்தில் ஏராளமாகத் தென்படும். ஓய்வு எடுத்துக்கொள்ளத் தெரியாமையே அதற்குக் காரணமாகும். மாணாக்கர்களோடு நெருங்கிப் பழகுகிறவர்கள் பிறகு மாணாக்கர்களை விட்டுப் பிரிந்து அவர்களை மறந்திருக்கவும் பழகவேண்டும். அல்லும் பகலும் ஆசிரியர் மனப்பான்மையிலேயே இருக்கிறவர்கள் எப்பொழுதும் போதிக்க முன்வருவார்கள். மற்றவர்களிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்கிற மனப்பான்மை அவர்களைவிட்டு அறவே மறைந்துவிடுகிறது. போதித்துக்கொண்டே இருக்கிறவர்கள் வேறு சிலரிடமிருந்து போதனையை ஏற்றுப் பழகுவதும் நல்ல ஓய்வு ஆகும். இனி நீண்ட விடுமுறை நாட்கள் பள்ளிக் கூடங்களுக்கு அமைந்திருக்கின்றன. விடுமுறை நாட்களில் முற்றிலும் புதிய மனோமுயற்சியிலும் தேக உழைப்பிலும் ஈடுபடுவது சிறந்த

ஓய்வு ஆகிறது. ஆனால் நீண்ட விடுமுறை நாட்களைப் பயன்படுத்த நம் நாட்டு ஆசிரியர்களுக்கும் தெரியாது, மாணாக்கர்களுக்கும் தெரியாது. அதனால் வாழ்வில் பெரும் பகுதி வீணாய்ப் போய்விடுகிறது ஒரு கணப்பொழுதை யும் வீண் போக்காது ஓய்வு நேரத்தைப் பயன்படும் வெவ் வேறு விதங்களில் கழித்து வருவதே நல்ல ஓய்வு ஆகும். இக்கலையைச் சிறப்பாக ஆசிரியர்களும் பொதுவாக நாட்டு மக்கள் அனைவரும் கற்கவேண்டும்.

## இணக்கம்

மனிதனோடு மனிதன் இணக்கம் கொள்ளுதல் வாழ்க் கையில் மிக முக்கியமான இடம் பெற்றிருக்கிறது. புஸ்தகப் படிப்பு மனிதனுடைய மனதை மாற்றியமைத்து விடாது. ஒருவன் மற்றொருவனோடு இணக்கம் கொள்ளுகின்ற பொழுது ஒருவனுடைய இயல்பு மற்றொருவனுக்குஅறிந்தோ அறியாமலோ மனதில் வந்து அமைகிறது. நல்லாரோடு இணக்கம் கொள்ளுகின்றவனுக்கு நல்லியல்பு தானாக வந்துவிடுகிறது. அதற்கு மாறாகக் கெட்ட இயல்பு ஓங்கு வதற்குக் காரணம் கூடா நட்பேயாம். மாணாக்கன் ஒருவனுக்குக் கிடைக்கின்ற வாய்ப்புகளுள் ஆசிரியனோடு கொள்ளுகிற இணக்கம் மிக முக்கியமானது. ஆனால் நவீனக் கல்வி முறையில் அந்த இணக்கம் பெரிதும் மறைந்து போய் விட்டது. யந்திரம் போன்று குறிப் பிட்டநேரத்தில் ஆசிரியர் வகுப்புக்கு வருகிறார். புகட்ட வேண்டிய பாடங்களைத் தம்தரத்துக்கேற்ற பிரகாரம் எடுத்து விளக்குகிறார். நேரமானதும் வகுப்பை விட்டுத் தம் போக்கில் போய்விடுகிறார். மாணாக்கர்களோடு அன்னியோன்னியமாகப் பழகுதற்கு அவகாசமும் இல்லை, அவாவும் இல்லை. அப்படிப் பழகாமையை முன்னிட்டு

யாருக்காவது ஏதேனும் குறைபாடு வந்து விட்டதாகவும் யாரும் கருதுவதில்லை. ஆனால் இது நல்ல கல்வித்திட்டமாகாது. எவ்வளவுக்கெவ்வளவு ஆசிரியர்க்கும் மாணாக்கர்களுக்குமிடையில் நெருங்கிய தொடர்வு ஏற்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு கல்வி பண்பும் பயனும் உடையதாகும். சர்வகாலமும் மாணாக்கர்களோடேயே தொடர்வுகொண்டிருப்பது தொல்லையென்று கருதுகிறவர்கள் இருக்கலாம். தங்கள் சொந்தக் குழந்தைகளோடு தொடர்ந்து நெருங்கிப் பழகுதலில் தந்தையர்களுக்குத் தொந்தரவு ஒன்றுமில்லை. இனிமையே அதில் நிறைந்திருக்கிறது. ஆசிரியர் பொறுப்பு அதைவிடப் பெரியது. மாணாக்கர்களோடு சர்வகாலமும் படிப்பை ஒட்டிய தொடர்வே வைத்திருக்கவேண்டும் என்பது அவசியமல்ல. பாடம் புகட்டுகின்ற வேளையில் கல்வியை ஒட்டிய தொடர்வு. நெருங்கிப் பழகுகின்ற வேளையில் நண்பர்களுக்கிடையிலுள்ள தொடர்வு. மாணாக்கனுடைய வாழ்க்கையைக் கருத்தில் எடுத்துக் கொள்கின்ற வேளையில் தந்தையினுடைய தொடர்வு. மாணாக்கரிடத்து அன்புகொண்டிருக்கின்ற வேளையில் தாயினுடைய தொடர்வு. மாணாக்கனோடு விளையாடுகின்றபொழுது கூட்டாளியினுடைய தொடர்வு. இப்படி விதவிதமான சூழ்நிலைகளில் விதவிதமான தொடர்வு உண்டாகின்றபொழுது ஆசிரியனுடைய வெவ்வேறு மனநிலைகளை மாணாக்கன் அறிகிறான். அதன் மூலம் அவனை அறியாது விதவிதமான பண்புகளும் பயிற்சிகளும் அவனுக்கு வந்து அமைகின்றன. நல்லாசிரியன் ஒருவனுடைய இயல்புகள் அனைத்தும் மாணாக்கனுக்கு அமைந்து விடுகின்றபொழுதே ஆசிரியனுடைய முயற்சி முற்றிலும் வெற்றி பெறுகிறது. பல தரப்பட்ட தொடர்வு வைக்கிறபொழுது ஆசிரியருக்குத்

தொல்லையோ சலிப்போ உண்டாக முடியாது. ஊக்கம் ததும்பியவராகவே ஆசிரியர் யாண்டும் இருந்தாகவேண்டும். ஆசிரியருக்கும் மாணாக்கர்களுக்குமிடையில் இணக்கம் இவ்வளவு தூரம்தான் இருக்கலாம், இதற்குமேல் போகலாகாது என்கின்ற வரையறை கிடையாது. இணக்கத்தில் அவர்கள் ஆழ்ந்துபோகுமளவு மாணாக்கர்களுக்கு நலன்கள் அனைத்தும் அமைவது திண்ணம்.

## ஒழுக்கம்

ஆசிரியன் ஒருவனுடைய தகுதியை இக்காலத்தில் அவன் எவ்வளவு படித்திருக்கிறான், என்னென்ன பரீக்ஷைகளில் தேர்ந்திருக்கிறான், என்ன முறையில் பாடம் புகட்டுகின்றான் ஆகியவைகளைக்கொண்டு மதிப்புப்போடுகிறார்கள். ஆசிரியன் ஒருவன் பெற்றிருக்கிற கல்விக்கும் போதனைத் திறமைக்கும் நிச்சயமாகவே மதிப்பு உண்டு. ஆனால் இவைகளையெல்லாம்விட ஒழுக்கத்தில் ஆசிரியன் தலைசிறந்தவனாக இருக்கவேண்டும். ஒழுக்கத்தைப்பற்றிய பாடத்தை அவன் போதிக்கவேண்டிய அவசியமில்லை. ஒழுக்கமே வடிவெடுத்தவனாக அவன் வாழ்ந்து வருவானாகில் மாணாக்கர்கள் ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் அவனிடமிருந்து அதைக் கற்றுவருவார்கள். அவனிடமுள்ள ஒழுக்கத்தைக் காணுமளவு மாணாக்கர் தம்மை அறியாது குருபக்தியில் முன்னேறுகிறார்கள். ஒழுக்கத்தை வணங்கும் இயல்பு மக்கள் எல்லாரிடத்திலும் இருக்கிறது. சிறுவர்களிடத்தில் சிறப்பாக அது இருக்கிறது. சிந்தையிலும் சொல்லிலும் செயலிலும் ஒழுக்கமே வடிவெடுத்திருக்கிற ஆசிரியனோடு பழகுகின்ற அளவு மாணாக்கன் உண்மையில் ஒழுக்கத்தோடு நட்புக்கொள்பவன் ஆகிறான். மனிதனுக்குத் தன் வாழ்க்கையில் அமையும் வாய்ப்புக்களுள் தலைசிறந்தது ஒழுக்கம்.

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

உயிரை ஓம்புதல் ஜீவ ஜந்துக்கள் அனைத்துக்கும் பொதுவானது. ஆனால் ஒழுக்கத்தை உறுதியாகக் கடைப்பிடிப்பது மனிதனுக்குரிய சிறந்தசெயல் ஆகிறது. எல்லா மேன்மைகளும் ஒழுக்கத்தினின்று அவனுக்கு வந்து அமைகின்றன. நன்கு வளர்ந்து அலர்கின்ற மணம் நிறைந்த பூ ஒன்றைப் பார்க்கின்றவர்கள் எல்லாம் அதைப் போற்றுகின்றார்கள். தன் வாழ்வில் மலர் அடைந்துள்ள உச்ச நிலை அது. அவ்வாறு மனிதன் ஒழுக்கத்தில் உயர்ந்த நிலைக்குப் போய்விடுவானாகில் மானுட வாழ்வின் பயனையெல்லாம் அவன் அடையப்பெற்றவனாகிறான். ஒழுக்கத்தில் உயர்நிலைக்குப் போயிருக்கும் ஒருவன் ஆசிரியத் தொழிலை எடுத்துக்கொள்வானாகில் தான் அடைந்துள்ள பண்பை உலகுக்குரிய பொது உடைமை ஆக்கிவிடுகிறான். கணக்கற்றபேரை நன்மக்களாக ஆக்கிய பேராசிரியர்கள் பலர் உலகத்தில் இருந்திருக்கிறார்கள். இரண்டு அல்லது மூன்று பேரை இங்கே குறிப்பிடுவோம். தாமஸ்ஆர்னால்ட் என்பவர் சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்தில் இருந்த பேராசிரியர்களுள் ஒருவர். இங்கிலாந்தின் பெருமக்கள் பலரை உருவாக்கிய சிறப்பு அவருக்கே உரியதாயிற்று. சென்ற நூற்றாண்டில் கல்கத்தாவில் வசித்து வந்த ஈசுவர சந்திர வித்யாசாகர் ஆசிரிய உலகுக்கு எடுத்துக்காட்டாயிருந்த மற்றொரு பேராசிரியர் ஆவார். அவரிடம் பயிற்சி பெற்றவர்கள் பலபேர் பெருமக்கள் ஆனார்கள். அவரைத் தொடர்ந்து அவருடைய கல்லூரியில் மகேந்திரநாத குப்தர் என்னும் பெரியார் ஒருவர் இருந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யராகின்ற வாய்ப்பு மகேந்திரநாத குப்தருக்குக் கிடைத்தது. அவரைப் பள்ளிக்கூடத்து ஆசிரியராகவே

இருக்கும்படி ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தூண்டினார். மாணாக்கர்கள் பலபேருடைய வாழ்க்கையைத் திருத்தியமைத்த பேறு அவருக்குரியதாயிற்று. ஆசிரியர்கள் எல்லாருமே இத்தகைய தலை சிறந்த பெருமக்கள் ஆய்விட முடியாது. எனினும் ஆசிரியன் ஒவ்வொருவனும் தன் போக்கில் ஒழுக்கத்தில் நிலை நின்றிருந்து மாணாக்கர் பலரைப் பண்படுத்தி வரலாம். நல்லாசிரியன் ஒருவன் நிச்சயமாகத் தன்னுடைய ஆயுட்காலத்தில் ஆயிரம் மாணாக்கர்களோடு தொடர்வு கொள்ளமுடியும். அத்தனை பேரையும் பண்படுத்துகிற வாய்ப்பு ஒரு ஆசிரியனுக்குக் கிடைக்கிறதென்றால் அது வாழ்க்கையில் கிடைப்பதற்கரிய வாய்ப்பு ஆகும். நாட்டு மக்கள் அனைவரையுமே சிறப்புறத் திருத்தியமைக்கும், வாய்ப்பு ஆசிரியர் உலகத்துக்கு உரியது. அவர்கள்தான் இச்சீரிய செயலைச் செய்ய முடியும். மனிதன் தன்னுடைய வாழ்க்கையைப் பலதரப்பட்ட காரியங்களுக்கு ஒப்படைக்கிறான். அவையாவிலும் மக்களைப் பண்படுத்துதல் என்னும் காரியம் தலையாயது ஆகிறது. எண்ணிப்பார்க்கிறவர்களுக்கே இக்கோட்பாடு நன்கு விளங்கும். நம் நாட்டிலே நன்மக்கள் பலர் தோன்றி அவர்கள் நல்லாசிரியர்களாகி கல்வித்துறையில் ஒழுங்காக உழைத்து வர வேண்டும்.

> எண்ணிய எண்ணியாங்கு எய்துப, எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின்.

ஆசிரியர் உலகம் இக்கோட்பாட்டுக்கு ஒப்ப உழைத்து வருமாகில் நம் நாட்டை அருள் உலகமாக மாற்றிவிட இயலும். தேசீய நிர்மாணத் திட்டத்தில் இதுவே ஒப்பு உயர்வு அற்ற திட்டமாகிறது.

# 10. கற்கவேண்டிய மொழிகள்

## தாய்மொழியில் கல்வி

குழந்தை ஒன்றின் உடல் வளர்ச்சிக்குத் தாய்ப்பால் முற்றிலும் இன்றியமையாதது. பாலன் ஒருவனுடைய அறிவு வளர்ச்சிக்கு அம்முறையில் தாய்மொழி இன்றியமையாதது. பொருத்தமான உணவு உடலுக்கு இடுக்கண் செய்யாமல் உடலினுள் சென்று உடல்மயமாகிறது. தாய் மொழியின் மூலம் வரும் எண்ணங்களும் இயல்பாக பாலர்கள் உள்ளத்தில் சென்று பதிவு பெறுகின்றன. தாய்மொழியில் கேட்டுத் தெரிந்துகொள்ளுதல் கல்வியின் முதல்படியாகும். தாய் சொல்வதைக் குழந்தை ஆர்வத்தோடு கேட்கிறது. ஆசிரியர் சொல்வதையும் அதே ஆர்வத்தோடு சிறுவன் கேட்பதற்கேற்ற சூழ்நிலை அவசியமாகிறது. தான் உடல் வளர்ச்சி பெறுவதைச் சிறுவன் அறிவதில்லை. அறிவு வளர்ச்சியையும் அவன் அங்ஙனம் அல்லல்படாது பெற்று வரவேண்டும். கேட்டதைக் கருத்தில் வைப்பது மிக முக்கியமானது. கருத்தில் வைத்துப் பழகுகிறவர்களுக்கு ஞாபக சக்தி அதிகரிக்கிறது. இக்காலத்துக் கல்வி முறையோ எடுத்த எடுப்பில் எழுதவும் படிக்கவும் பாவனைப் பயிலுவிக்கிறது. எழுதுவதன் மூலம் புஸ்தகத்தில் இருப்பது நோட்டுப் புஸ்தகத்திற்கு மாற்றப்படுகிறது. ஞாபக சக்தியை அது வளர்ப்பதில்லை. தாய் மொழியில் கேட்டதைக் கருத்தில் வைப்பதன் மூலம் ஞாபகசக்தியை வளர்த்தான பிறகு மாணாக்கன் எழுதவும் படிக்கவும் பயிலலாம்.

கல்வியின் ஆரம்பப்பகுதி தாய்மொழியின் மூலம் அமைவதால் கற்பவனுக்குக் கல்வி கடினமானதாவதில்லை. அண்மையில் நம் நாட்டில் பலர்க்கிடையில் ஒரு பழக்கம்

இருந்து வந்தது. சிறுவர்களுக்கு ஆங்கிலத்தில் பாடத்தைத் துவக்குவது சிறந்த கல்வி முறை என்று அன்னவர் எண்ணி வந்தனர். சிறுவர்களுக்கு அன்னிய மொழியில் பாடத்தைத் துவக்குவது செவிலித்தாய் ஊட்டும் பாலுக்கு ஒப்பாகிறது. சொந்தத் தாய்ப்பாலுக்கு அது ஒருக்காலும் ஒப்பாகாது. அன்னிய மொழியில் அமைகின்ற ஆரம்பக்கல்வி வேற்றார் கொடுக்கும் பாலுக்கு ஒப்பாகிறது. சிறுவர்களுக்கு இயல்பாக உண்டாகும் நுண்ணறிவு வளர்ச்சிக்கு அன்னிய மொழி பெருந்தடையாகிறது. எடுத்த எடுப்பில் அன்னியமொழியைக் கற்பவர்களுக்கு மொழி கற்பதிலேயே காலத்தில் பெரும்பகுதி போய்விடுகிறது. கற்பதில் பெரும்பகுதியைப் பிறமொழியின் பொருட்டே அடைவு கொடுத்தாகவேண்டும். அதனால் கருத்துக்களை ஏற்கும் இயல்புக்குப் பெருந்தடை உண்டாகிறது. எனவே ஆரம்பக்கல்வியைப் பற்றிய அடிப்படைத் தத்துவம் ஒன்று இருக்கிறது. சிறுவர்கள் அனைவரும் ஆரம்பக் கல்வியைத் தங்கள் தாய்மொழியிலேயே கற்கவேண்டும்.

தாய் மொழியில் துவக்கிய கல்வி உயர்தரக் கல்வியாகின்ற விடத்தும் தாய் மொழியிலேயே பெரும்பகுதி அமைந்திருப்பது அவசியமாகிறது. மற்றொரு விதத்தில் பகருமிடத்து தாய்மொழியில் துவங்கிய படிப்பு ஆயுட்காலம் முழுதிலும் அம்மொழியிலேயே அமைந்திருப்பது அவசியமாகிறது. பண்டத்தை மாற்றுதற்குப் பணம் பயன்படுவது போன்று கருத்தை வாங்குதற்கும் கொடுப்பதற்கும் மொழி பயன்படுகிறது. பணம் காசு முதலியன நாட்டுக்கொரு வடிவத்தில் அமைந்திருக்கின்றன. ஒரு நாட்டுக்குரிய செல்வத்தைக் கையாண்டு பழகியவன் மற்றொரு நாட்டு செல்வத்தைக் கையாளுகின்றபொழுது விலை மதிப்பு உடனே

விளங்குவதில்லை. அதை அறிந்து கொள்ளுதற்கு சற்றுக் காலதாமதமாகிறது. சொந்த நாட்டுச் செல்வம் போன்றது தாய்மொழி. ஆயுட்காலம் முழுதிலும் அதில் கருத்தை வாங்கவும் கொடுக்கவும் பழகிவருவது நல்ல பயிற்சியாகிறது. அறிவு வளர்ச்சியை என்றைக்கும் நுண்ணியதாகவும் எழில் நிறைந்ததாகவும் அது செய்து வைத்திருக்கும்.

ஒரு சிலர்க்குத் தாய்மொழி ஒன்றைத் தவிர ஏனைய மொழிகளைக் கற்பது மிகக் கஷ்டமாகிறது. அத்தகையவர்களுக்கு ஏனைய மொழிகளில் ஏதோ சிறிதளவு பயிற்சி கொடுத்துக்கொண்டே வரலாம். ஆனால் ஏனைய மொழிப் பயிற்சி தடைப்படுவதை முன்னிட்டு சொந்த மொழியில் அவர்கள் அடைவதற்கிருக்கும் அறிவு வளர்ச்சிக்குத் தடை வந்து விடலாகாது. இந்தக் குறைபாடு இக்காலத்திய கல்வி முறையில் இருக்கிறது. நல்ல மாணாக்கன் ஒருவனுக்கு ஆங்கிலமொழி பிடிபடாது போய்விடுமாகில் அதை முன்னிட்டு அவனுடைய அறிவு வளர்ச்சிக்கே செயற்கையாக தடை வந்துவிடுகிறது. இன்றைக்குப் பெயரளவில் ஹிந்திக்கும் கொஞ்சம் இடம் கொடுத்திருப்பது போன்று ஆங்கிலத்துக்கும் பெயரளவில் இடம் வகுத்து வைத்துவிட்டால் பெரும்பான்மையோருக்கு அமைந்துள்ள முட்டுக்கட்டை நீங்கிவிடும். இக்காலத்தில் பரீக்ஷைக்குச் செல்லும் நூறு மாணாக்கர்களில் ஐம்பது பேர் தோல்வியடைகின்றனர். தாய்மொழியில் மட்டும் கற்கக்கூடியவர்களுக்கு ஒரு தனி சலுகை செய்து கொடுத்தால் இப்பொழுது தோல்வியடைகின்றவர்களில் பெரும்பான்மையோர் தேர்ந்து விடுவார்கள். தங்கள் தரத்துக்கேற்ற பிரகாரம் தாய்மொழியின் மூலமாகவே அவர்கள் மேல் படிப்புக்குப் போவதற்கு வசதி செய்து கொடுப்பது சமூகத்தின் கடமையாகும்.

## இரண்டாவது மொழி

மொழியில் சிறந்த கலைஞானம் பெற விரும்புகின்றவர்கள் ஒரு மொழி பயிலுவதோடு நின்றுவிடலாகாது. கல்வியில் ஒரு படித்தரத்தில் இரண்டாவது மொழி ஒன்றைப் பயிலுதற்காக மாணாக்கர்கள் ஆயத்தமாதல் முற்றிலும் அவசியமாகிறது. நம் நாட்டில் இரண்டாம் மொழியாக எதை ஏற்றுக்கொள்ளுதல் என்னும் கேள்வி எழுகிறது. மொழிகளுள் இருதரப்பட்டவைகள் இருக்கின்றன. பொது மக்களுக்கிடையில் பேச்சில் இருக்கும் மொழிகள் ஒருதரமானவைகள். அவைகளை **spoken languages** என்றும் **modern languages** என்றும் ஆங்கிலத்தில் பகர்கிறார்கள். மற்றொரு தரத்தில் இருக்கும் மொழிகள் **classical languages** என்று ஆங்கிலத்தில் இயம்பப்படுகின்றன. தெள்ளத் தெளிந்த மொழிகள் என அவைகள் பகரப்படுகின்றன. லத்தீன், கிரீக், சம்ஸ்கிருதம் ஆகியவைகள் அத்தகைய பாங்குடையவைகளாய் இருக்கின்றன. அவைகள் இப்பொழுது பொதுமக்களுக்கிடையில் பேச்சில் இல்லை. கற்றவர்கள் அவைகளைப் பேசப்பழகினால் அம்மொழிகளில் சிறந்த முறையில் கருத்துக்களை விளக்க முடியும். பேச்சில் இல்லாமையினால் அவைகளை **dead languages** அழிந்து பட்டுப்போன மொழிகள் என்று பகர்வதும் உண்டு. உண்மையில் அவைகள் அழிந்துபட்டுப்போகவில்லை. பனி காலத்தில் மரம், செடி, கொடிகள் பட்டுப்போனவைகள் போன்று தென்படுகின்றன. அதேவிதத்தில் அம்மொழிகள் இப்பொழுது பாமரர்க்கிடையில் பேச்சில் இல்லாது மறைந்திருக்கின்றன. ஆனால் அம்மொழிகளில் சிறந்த நூல்கள் பல இருக்கும் பரியந்தம் அவைகள் அழிந்துபட்டுப் போக மாட்டா. அவைகளுக்கு மறுமலர்ச்சி கொடுக்கின்ற அளவு

பொதுமக்களுக்கிடையில் மேலாம் கருத்துக்களையும் மொழி வளத்தையும் ஏராளமாக வழங்கலாம்.

தெள்ளத் தெளிந்த மொழிகளுள் இந்தியாவுக்கு முற்றிலும் உகந்தது சம்ஸ்கிருதம். ஐரோப்பிய மொழிகள் அனைத்துக்கும் லத்தீன் பாஷை வளம்கொடுத்திருப்பது போன்று இந்தியாவிலுள்ள மொழிகள் அனைத்துக்கும் சம்ஸ்கிருதம் வளம் கொடுத்திருக்கிறது. செடிகளுக்கு உரம் பயன்படுவதுபோன்று இந்திய மொழிகளுக்கு சம்ஸ்கிருதம் பயன்பட்டு வந்திருக்கிறது. இந்த நாட்டிலுள்ள மொழிகளில் சம்ஸ்கிருதத்தை மிகக் குறைந்த அளவில் பயன்படுத்தியது தமிழ் என்று சொல்லலாம். ஆனால் தமிழ் இலக்கியம் சம்ஸ்கிருதத்தைப் புறக்கணித்துவிடவில்லை. அதைப் புறக்கணிக்கின்ற மனப்பான்மை தமிழ்ப்பேராசிரியரிடத்தோ சமயப்பரமாசாரியர்களிடத்தோ சிறிதளவும் உண்டாக வில்லை. தங்கள் தேவைக்கு ஏற்ற அளவு அவர்கள் சம்ஸ் கிருதத்தைத் தமிழ்மயம் ஆக்கியிருக்கின்றனர். தமிழ் இலக்கியங்களே அதற்குச் சிறந்த சான்றுகளாக இலங்கி வருகின்றன.

தமிழ்நாடு அடைந்துவருகிற மறுமலர்ச்சியில் தமிழ் மக்கள் தங்களுக்குகந்த இரண்டாவது மொழியாக சம்ஸ் கிருதத்தை எடுத்துக்கொள்வது அவசியமாகிறது. அதைக் கற்கின்ற அளவு தமிழுக்கு நல்ல வளத்தை வழங்கலாம். அதுமட்டுமல்லாது இந்தியாவிலுள்ள ஏனைய மொழிகளோடு தொடர்வுகொள்ளுதற்கு சம்ஸ்கிருதம் சிறந்த முகாமையாகும். நாடெங்குமுள்ள கலை வல்லுநரோடு தொடர்வு கொள்ளுதற்கு சம்ஸ்கிருதக் கலை சிறந்த கருவியாகும். தமிழ் மொழியை மேலும் வேண்டியவாறு வளர்ப்பதற்கும் சம்ஸ்கிருதம் பொன்றாத துணைபுரியும்.

மாணாக்கர்கள் பத்து அல்லது பதினொரு வயது பரியந்தம் தமிழ் மொழியைக் கற்றானபிறகு சம்ஸ்கிருதத்தையும் கட்டாயப் பாடமாகப் படிக்க ஆரம்பிக்கவேண்டும். சர்வகலாசாலையில் கல்லூரிப் படிப்பு பூர்த்தியாகும் பரியந்தம் இம்மொழியில் தேர்ச்சி மிகப்பெறுவது முற்றிலும் அவசியமாகிறது. ஒரு சிலர்க்கு இம்மொழியைக் கற்பது கடினமாகத் தென்படலாம். அத்தகையவர்கள் தங்கள் அறிவுத்திறனுக்கு ஏற்ற பிரகாரம் ஏதோ சிறிதளவு இம்மொழியைக் கற்றால் போதுமானது. ஆனால் சுமாரான அறிவுத் திறமை உடையவர்கள் எல்லாரும் தமிழைக் கற்பதுபோன்றே இம்மொழியையும் கற்றுக்கொள்ளலாம். கற்றுவருகின்றபொழுதே இம்மொழியில் பேசிப்பழகுவதும் அவசியமாகிறது. இலக்கியச் சுவைகளை ரசிக்கின்றவர்களுக்கு இரண்டு மொழிகளில் அல்லது அதற்கு மேற்பட்ட மொழிகளில் விற்பன்னம் இருக்குமிடத்து ரசிக்கும் திறமை அதிகரிக்கிறது. ஒருமொழியை மற்றொரு மொழியோடு சீர்தூக்குகிற இடத்து மொழி வல்லமை மாணாக்கர்களுக்கு மிக உண்டாகிறது. தமிழ் மொழியைச் சக்தி என்று சொன்னால் சம்ஸ்கிருதத்தை சிவம் என்று சொல்லலாம். சிவசக்தியின் ஐக்கியத்தில் பிரபஞ்சமே உண்டாயிருக்கிறது. தென்மொழியையும் வடமொழியையும் இணைத்துக் கற்பதால் தமிழ் மாணாக்கர்களுக்கு அறிவு வளர்ச்சி பெருமிதமாக உண்டாகும். தென்மொழி வடமொழிச் சண்டை சிலர்க்கிடையில் இருந்துவருகிறது. குறுகிய மனப்பான்மையினால் இது வருகிறது. இருமொழிகளிலும் வல்லுநர் வீண் வழக்கை வளர்க்கமாட்டார்கள். ஒரு பேரறிஞர் தென்மொழியைத் தேன்மொழி என்றும் வடமொழியை வாடமொழியென்றும் இயம்பி இவைகளுக்கிடையில் உள்ள இணக்கத்தைத் தமிழ்

இலக்கியத்தின் மூலமாகவே விளக்கிக்காட்டியிருக்கின்றார். இனி வாதத்தில் வீண்காலம் போக்காது தேன்மொழியையும் வாடமொழியையும் இணைத்தே வளர்த்தாகவேண்டும்.

இந்தியா முழுதுக்கும் பொதுவான பாஷை ஒன்று தேவை என்பது நேற்று எழுந்த கேள்வி அல்ல. பல்லாயிரம் ஆண்டுகளாக சம்ஸ்கிருத பாஷை இந்தியா முழுதுக்கும் பொதுவானதாக இருந்து வந்திருக்கிறது. ஆனால் கற்றவர் களாலேதான் அது கையாளப்பட்டது. இந்தியாவில் சுதந் திர இயக்கம் வந்தபொழுது ஹிந்தியை நாடு முழுதுக்கும் பொதுவான தேசீய பாஷையாக அமைக்கவேண்டும் என்ற இயக்கமும் வந்தது. அரசியல் உணர்வைத் தவிர வேறு எந்த விதமான ஆதாரமும் அந்த இயக்கத்துக்கு இல்லை. ஆங்கிலமொழி இருக்கலாகாது, ஆனால் இந்தியமொழி ஒன்றுதான் நாட்டுக்குப் பொதுமொழியாக இருக்கவேண்டும் என்னும் எண்ணத்தை அடிப்படையாகக்கொண்டது அந்த இயக்கம். நாட்டு மக்களுள் பெரும்பான்மையோரால் பேசப் படுவதால் அம்மொழி மற்றவர்க்கும் பொதுவாகவேண்டும் என்பது இந்த இயக்கத்தின் நோக்கம். அரசியல் அதிகா ரத்தை இங்ஙனம் திணித்தல் பொருந்தாது. இந்த நாட்டில் ஒரு காலத்தில் யாவருக்கும் ஆங்கிலம் தெரியாதிருந்தது. பிறகு ஆளவந்தவர்கள் அம்மொழியை நாடெங்கும் பரப் பினர். ஆனால் இப்பொழுது பெரும்பான்மையோரது மொழி என்கின்ற எண்ணத்தை வைத்துக்கொண்டு ஆங்கி லத்துக்குப் பதிலாக ஹிந்தியைப் புகுத்தினால் அது மக்க ளுடைய உள்ளத்தில் இனிது இடம் பெறாது. பெரும் பான்மையோர்க்கு நலம் தரும் மொழி எதோ அதைப் பொது மொழியாக அமைப்பதே பொருந்தும். அன்றைக்கு ஏகாதி பத்தியமாயிருந்த ஆங்கிலேய ஆட்சி ஆதிக்கத்தைச்

செலுத்தி ஆங்கிலத்தைப் பரப்பியது போன்று இன்றைக்கு இந்தியக் குடியரசு மக்கள்மீது ஹிந்திபாஷையைத் திணிக்க முடியாது. ஏனென்றால் குடியரசின் கோட்பாடு ஏகாதிபத்தியமன்று.

பெரும்பான்மையோரால் பேசப்படுகிற மொழி என்றாலும் இந்தியாவிலுள்ள மொழிகளுள் மிக அண்மையில் தோன்றியது ஹிந்தி. அது பேசப்படும் மாகாணங்களிலும் வெவ்வேறு இடங்களில் அது வெவ்வேறு வடிவெடுத்திருக்கிறது. அந்த மொழிக்குரிய இலக்கணம் கிடையாது; சிறந்த காவியங்களோ இலக்கியங்களோ அம்மொழியில் ஒன்றும் அமையவில்லை. இலக்கியம் இல்லாத மொழி ஒன்றை நாட்டுமக்கள் எல்லாரும் கற்பதில் பயனொன்றுமில்லை. இலக்கியம் ஒரு மொழியில் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதைக் கற்பதில் பயனுண்டு. அறிவைப் பெருக்குதற்கு அத்தகைய கல்வியாண்டும் துணைபுரியும்.

சம்ஸ்கிருதத்தில் இருக்கின்ற இலக்கியங்களோ எண்ணிக்கையில் அடங்காதவைகள். இந்தியாவிலுள்ள மற்ற எல்லா மொழிகளிலும் இருக்கிற இலக்கியங்களையெல்லாம் தொகுத்து அடுக்கினாலும் சம்ஸ்கிருதத்தில் இருக்கின்ற இலக்கியங்களுக்கு அருகில் அவை வரமுடியாது. பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியாவில் தோன்றியுள்ள பெருமக்கள் அனைவரும் தங்களுடைய சீரிய கருத்துக்களை யெல்லாம் சம்ஸ்கிருத மொழியிலேயே அமைத்துவைத்துப் போயிருக்கின்றனர். இத்தனை காலமாக வாழையடி வாழையாக வந்துள்ள கலைப்பெருக்கத்துக்கு இனி இடைஞ்சல் வந்துவிடலாகாது. சம்ஸ்கிருதத்தைக் கற்பதன் மூலம் பழங்காலத்துப் பேராசிரியர்களில் யாருடன் வேண்டுமென்

றாலும் தொடர்வு வைப்பதற்கு நல்ல சந்தர்ப்பம் கிடைக்கிறது.

சம்ஸ்கிருதம் வடநாட்டுக்குரிய மொழியென்றும் திராவிடத்துக்கும் அதற்கும் ஒரு தொடர்வும் இல்லையென்றும் ஒருசிலர் கருதுகின்றனர். அது ஆதரவற்ற கொள்கை. சிறந்த சம்ஸ்கிருதம் தமிழ்நாட்டில்தான் இருந்து வந்திருக்கிறது. தென்னாட்டில் தோன்றியுள்ள சைவசமய ஆசாரியர்கள், வைஷ்ணவ சமய ஆசாரியர்கள், மும்மதங்களாகிய துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகியவைகளுக்கு ஆசாரியர்களாக வந்துள்ளவர்கள் ஆகிய இவர்கள் யாவரும் தென்னிந்தியாவில் சம்ஸ்கிருதத்தை வேண்டியவாறு வளர்த்திருக்கின்றனர். உபசாரத்துக்காக சம்ஸ்கிருதத்தை வடமொழி என்றும் தமிழைத் தென்மொழி என்றும் சொல்லுகின்றோம். தென்னாட்டில் ஒருகாலத்தில் ஒருசிலர்க்கிடையில் மட்டும் இருந்த சம்ஸ்கிருத மொழியை இனி எல்லார்க்கும் உரிய பொதுமொழியாக்கிவிடலாம். இன்றைக்குக் கேரளத்தில் கிறிஸ்தவர்களில் பலர் சிறந்த போக்கில் சம்ஸ்கிருதம் கற்றிருப்பதே இம்மொழியை யாருக்கிடையில் வேண்டுமென்றாலும் பரப்பலாம் என்பதற்குச் சான்றாகிறது.

சம்ஸ்கிருத மொழியிலுள்ள சிறந்த கலைஞானங்களைப் பயன்படுத்துதல் பொருட்டும், ஆராய்ச்சி செய்தல் பொருட்டும் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள பதினெட்டு சர்வகலாசாலைகளில் சம்ஸ்கிருதம் சீரிய இடம்பெற்றிருக்கிறது. அம்மொழி தோன்றியுள்ள நம் நாட்டில் அது மறைந்துபட்டுப் போவது தௌர்ப்பாக்கியமாகும். அதன் மறைவுக்கு நாம் இடந்தரலாகாது. அம்மொழி மறுமலர்ச்சி

பெறுவது மட்டுமல்ல, அது நாடு முழுதுக்கும் பொதுவா யுள்ள தேசீய மொழி ஆகவேண்டும்.

சர்வகலாசாலையில் படிக்கின்ற மாணாக்கர்கள் எக் கலையைப் பயில முயன்றாலும் அதற்கேற்ற நல்ல பாடபுத் தகங்கள் அமைந்திருக்க வேண்டும். பழங்காலத்துக் கலை ஞானங்கள் அனைத்துக்கும் ஏற்ற நூல்களும் பாடபுத்தகங் களும் சமஸ்கிருதத்தினின்று எடுக்கலாம். இம்மொழியைப் புதுப்பித்தலின்மூலம் இத்தனைவிதமான கலைஞானங்களை யும் புதுப்பிப்பதற்கான வாய்ப்பு நமக்குக் கிடைக்கிறது.

சம்ஸ்கிருதம் பேச்சுக்குரிய மொழியன்று; ஆகையால் தேசமக்கள் அனைவருக்கும் பொது பாஷையாக அதை அமைக்கமுடியாது. என்கிற எண்ணம் பலர்க்கிடையில் இருந்துவருகிறது. ஆனால் அம்மொழியைப் பேச்சில் கொண்டுவருவது ஆகாதகாரியமன்று. மொழி ஒன்று எவ் வளவுக்கெவ்வளவு சிறந்ததோ அவ்வளவுக்கவ்வளவு அது எழுத்துக்கும் பேச்சுக்கும் உரியதாகிறது. அதைக் கற்கின்ற பொழுதே அதன் மூலம் பேசிப்பழகுகின்றவர்களுக்கு அது பேச்சுக்குரிய மொழியாய் விடுகிறது. அத்தகைய திட்டம் வகுத்துக்கொண்டு இம்மொழியைக் கற்கமுயன்றால் இன் னும் நாற்பது அல்லது ஐம்பது வருஷங்களில் இதைப் பேசு கிறவர்களை ஏராளமாக நம் நாட்டில் காணலாம். இப் பொழுது ஆங்கிலம் நம் நாட்டில் பேச்சுப் பழக்கத்தில் இருப்பதைவிட அதிகமாக சம்ஸ்கிருதத்தைப் பேச்சுக்குரிய தாகக் கொண்டுவந்து விடலாம்.

சம்ஸ்கிருதம் வளர்வதால் அதன் நிழல் போன்றுள்ள ஹிந்திபாஷை மாகாணத்துக்கொரு வடிவெடுத்து தன் போக் கில் வளரும். அது பெரும்பாலும் வர்த்தகத்துக்கும், ராணுவத் துக்கும் உரிய மொழியாக யாருடைய முயற்சியுமின்றி நாட்

டினுள் நிலைநின்றுவரும். பின்பு பண்பில் கீழ்த்தரத்திலுள்ள அம்மொழியை தேசீய பாஷையாக்குவது நம்முடைய கலா சாரத்துக்கே இழுக்குச் செய்வதற்கு ஒப்பாகும். பழங் காலத்து ரிஷிகள் பேசிய பாஷை, வேதங்கள் தோன்றிய பாஷை, கலைஞானங்கள் தோன்றிய பாஷை, காவியங்கள் தோன்றிய பாஷை, தேவபாஷையென்று பகரப்பெறும் பண்பு நிறைந்த பாஷையாகிய சம்ஸ்கிருதத்தைக் கற்பதற் குப் பதிலாக ஏதோ சில மாகாணங்களில் பேச்சு வார்த்தை யில் இருக்கிற ஹிந்தியை தேசீய பாஷை என்று கருதி அதைத் தமிழ் மக்கள் கற்பதால் பெருநலன் ஒன்றையும் அவர்கள் அடைந்துவிடமாட்டார்கள்.

தமிழ் வளர்ச்சிக்கு சம்ஸ்கிருதக் கலை பயன்படுவது போன்று ஹிந்திக்கலை பயன்படாது. சில ஆயிரம் ஆண்டு களாகத் தமிழ் வளர்ச்சிக்கு நல்லுணவாக சம்ஸ்கிருதம் இருந்து வந்திருக்கிறது. தமிழினுடைய தூய்மையை வட மொழி கலந்து கெடுத்துவிட்டது என்று சிலர் கருதுகின்ற னர். அக்கருத்து உண்மைக்கு ஒத்ததன்று. பொருந்தாத முறையில் யாரோ சிலர் மிகைபட வடமொழிகளைப் புகுத் திப் பேசியும் எழுதியும் வந்திருக்கலாம். ஆனால் சீரிய இலக்கியத்தை அமைத்தவர்கள் பொருந்துகின்ற பாங்கி லேயே சம்ஸ்கிருதத்தைத் தமிழ்மயம் ஆக்கியிருக்கின்றனர். ஏராளமான சம்ஸ்கிருதச் சொற்களை எடுத்துக்கொள்ளுதற் கிடையில் தமிழினுடைய இனிமையைக் கெடுத்துவிடாது காத்து வைத்த கவிஞர் சிலர் இருக்கின்றனர். அவர்களுள் ஒருவராகத் தாயுமானவரை எடுத்துக்கொள்ளலாம். கவி ராஜர் என்றும் அருட்கவி என்றும் நிறைஞானி என்றும் அவரைப் பகரலாம். தமது திருப்பாடல்களில் அவர் அமைத் துள்ள சொற்களில் ஏதேனும் ஒன்றையாவது மாற்றி

யமைக்க நமக்கு இயலாது. அப்படி மாற்றியமைத்தால் சொல்லழகும், பொருளழகும் குலைந்துவிடும். தத்துவங் களைப்பற்றி அவர் மிகைபடப் பகரவேண்டியிருந்ததினால் தத்துவ விசாரத்திற்கென்று அமைந்திருக்கும் சம்ஸ்கிருதச் சொற்களை அவர் ஏராளமாகக் கையாளவேண்டி வந்தது. ஆனால் இக்காலத்தில் நாம் அமைத்துவரும் உரை நடைகளில் அவர் அமைத்ததுபோன்று ஏராளமான சம்ஸ்கிருதச் சொற்களை அமைக்கவேண்டிய அவசியமில்லை. அவைகளைப் புறக்கணிக்க முயலுவதும் பொருந்தாது. எடுத்துக் கொள்ளும் விஷயத்திற்கேற்ப சம்ஸ்கிருதச் சொற்களைத் தேவைக்கேற்றபடி கையாண்டு பழகுதலே முறையாகும். தமிழ் மொழி ஒன்று மட்டுமல்ல, இந்தியாவில் பேச்சிலிருக் கின்ற எல்லா மொழிகளிலும் சம்ஸ்கிருதம் வேண்டியவாறுகி பரவியிருக்கிறது. வெளிநாடுகளில் இருக்கின்ற சிங்களம், மலாயா, பர்மா, திபேத்திய பாஷைகளிலும் சம்ஸ்கிருதம் வேண்டியவாறு புகுந்திருக்கிறது. ஆசியாக் கண்டத்தில் மறுமலர்ச்சி வந்துகொண்டிருக்கின்ற இந்நாளில் பழையபடி சம்ஸ்கிருதம் அம்மொழிகளில் எல்லாம் பரவப்போகிறது. தமிழ் மொழியினுள் அது நுழையாது வேலிகட்ட நமக்கு ஒருபொழுதும் இயலாது. மனமுவந்து அதை எடுத்துக் கொள்ளுமளவு தமிழை நாம் நன்கு வளர்ப்பவர் ஆவோம்.

இந்தியாவிலுள்ள இலக்கணங்களுள் தமிழ் மொழிக் கென்று அமைந்திருக்கின்ற தொல்காப்பியத்தையும் சம்ஸ் கிருதத்திற்கென்று அமைந்திருக்கிற பாணினி வியாகரணத் தையும் பற்றி நாம் சிறிது பகரவேண்டியது அவசியமாகிறது. இவ்விரண்டுக்குமிடையில் நெருங்கிய தொடர்வு உண்டு. மொழியழகை விளக்குதற்கென்று மட்டும் இவைகள் அமைந் தவைகள் அல்ல. வாழ்க்கைத் தத்துவங்களையும் மொழி

யோடு இணைத்தே இந்த இரண்டு நூல்களும் விளக்கி யிருக்கின்றன. பாணினியைக் கற்ற மேல் நாட்டு அறிஞர் ஒருவருக்கு அதன்மூலம் இந்தியாவின்மீது அளப்பரிய அபி மானம் வந்துவிட்டது என்று பகர்ந்திருக்கிறார். சம்ஸ்கிரு தத்தைத் தமிழ் மக்கள் கற்பதன் மூலம் பாணினியின் வியா கரணத்தில் சிறிதளவாவது பயிற்சி பெறுவார்கள். அதன் பிறகு அதைத் தொல்காப்பியத்துடன் சீர்தூக்கிப் படிப்ப தால் தேன்மொழியாகிய தென்மொழியினிடத்தும் வாடா மொழியாகிய வடமொழியினிடத்தும் பற்றுமிக உண்டாகும். அத்தகைய கலை வன்மை ஹிந்தியைக் கற்பதன் மூலமாக வந்துவிடாது. இந்தியாவிலுள்ள எல்லா மாகாணத்தவர் களுக்கிடையிலும் சம்ஸ்கிருதத்தின் மூலமாக வரக்கூடிய ஒற்றுமையை ஹிந்தியின் மூலமாக வருவிக்க முடியாது. எனவே இந்தியா முழுதுக்கும் இதுகாறும் பொதுவாய் இருந்துவந்த தேசீய மொழியாகிய சம்ஸ்கிருதத்தை இனி யும் பொதுமொழியாக எடுத்துக்கொள்ளுதல் பொருந்தும்.

## மூன்றாம் மொழி

ஆங்கில அரசாட்சி இந்தியாவில் அமைந்தபொழுது ஆங்கில பாஷைப் படிப்பு இயல்பாக வந்தமைந்தது. உத்தி யோகத்தை நாடியவர்கள் அதைக் கற்க ஆரம்பித்தார்கள். கற்றவர்கள் அம்மொழியின் சிறப்பை உணர்ந்து ரசித்தார் கள். நாளடைவில் ஆங்கிலப் படிப்பு நாடெங்கும் படிப்படி யாக விரிவடைந்து வந்தது. சர்வகலாசாலைகள் பல இந் நாட்டினுள் நிறுவப் பெற்றன. சர்வகலாசாலைகளுக்குரிய மேற்படிப்புகள் எல்லாம் பிறகு ஆங்கிலத்திலேயே அமை பவைகளாயின. கல்லூரிப் படிப்புப் படித்தவர்கள் இக் காலத்தில் ஆயிரக்கணக்கானபேர் நாடெங்கும் இருக்கின் றனர். தாய்மொழிகள் இவர்களுக்கு வெவ்வேறானவை

களாக அமைந்திருக்கின்றனவெனினும் ஆங்கிலத்தின்மூலம் இத்தனைபேர்க்கிடையில் தொடர்பு வைப்பது மிக எளிதா கிறது. இப்பொழுது டெல்லியில் நடைபெறும் லோகசபை யில் எல்லா மாகாணத்தவர்களும் ஆங்கிலத்தைப் பொது மொழியாக வைத்துக்கொண்டு ஆலோசனைக்குரிய விஷயங் களைப்பற்றிப் பேசுவது பாராட்டுதற்குரியதாகிறது. ஆங் கில அரசாட்சி இந்தியாவிலே விட்டுவைத்துள்ள நன்மை களுள் ஆங்கில மொழியைத்தான் மிக முக்கியமானதென்று சொல்லவேண்டும். மருத்துவம் (Medicine), சில்பம் (Engineering), சட்டம் (Law), விஞ்ஞானம் (Science), உலக சரித் திரம் (World History), பூகோளம் (Geography) போன்ற கலைகளை இன்றைக்கு இந்திய மக்கள் ஏராளமாகக் கற் றிருப்பதற்கு ஆங்கில மொழி போதனைக்கு உதவியதே முக்கியமான காரணமாகும். நவீன கலை ஞானங்கள் அனைத்தும் இன்றைக்கு ஆங்கில மொழியில் அமைந்திருப் பது போன்று வேறு எந்த மொழியிலும் அமையவில்லை. ஆங்கிலத்தைக் கற்பதன் மூலம் எண்ணிறந்த அரிய நூல்கள் கல்வி கற்பவர்களுடைய அறிவு வளர்ச்சிக்குப் பயன்பட்டு வருகின்றன. புதிய ஞான உலகமே ஆங்கிலத்தின்மூலம் இந்திய மக்களுக்குத் திறந்து வைக்கப்பட்டிருக்கிறது. இவ் வளவு பெரிய நன்மை இம்மொழியின் மூலம் இந்திய மக் களுக்கு வந்து அமையுமென்று ஆங்கில பாஷை கற்க ஆரம் பித்தபொழுது இந்தியர் யாருக்கும் ஒருவேளை தென்பட் டிருக்காது. உலகத்தில் எங்குச் சென்றாலும் பயன்படுவ தாகிய இம்மொழியை இந்திய மக்களாகிய நாம் கைவிட்டு விடலாகாது. உயர்தரப் படிப்புக்குப் போகின்றவர்கள் எல்லாம் ஆங்கிலம் கற்பது முற்றிலும் அவசியம்.

உலகத்தில் எல்லா நாடுகளோடும் தொடர்வு வைப்ப தற்கும் வாணிகம் செய்வதற்கும் அம்மொழி பயன்பட்டு வரு

கிறது. அரசியல் துறையில் ஸ்தானீகர்களாக வெளிநாடு களுக்குப் போகின்ற இந்தியர்களுக்கெல்லாம் ஆங்கிலம் பயன்பட்டு வருகிறது. ஆங்காங்குள்ள மேதாவிகளோடு அளவளாவிப் பேசி உயர்ந்த கருத்துக்களைப் பரஸ்பரம் பரிமாறிக்கொள்ளுதற்கும் ஆங்கிலம் பயன்படுகிறது. உலகெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து வருகின்ற இந்தியர்களுக்கு ஆங்கிலம் தெரிந்திருக்குமாகில் எந்த நாட்டிலும் அவர்கள் தங்களை வேற்றார்களாக உணரவேண்டி வராது. எல்லா நாட்டவர்களோடும் அந்யோன்யமாகப் பழகுதற்கு ஆங்கிலம் நன்கு பயன்பட்டு வருகிறது. எனவே இந்த மொழியின் மூலம் இந்தியா உலகம் முழுதுடன் நெருங்கிய இணக்கம் வைப்பது இன்றைக்குச் சாத்தியமாகிறது. ஆங்கில மொழியைக் கற்று வருவதின் உயர்ந்த விளைவு இதுவேயாம்.

பௌதிக விக்ஞானிகள் செய்து வருகிற ஆழ்ந்த ஆராய்ச்சியின் விளைவுகள் எல்லாம் அப்போதைக்கப்போது ஆங்கிலமொழியில் வெளியாய் வருகின்றன, அந்த நுண்ணிய விஷயங்களை அறிஞர்கள் உடனடியாகத் தெரிந்து கொள்ளுதற்கு இன்று ஆங்கிலம் நன்கு பயன்பட்டு வருகிறது. உலக நிகழ்ச்சிகள் அனைத்தும் இன்றைக்கு ஆங்கிலத்தின் வாயிலாக உலகெங்கும் ஒலிபரப்பப்படுகின்றன. எனவே இயற்கையின்கண் உள்ள நுட்பங்களைப் புதிதாகத் தெரிந்துகொள்ளுதற்கும் உலக நிகழ்ச்சிகளையெல்லாம் அப்போதைக்கப்போது தெரிந்துகொள்ளுதற்கும் இந்தியாவுக்கு ஆங்கிலமொழி பெருந்துணையாய் அமைந்திருக்கிறது. எதிர்காலத்திலும் அது பெருந்துணையாய் அமைந்து வரும். ஆதலால்தான் இம்மொழியை நாம் இனி ஒரு பொழுதும் கைவிட்டு விடலாகாது.

## ஏன் மும்மொழிகளைக் கற்கவேண்டும் ?

*உயர்தரக் கல்வியைக் குறித்து சான்றோர்கள் ஒரு சீரிய கோட்பாட்டை வெளியிட்டிருக்கின்றனர். அதாவது நல்ல கலாச்சாரத்தைப் பெற விரும்புகின்ற கல்லூரி மாண வர்களுக்கு மூன்று மொழிகள் முற்றிலும் அவசியமானவை கள். உலகெங்குமுள்ள கலைஞான நிபுணர்களின் துணிபு இது. இக்கோட்பாட்டுக்கு ஒப்ப இந்திய மக்களாகிய நாம் தாய்மொழியையும் ஆங்கிலத்தையும் கற்பதன்மூலம் பேச்சுக் குரிய இரண்டு மொழிகளைக் கற்பவர் ஆகின்றோம். தாய் மொழியானது சொந்த இயல்பை வளர்க்கிறது. ஆங்கில மொழி நவீன பௌதிக விக்ஞானத்தை நமக்கு நல்குவதோடு கூட உலகம் முழுவதுடன் தொடர்வு வைப்பதற்கு உதவு கிறது. பண்பாட்டுக்குரிய மொழியாகிய சம்ஸ்கிருதத்தைக் கற்பதன் மூலம் நமது பண்பை வளர்க்கின்றோம். எனவே இந்தக் கல்வித்திட்டம் குறையில்லா நிறை நிலைக்கு நம்மை எடுத்துச் செல்லும். கல்வியினின்று விளையக்கூடிய எல்லா விதமான மேன்மைகளையும் நாம் பெற்றவர் ஆவோம். தாய் மொழியை வளர்ப்பதோடுகூட சம்ஸ்கிருதத்தை வளர்ப் பதன் பயனாக இந்தியா முழுவதையும் ஒரு ஞான பூமியாகக் கருதுதற்கு அது பயன்படுகிறது. எனவே நமது கல்வித் திட்டத்தில் இப்பொழுதே இம்மூன்று மொழிகளையும் ஒன் றன்பின் ஒன்றாகக் கற்பிக்க முற்படுவோம். அது சீரிய கல்வித்திட்டமாகும். அரசியல் துறையோடு அதை சம்பந் தப்படுத்தலாகாது. அரசியல் வாதிகள் கல்வித்திட்டத்தில் தலையிடலாகாது. கல்வி நிபுணர்களுடைய கருத்துக்களை அனுசரித்தே இந்தத் திட்டத்தை நடைமுறையில் கொண்டு வரவேண்டும். அரசியல் வாதி ஒருவர் கல்வி நிபுணராக இருப்பதும் சாத்தியம். தமது அரசியல் கோட்பாட்டைப்*

பின்னணியில் வைத்துக்கொண்டு கல்வியின் சிறப்பையே கருத்தில் வைத்து கல்வி வளர்ச்சிக்குத் துணைபுரிய அவர் கடமைப்பட்டிருக்கின்றார். இந்தக் கல்வித்திட்டத்தின்மூலம் இனி நாடு முழுதுமே புத்துயிர் பெற்று எழுந்திருக்கும். சீரிய பண்பு அதன்கண் மிளிரும். வாழ்க்கைக்குத் தகுதி வாய்ந்த கல்விமான்கள் கணக்கற்ற பேர் கலாசாலையினின்று வெளிவருவார்கள்.

தற்செயலாக விவேகானந்த சுவாமிகளுக்கு மும்மொழிகள் கல்விக்குரியவைகளாய் வாய்த்தன. பழங்காலத்து ஐதிகத்தை முன்னிட்டு அவர் முதலில் சம்ஸ்கிருதத்தைக் கற்றார். அதற்குத் துணைபுரிகின்ற போக்கில் அவருடைய தாய்மொழியாகிற வங்காள பாஷை அவருக்கு உதவியது. பின்பு நவீன உயர்தரப் படிப்புக்குப் போனபோது அவர் ஆங்கிலம் கற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால் அதைக் கற்க முதலில் அவர் அறவே மறுத்தார். பின்பு ஊக்கத்துடன் அதில் கருத்தைச் செலுத்தினார். உலகத்தோடு அருள்துறையில் இணக்கம் கொள்ள அது அவருக்கு உதவி செய்தது உலகு அறிந்த விஷயமாகும். இங்ஙனம் மும்மொழி ஞானத்துக்கு விவேகானந்தர் நல்ல எடுத்துக்காட்டு ஆகிறார். ஒருவன் மொழி வல்லுநன் ஆவதற்கு மும்மொழிகளில் விற்பன்னம் வேண்டும் என்று கல்வி நிபுணர்கள் கூறுகின்றனர்.

# 11. பண்புடைய கல்வி

## கேடில் விழுச் செல்வம்

இயற்கையில் பண்பட்ட நிலை, பண்படாத நிலையென இரண்டு நிலைகளுண்டு. ஜடப்பொருள்களிடத்தும் உயிர் வாழ்வன விடத்தும் இவ்விரண்டு தரங்கள் யாண்டும் தென் படுகின்றன. பூமிக்குள் இரும்பு மண்ணோடு மண்ணாக புதைந்து கிடக்கிறது. அது பண்படாத நிலை. பின்பு அதை வெட்டியெடுத்து உலையிலிட்டுக் காய்ச்சுமளவு அது பண் படுகிறது. முழுதும் பண்பட்டு விட்டால் அது துருபிடிக்காத எஃகு ஆய்விடும். இப்படி இரும்பு அடைந்துள்ள புதிய நிலைக்கும் பழைய நிலைக்கும் வெகு தூரம். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் இங்ஙனம் பண்பாடு அடையக் கூடியவைகளேயாம். உயிர்களும் தத்தம் அமைப்புக்கு ஏற்பத் திருந்தியமைய வல்லவைகள். வாழ்வு என்று அழைக்கப்படும் ஓயாத முயற்சியால் அவைகள் அறிந்தோ அறியாமலோ சீரடைந்து வருகின்றன

மனிதன் அடைய வேண்டிய சீரமைப்பு மிகப் பெரியது. நாம் அறிந்துள்ள உயிர்வகைகளுள் சீரமைப்பில் மனித னுக்கு ஒப்பானது வேறு ஒன்றுமில்லை. மனிதன் ஒருவனே மாண்புகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து அமையப்பெற முடியும். மாண்பு உடையவன் ஆக வகையுடன் முயலுபவன் மாணாக்கன். அவனுடைய முயற்சி நல்வாழ்க்கையாகத் துவங்குகிறது. தொடர்ந்து மாணாக்கனாக இருந்து கொண்டே நல்வாழ்வை அவன் பூர்த்திபண்ணுகிறான், வாழ்நாள் முழுதிலும் கற்றுக்கொண்டிருக்கும் மனிதனே உண்மையில் வாழ்க்கைப் பயன் முழுதையும் எய்துகிறான். கற்க மறுக்கும் ஒருவன் வாழ்ந்தும் வாழாதவனாய்ப் போய்

விடுகிறான். புத்தகத்தை நாள்தோறும் படித்துக்கொண்டிருப்பவன் கற்பவன் ஆகான். படித்தும், கேட்டும், பயின்றும் மனத்தைப் பண்படுத்துபவனே கல்வி பெறுபவன் ஆகிறான்.

**கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு**
**மாடல்ல மற்றை யவை.**

மனம் அடைகிற பண்பாடு மனிதனைத் தெய்வத்தோடு ஒன்றாக்கி விடுகிறது. கேடு ஒன்றுமில்லாப் பெருநிலை அது. சிறப்பு அனைத்தும் ஆங்கு நிறைந்துள்ளது. அத்தகைய பாங்கை வளர்ப்பது பண்புடைய கல்வி.

நசிகேதன் என்னும் ரிஷி புத்திரன் ஒருவன் இருந்தான். அவனுடைய விருப்பம் பண்புடைய கல்விக்கு இலக்காகிறது. கௌதமர் என்ற ரிஷிக்கு அவன் மைந்தன். அப்பெரியவர் விச்வஜித் என்ற வேள்வியைத் துவக்கினார். அதை முறையாகச் செய்து முடிக்கிறவர்க்கு உலகனைத்தும் சொந்தமாகிறது. ஆனால் கௌதமரிஷி முதல்நிபந்தனையையே நிறைவேற்றவில்லை. விச்வஜித் யாகம் செய்பவன் தன்னிடத்துள்ள பொருள்களை யெல்லாம் உலகுக்கு நன்கு பயன்படுபவைகளாகச் செய்து விடவேண்டும். அதைக் குறித்து மனதில் கிலேசமோ தங்கு தடையோ ஒன்றுமிருக்கலாகாது, கௌதமருக்கோ அப்படி மனம் வரவில்லை. தமக்குதவாத பொருள்களை மட்டும் தாராளமாகப் பிறர்க்கு கொடுத்து வழங்கினார். பசு வகைகளுள் மலடும், மேலும் ஈனாததும், வீணே தீனி தின்று நீர் குடித்திருந்தவைகளும் அவர் உலகுக்கு வழங்கின பொருள்களாயின. ஒவ்வாத அச்செயலைக் கண்ட மைந்தன் நசிகேதனுக்கு மனத்தகத்து எழுச்சி உண்டாயிற்று. "தந்தை செய்வது தகாத செயல்; இதனால் அவருக்கு இம்மையுமில்லை, மறுமையுமில்லை.

இதற்கு ஈடு கொடுப்பது என் கடமை. அவருக்கு நான் தலை மாணாக்கன் அல்லேன் எனினும், கடை மாணாக்கன் ஆகேன்." இங்ஙனம் தனக்குள் பணிவுடனும் உறுதியாகவும் எண்ணிக்கொண்டான். "அப்பா, என்னை யாருக்குத் தானமாகக் கொடுக்கிறீர்கள்?" என்று சபை நடுவே அவன் கேட்டான். கௌதமர் அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. இரண்டாந்தடவை வந்த அதே கேள்வியை அவர் வேண்டுமென்றே ஏதோ ஓலமிட்டு மறைத்து விட்டார். மூன்றாந்தடவை வந்த விண்ணப்பத்தை புறக்கணிக்கப் பிதாவுக்கு முடியாமற்போயிற்று. "நசிகேதா! உன்னை நமனுக்குப் பிடித்துக் கொடுக்கிறேன்" என்று சினந்து அரற்றினார் தந்தை. 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை'. அவர் மொழி பொய்யா மொழியாக வேண்டும், என்று இயம்பிவிட்டு மைந்தன் மறலியின் இருப்பிடத்துக்குப் போனான். ஆனால், அப்பொழுது யமன் வீட்டிலில்லை. ஊண், உறக்கமின்றி நசிகேதன் மூன்று நாள் காத்திருந்தான். திரும்பி வந்ததும் தர்மராஜன் தனது பராமுகத்துக்குப் பரிகாரமாக மூன்று வரங்களை ஏற்றுக்கொள்ளும்படி குணவானாகிய அவ்விளைஞனிடம் வேண்டினான். ரிஷிபுத்திரனும் அதற்கிணங்கி மூன்று வரங்கள் கேட்டான். தன் தந்தை கௌதமர் அமைதியுற்றிருந்து தன்னைத் திரும்பவும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது முதல் வரம். மனிதன் என்ன செய்தால் பெறவேண்டியதையெல்லாம் பெற வல்லவனாகிறான் என்றறிவது இரண்டாவது வரம். மரணத்துக்கு அப்பால் உள்ளது யாது என்று தெரிவது மூன்றாவது வரம். நசிகேதனுடைய பண்பனைத்தும் இவ்வரலாற்றில் வெளியாகிறது. இளைஞன் ஒருவன் எவ்வகையில் பயிற்சி பெற்றிருக்கவேண்டும் என்பதற்கு இது யாண்டும் எடுத்துக் காட்டாகும்.

**ஒழுக்கம்**

மாணாக்கன் ஒருவன் அடையும் மாண்புகளில் முதலாவ தாயிருப்பது ஒழுக்கம். எப்படியாவது உயிர் வாழ்ந்திருந் தால் போதும் என்பது மற்ற சிற்றுயிர்களின் குறிக்கோள். மற்று, ஒழுக்கத்தில் முற்றும் முன்னேற்றமடைவது மனித னது லட்சியம்.

**ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்.**

கல்விமான் ஒருவனுக்கு உயிரினும் சாலச் சிறந்தது ஒழுக்கம். எந்த மாணாக்கன் புலனடக்கம் படைத்திருக் கிறானோ அவனிடத்து ஒழுக்கம் காணப்படும். அவ னுடைய மனம், மொழி, மெய்யாகிய முக்கரணங்களும் தூயவைகளாகத் திகழும். பாராட்டத்தக்க நல்ல செயல் களிலேயே அவனுடைய கரணங்கள் ஈடுபடும். ஒழுக்க மில்லாதவன் சுயநலத்திலே கண்ணுங் கருத்துமாயிருப் பான். தனக்கு இன்பம் தருபவைகளாகத் தென்படுபவை களை யெல்லாம் அவன் தன்னுடையவைகளாக்க முயலு வான். உலகில் மற்ற உயிர்கள் இருப்பது தன் பொருட்டு என்பது அவன் கருத்து. ஒழுக்கமுடையவனது எண்ணம் அதற்கு நேர்மாறானது. தன்னிடத்திருக்கும் நலத்தை அவன் பிறர்க்கென்று வைத்திருக்கிறான். பிறர் நலத்தில் வைத் துள்ள எண்ணம் தன்னலத்தை மறக்கும்படி செய்துவிடு கிறது. நல்லொழுக்கத்திற்குச் சான்று நசிகேதன். அவன் அடக்கமே வடிவெடுத்தவன். அத்துடன் பணிவு அவனுக்கு ஆபரணமாக வந்தமைகிறது. அவனே தலை மாணாக்கன். ஆனால், பணிவை முன்னிட்டுத் தந்தையின் மாணாக்கர் களுள் தன்னை இடை மாணாக்கனாக வைத்துக்கொள் கிறான். அது அவனுடைய மனப்பண்பாட்டை விளக்குகிறது.

தன் தந்தை கௌதமருக்கு எவ்விதத்திலும் தீங்கு விளைய லாகாது. அவர் கொண்டிருந்த குறி மிகப்பெரியது. அதற் கென்று அவர் கையாண்ட நெறி தவறுதலானது. தவறிய நெறியில் உயரிய குறியை அடைய முடியாது. ஆதலால் அவரது நன்மையின் பொருட்டே இளைஞன் உழைத்தாக வேண்டும். வயதில் பெரியோர் எல்லாரும் எப்பொழுதும் ஒழுக்கத்திலும் பெரியோராய் இருப்பர் என்பது உண்மை யல்ல. வயதில் சிறியோர் எல்லாரும் ஒழுக்கத்திலும் சிறியோ ராய் இருப்பார் என்பதும் உண்மையல்ல. நேர்மையான வாழ்க்கையை அறிந்து அதை உறுதியாகக் கடைப்பிடிப்ப வரே சீரியர் ஆகின்றனர். ஆனால் தந்தை கௌதமருக்குச் சீரியஒழுக்கம் சிறந்ததாகத் தோன்றவில்லை. யமலோகத்துக் குப் போவதை அவர் ஒரு தண்டனையாகக் கருதுகிறார். மகன்மீது அத்தகைய தண்டனையை அவர் விதிக்கிறார். ஆனால், ஒழுக்கத்தை உயிரினும் பெரியதாக ஓம்பிய நசிகே தன் இன்ப துன்பத்தைப் பொருட்படுத்தவில்லை. பெற்ற வரத்தில் முதலாவதைத் தந்தையின் நன்மைக்கென்றே ஒதுக்கிவைத்துவிடுகிறான். படாதபாடுபட்டு அவருக்கு நலத்தையே செய்யவேண்டும். பிறகு அவரைத் திருப்தி படுத்தியும் வைக்கவேண்டும். ஒழுக்கமுடையவனுக்கே இத் தகைய செயற்கரிய செயல் சாத்தியமாகிறது. ஒழுக்கத்தை உறுதியாக 'அடையப்பெற்றவன் பண்புடைய கல்விமான் ஆகிறான்.

## அடிபணிதல்

கீழ்ப்படிதல் என்பது அத்தகைய கல்விமானிடத்து அமைந்துள்ள இரண்டாவது சிறப்பு ஆகிறது. கீழ்ப்படித லும் அடிமையாவதும் ஒன்றல்ல; கீழ்ப்படிகின்றவன் தக் கோன் ஆகிறான், அடிமையோ தகவிலன் ஆகிறான். கீழ்ப்

படிதல் நல்லறிவினின்று வருகிறது. அடிமைத்தனம் மடமையி னின்று வருகிறது. படியத் தகாதவனிடத்தில் படிவது ஒரு வித மடமை; கொடுங்கோலுக்கோ தீமைக்கோ வசமாதல் அடிமையின் போக்கு. நலத்துக்கும் மேன்மைக்கும் படியா திருத்தல் மற்றொருவித மடமையாகும். அறம் காப்பதும் சொன்னசொற் காப்பதும் மேன்மையுள் மேன்மையாகும். தனது தந்தையின் நன்மைக்கென்றே நசிகேதன் கீழ்ப்படிந்து யமன் வாயிலுக்குப் போகிறான், அதன் மூலம் அறம் காக் கப்படுகிறது. அதேவேளையில் தந்தையின் சொல்லும் காக்கப்படுகிறது. தந்தையின் ஆணைக்குத் தகைமை தந்த மைந்தன் அவன். முறையறிந்து கீழ்ப்படிகிறவன் தன்னை யும் மேன்மைப்படுத்துகிறான். தனக்கு ஆணையிட்டவரை யும் மேன்மைப்படுத்துகிறான். அடங்கி நடப்பது கற்பவை களுள் மிக முக்கியமானது. அடங்கி நடக்கக் கற்றுக் கொண்டவன் ஆளக் கற்றுக்கொண்டவனாகிறான். படிந்து நடந்தவர்களே பாருலகில் அருளாளரும் பொருளாளரும் ஆனார்கள்.

கோயிலுக்குச் சென்று கணபதியின் முன்னிலையில் நாள்தோறும் தலைகுட்டி, தோப்புக்கரணம் போடும் பழக் கம் பிள்ளைகளுக்குப் பண்டைக்காலம் தொட்டுப் புகட்டப் பட்டு வந்துள்ளது. பெரியவர்கள் ஆனபின்பும் இப்பழக் கத்தை அவர்கள் விட்டுவிடுவதில்லை. ஆனால், இதன் உட்கருத்து மட்டும் பலர்க்குத் தெரியாது. பொருளற்ற வழிபாடாகவும் வழக்கமாகவும் இன்று அது இருந்துவரு கிறது. அகிலாண்டத்தின் நடைமுறையில் அறிவோடு கூடிய ஒழுங்குப்பாடு ஒன்று உண்டு. அதை மாற்றவோ, கூட்டவோ குறைக்கவோ யாருக்கும் இயலாது. அறிவும் ஒழுங்குப்பாடும் உருவெடுத்திருப்பது கணபதி அல்லது

பிள்ளையார். அப்பெரிய பொருளின் ஒழுங்கு முறைக்குக் கீழ்ப்படிந்து நடத்தல் அறிவுடையோர் செயல். கீழ்ப்படி கிறவனுக்கு விக்கினமில்லை. மீறி நடக்கிறவனுக்கோ கேடு மிகவுண்டு. கீழ்ப்படிதல் தக்காரது தனிச் செயல். எதற்கு, எப்பொழுது, எங்ஙனம் கீழ்ப்படிதல் வேண்டு மென்பதைக் கற்கவேண்டும். பண்பாடு என்பது அதுவே.

கேடு ஒன்றுக்கு அடிமைப்படுபவன் தானே கேட்டுக்கு இருப்பிடமாய் விடுகிறான். அடிமைத்தனத்தை வளர்ப்பவர் களுக்கிடையில் இக்கோட்பாட்டைக் காணலாம். கொடுங் கோல் மன்னனது கொடூரத்தன்மைக்குச் செம்பாதி காரண மாயிருப்பது அவனது சிற்றியல்பு. மற்றச் செம்பாதிக்குக் காரணபூதங்களாகிறவர்கள் அவனது கொடூரத் தன்மைக்கு அடிபணிந்த அடிமைகளேயாம். கீழோர்க்கும் அக்கீழோ ரது கீழ்மைக்கும் நாம் அடிமைப்படோம் என்ற உறுதியில் ஊறி வளர்பவர்கள் நல்ல கல்விமான்கள் ஆவார்கள். மற்றும் ஒழுங்குப் பாட்டுக்குக் கீழ்ப்படிதலில் ஆதியோடந்தம் நலமே வந்தமைகிறது. மனம் தெளிந்து திட்பம் செறிந்த தகையை ஆங்கே காணலாம். நேர்மைக்கு முறையாகக் கீழ்ப்படிதல் மூலம் நசிகேதன் படிப்படியாகத் திண்ணிய னானான். நலத்துக்கு அடிபணிந்து அவன் நலத்துக்கே சொந்தமாய்விட்டான். அதன் விளைவாக நலமனைத்தும் அவனுக்குச் சொந்தமாய்விட்டது. அடங்கி நடப்பவரே ஆளவல்லவர் ஆவார் என்ற கோட்பாடும் அவன் வாயிலாக நிறுவப்பட்டது.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

என்னும் மறைமொழிக்கு நசிகேதன் போன்ற சான்றோன் என்றைக்கும் சான்றாகிறான்.

**ஊக்கம்**

பண்புடைய கல்வியின் மூன்றாம் கிளையாய் அமைந் திருப்பது ஊக்கமுடைமை. மாணாக்கன் ஒருவனிடத்து ஊக்கம் எவ்வளவு பெரிதாய் வடிவெடுக்கிறதோ அவ்வளவு மாண்புடையவன் ஆகிறான் அவன். மனத்தகத்து மறைந்து கிடக்கும் ஆற்றலும் ஆர்வமும் எழுச்சி பெற்றெழுந்து நல் வினையாகப் பரிணமிக்கப் பொங்கிக்கொண்டிருக்கும் பேரு ணர்ச்சிக்குச் சிரத்தை அல்லது ஊக்கம் என்று பெயர். சிரத்தை யுடையவனுக்கு ஆயாசமில்லை. செயல் புரியு மளவு புதிய ஊக்கம் வருகிறது. அவனால் செய்து சாதிப் பதற்கு இயலாதது ஒன்றுமில்லை. வேலை எவ்வளவு கடினமானதோ அவ்வளவு ஆழ்ந்ததாகிறது ஊக்கம். ஊக்க முடையவன் ஆக்கமே வடிவெடுத்தவன் ஆகிறான். வாழ்க் கையில் அரைகுறைச் செயல் ஒன்றும் அவனுக்கில்லை. பெரிய செயல் சிறிய செயல் என்ற பேதத்தையும் அவன் அறியான். வெற்றியில் ஊக்கமும் தோல்வியில் தளர்ச்சியும் மற்றவருக்குண்டு. ஊக்கமுடையவனுக்கு வெற்றி தோல்வி களுக்கிடையில் ஊக்கமொன்றே உருவெடுத்து நிற்கிறது.

உடைய ரெனப்படுவ தூக்க மஃதில்லார்
உடைய துடையரோ மற்று.

என்ற மறைமொழிக்கு இலக்கா இருப்பவனே கற்றவனா கிறான். ஒரு மனிதன் எத்தனை தேர்வுகளில் தேர்ந்திருக் கிறானென்று விசாரித்து நவீன உலகம் அவனது கல்வியை மதிப்பிடுகிறது. ஆனால், கல்வியின் பயனறிந்தவர் அம் மனிதனது ஊக்கமறிந்து அவனை மதிப்பிடுவர்.

ஊக்கத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவன் நசி கேதன். அவனது செயல் ஒவ்வொன்றும் சிரத்தையினின்

றும் உதிப்பதாகும். தலை மாணாக்கனென்று தன்னைப் பெருமிதப்படுத்தாதிருந்தது அவன் கொண்டிருந்த ஊக்கத்தின் விளைவாம். தன்னைப் பெருமிதப்படுத்துபவனுக்கு மேலும் மன வளர்ச்சியுண்டாவதில்லை. எவ்வளவு மாண்புடையவனாயிருந்தாலும், தான் மேலும் அடையவேண்டிய மாண்பு மலையிலும் மிகப்பெரியது என்ற மேல்நோக்கம் கொண்டிருப்பவனே சிரத்தையுடையவனாகிறான். அது நசிகேதனது சிறப்பு. தந்தைக்குத் தான் ஆற்றும் கடமையில் அவனுக்குத் தளர்வு உண்டாகவில்லை. மண்ணுலகில் அக்கடமையை அவன் முறையாகச் செய்து முடிக்கிறான். விண்ணுலகு என்ற யமலோகத்துக்கு அவன் மகிழ்ச்சியுடன் சென்றதும் தந்தையின் பொருட்டேயாம். அங்கேயும்தான் பெற்ற முதல் வரத்தைத் தந்தைக்கென்றே பயன்படுத்திக் கொள்கிறான். பெற்றோர்க்குத் தன் கடமையைச் செய்வதில் அங்ஙனம் அவன் ஊக்கமே வடிவெடுத்தவன்.

உலக மக்களது நன்மையை நசிகேதன் மறந்துவிடவில்லை. அவர் முன்னேற்றத்திலும் அவன் ஊக்கங்கொண்டிருந்தான். அவன் கேட்ட இரண்டாவது வரம் அதற்குச் சான்றாகிறது. விரும்பியதையெல்லாம் விரும்பியபடி அடைதற்கு மனிதன் என்ன செய்ய வேண்டும் என்பது அவன் கேட்ட இரண்டாவது வரம். பண்பாடும் முறையான முயற்சியும் ஒன்று சேர்ந்து மனிதனுக்கு வேண்டியதையெல்லாம் வழங்கும் என்ற விடை வந்தது. மனிதன் தன்னை எதற்குத் தகுதியுடையவனாக்குகிறானோ அது அவனை விட்டுப் போகாது. ஒருவன் பக்குவமடையுமளவு தகுதி தானே வந்தமைகிறது. தகுதியுடையவனுக்கு விரும்பியதெல்லாம் விரைவில் வந்தமைகிறது. இவ்வுண்மையை அறிந்து முயலுவார் எவ்வுலகில் எதை வேண்டுமானாலும் பெற்றுக்கொள்ளலாம்.

நசிகேதன் கேட்ட மூன்றாவது வரம் மரணத்துக்கு அப்பால் உள்ளது யாது என்பதைப்பற்றியது. அதன் மூலம் மனிதனது அழியாப் பெருநிலையை அவன் அறிபவன் ஆகிறான். இகபரம் இரண்டும் மனிதனுக்குச் சொந்தம். இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றைமட்டும் தனியாகச் சார்ந்திருப்பது பண்பட்டாரது செயலன்று. இம்மை மறுமையாகிய இருமையும் பெறவேண்டிய பெருநோக்கம் மனிதனிடத்து இருக்கவேண்டும். இங்ஙனம் மூன்று வரத்துக்குள் வாழ்க்கை சம்பந்தமான அனைத்தையும் நசிகேதன் அடக்கிவிடுகிறான். மேலும் பெறவேண்டியது மனிதனுக்கு ஒன்றுமில்லை. செய்யவேண்டிய கடமைகளிலும் அவனுக்குப் பாக்கியொன்றுமில்லை. ஊக்கமுடைய ஒருவனுக்கு எதெல்லாம் சாத்தியமாகிறது என்பதை அவன் காட்டுகிறான்.

இவ்வாறு ஒழுக்கமும், கீழ்ப்படிதலும், ஊக்கமும் படைத்திருப்பவன் கசடறக் கல்வி கற்றவனாகிறான். குறைபாடுகள் ஒன்றையும் அவன் செயலில் காணமுடியாது. தொடுத்த கருமத்தை யெல்லாம் தீங்கின்றி அவன் செய்து சாதிப்பான். தோல்வி என்பதும் தடைப்படுதல் என்பதும் அவனுக்கில்லை. எவ்விதச் சூழ்நிலையையும் வெற்றிக்கேற்ற வாய்ப்பாக அவன் அமைத்துக்கொள்கிறான். பண்படாதவன் பார்வையில் எங்கும் பிரதிகூலமே முந்திநிற்கிறது. பண்பட்டவனுக்கு அமைவதெல்லாம் அனுகூலமான நல்வாய்ப்பாகும். எல்லாக் காரியத்துக்கும் அவனே தகுந்தவன்; எவ்விடத்திற்கும் அவனே பொருந்தியவன்; நல்லார்க்கெல்லாம் அவனே இனியவன்; மேலாம் வாழ்க்கைக்கு அவனே விளக்கமாகிறான். சமுதாயத்தைச் சீரிய சமுதாயமாக்குவதற்குப் பண்புடைய கல்வியொன்றே உற்ற உபாயம்.

# 12. நிறை கல்வி

**விளக்கம்**

நல்வாழ்வு கல்வியின் பயனாய் அமைந்துள்ளது. ஒருவன் கற்றவனா, அல்லது கல்லாதவனா என்பதைப் பொதுவாக உலகம் எழுதப் படிக்கத் தெரிந்திருப்பதிலிருந்து மதிப்புப்போடுகிறது. ஆனால் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களெல்லாரும் கற்றவர்களல்லர்; எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் எல்லாரும் கல்லாதவர்கள் அல்லர். ஒருவன் வாழ்கிற வாழ்க்கையிலிருந்து அவன் கற்றிருப்பது யாது என்பது விளங்கும். நல்ல முறையில் கல்வி கற்றிருப்பவன் நல்வாழ்வு வாழ்கிறான். கல்வியில் மேல்நிலைக்குப் போகப் போக வாழ்வு மேலானதாகிறது. நிறை கல்வி கற்றிருப்பவன் நிறை வாழ்வு வாழ்கிறான். நிறைவாழ்வு வாழ்கிறவன் நிறைமனிதன் ஆகிறான். கல்லூரியில் பட்டம் பெற்றிருப்பதைக்கொண்டு ஒருவன் பெற்றிருக்கும் கல்வியை மதிப்புப் போடுவது பலரது வழக்கமாய்விட்டது. அதற்கு மாறாக ஒரு மனிதன் வாழ்ந்து வருகின்ற வாழ்க்கையினின்றே அவனுடைய கல்வியை மதிப்புப்போடவேண்டும். வாழ்வு நிறை வாழ்வு ஆகுங்கால் மனிதனும் நிறை மனிதன் ஆய்விடுகிறான். நிறை மனிதனுக்கு இனி விளக்கம் தருதல் அவசியமாகிறது.

மரம் ஒன்று வளர்கிறது. அது மிகைபடக் கொழுத்துப் போய்விட்டால் பூவோ, கனியோ தருவது குன்றிவிடும். பூவையும் கனியையும் மிகைபட அது கொடுக்குமிடத்து விரைவில் அம்மரம் பட்டுப்போய்விடும். செழித்து வளராவிட்டால் அதன் வாழ்வு குறைவாழ்வு ஆய்விடும். இப்பொழுது மரம் ஒன்றினுடைய நிறை வாழ்வு எத்தகையது என்பது நமக்கு விளங்குகிறது. அது செழித்து வளர்ந்

திருக்கவேண்டும். ஆனால் பலன்தர முடியாதபடி அது கொழுத்துப்போய்விடலாகாது. தருகிற பலன் அளவெடுத்த தாயிருக்கவேண்டும். அப்பொழுது அது நெடிது வாழ்ந் திருக்கிறது; செழித்து வளர்ந்திருக்கிறது; நல்ல பலனை நெடுநாளைக்குத் தொடர்ந்து தந்துகொண்டிருக்கிறது. இந்த நிபந்தனைகள் எல்லாம் நிறைவேறுமிடத்து அந்த மரத்தின் வாழ்வை நிறை வாழ்வு எனலாம். நிறை வாழ்வு வாழ்கிற மனிதன் ஒருவனிடத்து இதே விதத்தில் சில சிறப் புக்கள் நிறைவேறப் பெற்றிருக்க வேண்டும். நோயற்ற வாழ்வு, நல்வாழ்வு ஆகிறது. வாழ்க்கைத் தத்துவத்தை அறியாத மனிதன் ஒருவன் பல நோய்களை வலிய வர வழைத்துக்கொள்கிறான். நோய்க்கு இடந்தராது வாழ்ந்து வருபவன் வாழக் கற்றுக்கொண்டவன் ஆகிறான். நோயற்ற நிலை அவனது வாழ்க்கைக்கு நல்ல அஸ்திவாரம் ஆகிறது. உடல் திட்பம் படைத்தவனாக ஒருவன் வாழ்ந்து வரவேண் டும். ஆனால் ஒருவனுக்கு அளவுக்கு மீறி உடல் பருத்தோ, கொழுத்தோ போய்விடுமானால் அவனுக்கு அறிவு வளர்ச்சி குன்றிவிடும். மனிதனுக்கு உடல் வளர்ச்சி எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு இன்றியமையாதவைகளாய் அன்பு வளர்ச்சியும் அறிவு வளர்ச்சியும் இருக்கின்றன. விதவிதமான உணவு வகைகள் பொருத்தமாக அமையு மிடத்து உடல் வளர்ச்சி ஒழுங்காக நடைபெற்று வருகிறது. உயிர்களோடு வைக்கவேண்டிய இணக்கத்தைப் பாங்குடன் வைக்கின்றவனே அன்பில் ஊறி வளர்பவன் ஆகின்றான். உலகுக்கும் தனக்கும் உள்ள தொடர்பை உள்ளபடி அறிந்து கொண்டு அதற்கேற்றவாறு வாழ்க்கையை நடாத்தி வரு பவன் நல்லறிவைப் பெற்றவனாகிறான். எனவே, நிறை வாழ்வு வாழ்ந்து வருகிற ஒருவனிடத்து ஆற்றலும், அன்பும்,

அறிவும் ஒழுங்காக மேலோங்கி வருகின்றன. முக்கோணங் களுள் மூன்று பக்கங்களும் சமமாக அமைந்திருக்கின்ற முக்கோணமே சிறந்தது. இயற்கையின் அமைப்புக்கே சின்னமாக அது எடுத்துக்கொள்ளப்படுகிறது. மனித னுடைய பேரியல்புகளை சமபக்கங்கள் படைத்துள்ள முக் கோணத்தோடு ஒப்பிடலாம். மனிதனிடத்துள்ள இயல்பு களனைத்தையும் ஆற்றல், அன்பு, அறிவு என்னும் இந்த மூன்று தலைப்புகளுள் அடக்கிவிடலாம். செழித்து நன்கு வளர்கிற மரம் ஒன்றுக்கு வேர், கிளை முதலியன மிகைபடா மலும், குறைபடாமலும் பொருத்தமாக அமைந்திருக்க வேண் டும். நிறைவாழ்வு வாழ்ந்து வருகிற மனிதனிடத்து ஆற்றல் அன்பு, அறிவு ஆகிய மூன்று மகிமைகளும் தாரதம்மியம் இல்லாது ஒழுங்காக அமைந்திருக்கவேண்டும். இப்பொழுது நிறை கல்விக்கும் நமக்கு விளக்கம் கிடைக்கிறது. மனித னிடத்துள்ள இந்த மூன்று பேரியல்புகளையும் முறை யாக ஓம்புதற்கான நிறை திட்டம் எதுவோ அது நிறை கல்வித்திட்டம் ஆகிறது. அத்திட்டத்துக்கு ஏற்பப் பாங் குடன் பயிற்சி பெற்றிருப்பவன் நிறைகல்வி பெற்றவனா கிறான்.

செழித்து நன்கு வளர்ந்து வருகிற செடி ஒன்றுக்கு வசதியான சூழ்நிலையை உண்டுபண்ணிக் கொடுப்பது தோட்டக்காரனுடைய வேலை. அப்பொழுது அச்செடியின் வளர்ச்சி நிறை வளர்ச்சியாகத் தானாகவே அமைந்துவிடு கிறது. மனிதனிடத்து ஆற்றலும், அன்பும், அறிவும் ஒரு மிக்க ஓங்குதற்கான சூழ்நிலையை அமைப்பது நிறைகல்வித் திட்டத்தின் முதற்பகுதி. அந்த மூன்று சிறப்புகளும் முறை யாக ஓங்குதற்கான ஊக்கத்தை வழங்குவது நிறைகல்வித் திட்டத்தின் இரண்டாவது பகுதி. அன்றாட வாழ்க்கையில்

அப்பேரியல்புகள் எல்லாம் செயலாகப் பரிணமிக்கும்படி செய்து வைப்பது நிறைகல்வித் திட்டத்தின் மூன்றாவது பகுதி. இந்த நிபந்தனைகளையெல்லாம் கல்வியைப் புகட்டு கின்றவனும், அதை ஏற்கின்றவனும் நிறைவேற்றி வந்தால் நிறைகல்வித் திட்டம் செயலுக்கு வந்தாய்விட்டது எனலாம். அதன் பயனைப் பெற்று வருபவன் இயல்பாகவே நிறை வாழ்வு வாழ்ந்து வருபவன் ஆகிறான். பிறகு அதன் பயனாக அம்மனிதன் நிறை மனிதன் ஆய்விடுகிறான்.

வாழ்வு எப்படி உருவெடுத்து வருகிறதோ அதை யொட்டியே கல்வியை வழங்கி வரவேண்டும். பிறந்த குழந்தை யொன்று தன் உடலையும் உறுப்புக்களையும் அசைத்துப் பழகுகிறது. மல்லாந்து படுத்துக்கிடக்கும் குழந்தை ஒன்று முயன்று முயன்று குப்புற விழுந்து பழகு கிறது. வாழ்க்கையில் அதற்கு அது ஒருபெரிய வெற்றி. பிறகு படுத்துக்கிடந்தபடி கைகளையும் கால்களையும் தரையில் உந்தி நகர்ந்து பழகுகிறது. அப்பொழுது நிலைத்திணையி னின்று இயங்குதிணையின் நிலைக்கு அக்குழந்தை வந்து விடுகிறது. புழு பூச்சி போன்று அது நகர்கிறது. வாழ்க்கை யில் அது இரண்டாவது வெற்றி. அடுத்தபடியாகக் கைகளை யும் முழங்கால்களையும் கொண்டு விலங்குகள் போன்று அது நகர்கிறது. அது மூன்றாவது வெற்றி. குழந்தை நிமிர்ந்து உட்காருகிறது. அது நான்காவது வெற்றி. எழுந்து நிற்கிறது. அது ஐந்தாவது வெற்றி. நிமிர்ந்து நின்று இரண்டு கால்களால் தத்தித் தத்தி நடந்து பிறகு நன்கு நடக்கிறது. இது ஆறாவது வெற்றி. குழந்தை என்னும் முருகவேளுக்கு வாழ்க்கையில் இந்த ஆறுவிதமான வெற்றிகளும் ஆறுபடை வீடு போன்றவைகள். ஆற்றல் இங்ஙனம் வாழ்வில் வடிவெடுத்து வருவதாகிறது. இந்த

ஆற்றலை மேலும் வளர்ப்பது நிறைகல்வித் திட்டத்தின் பகுதியாகும்.

பெற்றெடுத்த தாய் அக்குழந்தையைப் பேணுகிறாள். அத்தாயினிடத்துப் பற்றுவைக்கும் பான்மை குழந்தைக்கு வருகிறது. நாள் ஏற ஏற அப்பற்று அதிகரிக்கிறது. தாயைவிட்டுப் பிரிந்திருக்கக் குழந்தை ஒருப்படுவதில்லை. தாயைப் பார்க்கின்றபொழுது முகமலர்ச்சி. தாய் தன்னை எடுத்து மடியில் வைத்திருக்கிறபொழுது முகமலர்ச்சி. பாலூட்டும் பொழுது குழந்தைக்கு இன்பம் ததும்புகிறது. மேனியைத் தொட்டுத் தாய் விளையாடும்பொழுது குழந்தை சிரிக்கிறது. இப்படியெல்லாம் அன்பு வளர்ச்சியடைகிறது. இந்த அன்பை மேலும் பெருக்குவது நிறைகல்வித் திட்டத்தின் பகுதியாகும்.

மற்றவர்களை அடையாளம் தெரிந்து கொள்ளுதற்குத் தாய் குழந்தைக்குப் பாடம் புகட்டுகிறாள். இது உன் தந்தையென்று தாய் புகட்டுவது முதற் பாடமாகிறது. இன்னார் தந்தையென்று அறிந்துகொள்ளுகின்ற அறிவு குழந்தைக்கு வருகிறது. பிறகு ஏனையவர்களை அடையாளம் தெரிந்துகொள்ளுகிற அறிவும் உருவெடுக்கிறது. இங்ஙனம் குழந்தையினிடத்து அறிவு வளர்கிறது. மக்களையும், பொருள்களையும் உள்ளபடி பொருள்படுத்துகிற பழக்கமே அறிவு என்னும் பெயர் பெறுகிறது. இந்த அறிவைப் படிப்படியாக உச்சநிலைக்குக் கொண்டு சேர்ப்பது நிறைகல்வித் திட்டத்தின் செயலாகும். வளர்ந்து வருகின்ற குழந்தை படைத்துள்ள ஆற்றல் அன்பு அறிவு ஆகிய நல்லியல்புகளைப் பேரியல்புகளாகப் பரிணமிக்கும்படி செய்வது எதுவோ அது நிறைகல்வித் திட்டமாகும்.

உணவை உண்டு செமிப்பதால் உடல் வளர்ச்சி உண்டாகிறது. ஆனால் மீதூண் ஏற்கலாகாது. மிகைபட்ட உணவு ஜீரணசக்தியைக் கெடுக்கும். குறைபட்ட உணவு உடலில் நலிவை உண்டுபண்ணும். தேவையாயிருக்கும் உணவை அளவெடுத்து உண்டால் உடலுக்கு ஆயாசம் வராது. உறுதியுடன் அது வளர்ச்சியடைந்து வருகிறது. உடல் வளர்ச்சிக்கும், அன்பைப் பெருக்குதற்கும், அறிவைத் தீட்டுதற்கும் உதவுவது கல்வி. எனவே மனிதனுக்கு மேலான உணவாயிருப்பது கல்வி. வாழ்நாள் எல்லாம் உடலின் பொருட்டு உணவை ஏற்றுக்கொண்டிருப்பது போன்று தனது மேலாம் அமைப்பின் பொருட்டுக் கற்றுக்கொண்டிருப்பதும் அவசியமாகிறது. கற்க மறுக்கின்றவன் பெருவாழ்வு வாழ மறுப்பவன் ஆகின்றான். சிரமம் இன்றி உடலுக்கு உரிய உணவை சிசு ஏற்கின்றது. கல்வி என்னும் உணவையும் சிசுவுக்குச் சிரமம் இல்லாது வழங்குவதே சீரிய கல்வித் திட்டமாகும். வயது வர வர சிசுக்கள் எல்லாம் விளையாட ஆரம்பிக்கின்றன. சிசுக்களின் விளையாட்டுக்களை வகைப்படுத்துவதே ஆரம்பக் கல்வியாகும். கற்கிறேன் என்ற உணர்ச்சியில்லாது விளையாடுகிறேன் என்கிற உணர்ச்சியுடன் சிசு பெறுகிற பயிற்சியே நல்ல பயிற்சியாகிறது.

## ஆற்றல்

ஆசிரியர் எதைக் கல்வித்திட்டம் என்று கருதுகிறாரோ அதைச் சிறுவன் அல்லது சிறுமி தனக்கு மகிழ்ச்சியூட்டுகிற பொழுது போக்காகக் கருதவேண்டும். ஆற்றலை வளர்ப்பதற்கான பகுதிகளையெல்லாம் ஒருமிக்கத் தொகுத்து வைப்போம். ஐந்து வயதில் துவக்கி, ஆயுட்காலமெல்லாம் பழகி வரவேண்டிய பகுதிகள் எல்லாம் இத்தொகையில் அடங்கி

யிருக்கின்றன. சிறுவன் ஒருவனுக்கு வயது ஐந்து ஆகும் வரையில் அவனுக்குப் பெற்றோர்கள் பணிவிடை செய்து கொண்டு இருக்கிறார்கள். வயது ஐந்து பூர்த்தியானதும் அச்சிறுவன் தாய்க்குப் பணிவடை செய்ய ஆரம்பிக்கவேண்டும். அதற்கேற்ற திட்டத்தை அமைத்துத் தருபவள் தாய். நாள் ஒன்றுக்குச் சுமார் பத்து நிமிஷம் தாய் இடுகிற வேளையை அச்சிறுவன் ஊக்கத்துடன் செய்யவேண்டும். பிறகு தந்தைக்குப் பணிவிடை செய்து பழகுகிற பகுதி வருகிறது. நாள் ஒன்றுக்கு ஐந்து நிமிஷமாவது தந்தைக்காகவென்று மைந்தன் பணிவிடை செய்து பழகவேண்டும். அதை அவன் மகிழ்வுடன் செய்கின்றவளவு தாயும் தந்தையும் நல்லாசிரியர்கள் ஆய்விடுகின்றனர். பிறகு பள்ளிக்கூடத்தில் விளையாடுவது போன்ற சில அலுவல்களைப் பாலர் வகுப்பிலிருக்கும் மாணவன் செய்து பழகவேண்டும். பள்ளிக்கூடத்தில் ஆங்காங்கு சிதறிக்கிடக்கும் பழைய காகிதம் குப்பை முதலியவைகளை விளையாடுவது போன்று சிறுவன் பொறுக்கியெடுத்துக் குப்பைத் தொட்டியில் போட்டுப் பழகுவது நல்ல பயிற்சி. குறிப்பிட்ட வேளைக்குப் பள்ளிக்கூடத்துக்கு வந்தே ஆகவேண்டும். மிக முந்தி வருவதற்கும், பிந்திப் போவதற்கும் இடந்தரலாகாது. குறித்த வேளையில் குறித்த செயலை ஆற்றப் பழகுதல் ஆற்றலைப் பெருக்குதற்கு உற்ற உபாயமாகிறது. ஆயுட்காலமெல்லாம் அது பயன்படக்கூடியது. அரும்பெரும் செயல்களையெல்லாம் ஆயாசமின்றிச் செய்து சாதிப்பதற்கு அது நன்கு உதவுகிறது. காலகதியும் மானுட வாழ்வும் ஒன்றுபட்டுப் போய் விடவேண்டும். குறித்த வேளையில் சூரியன் உதிப்பதுபோன்று மனிதன் தன் வேலையைச் செய்து அவசியம்.

உடைக்கும், மன அமைப்புக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஆடம்பரமாக ஆடையணிதற்கு எந்த மாணாக்கனுக்கும் அனுமதியில்லை. ஆடம்பரமான உடை வீண் கர்வத்தை உண்டுபண்ணுகிறது. இனி, கிழிந்துபோனதும் கந்தையாயிருப்பதும் அழுக்குப் படிந்து போனதுமான உடையை யணிந்துகொண்டு பள்ளிக்கூடத்துக்குவர அனுமதி தரலாகாது. அது கீழான மனப்பான்மையை உண்டுபண்ணிவிடும். வீண் கர்வம் ஒருவிதமான கெடுதலையும், கீழான உணர்வு இன்னொரு விதமான கெடுதலையும் மாணாக்கனுடைய மனதில் உண்டுபண்ணி விடுகின்றன. இந்த இரண்டு விதமான கேடுகளுக்கும் இடந்தரலாகாது. உற்சாகத்தையும், மனத்திருப்தியையும் உண்டுபண்ணுதற்கான தூய உடையையே சிறுவன் அணிந்திருக்கவேண்டும். பள்ளிக்கூடத்திற்கு வரும் பிள்ளைகள் அனைவருக்கும் ஒரே விதமான உடை தருதலில் சிறப்பு ஒன்று உண்டு. வேற்றுமையுணர்வுக்கு ஆங்கு இடமில்லை. ஒற்றுமையும், சம உணர்வும் ஒரே விதமான உடையினின்று உருவெடுக்கின்றன.

சிறுவர்களை நெடுநேரம் வகுப்புகளில் உட்கார வைத்துக்கொண்டு இருக்கலாகாது. உட்கார்ந்திருப்பதும், நின்றுகொண்டிருப்பதும், நடமாட்டம் ஆய்க்கொண்டிருப்பதும், மாறி மாறி அமைவது அவசியம். உட்கார்ந்திருக்கும் வேளைகளில் எல்லாம் சிறார்கள் நிமிர்ந்து உட்கார்ந்திருக்கவேண்டும். முதுகெலும்பு, கழுத்து, தலை ஆகிய மூன்றும் நேர்க்கோட்டில் அமைவது முற்றிலும் அவசியம். ஆசிரியர் சில நிமிஷங்களுக்கு ஒரு தடவை சிறுவர்கள் உட்கார்ந்திருக்கும் முறையைக் கவனிக்கவேண்டும். அப்போதைக்கப்போது அவர்களைத் திருத்தி உட்கார வைப்பது ஆசிரியரின் கடமை. அச்செயலையும் விளையாட்டுப் போன்று செய்ய

வேண்டும். அச்சமூட்டுகின்ற முறையிலோ, பரிகாசம் செய்கிற முறையிலோ அதைச் செய்யலாகாது.

விதவிதமான விளையாட்டுக்களில், பள்ளிக்கூட வேலைகளில் சிறுவர்கள் கலந்துகொள்வது அவசியமாகிறது. பலவிதமான உணவு வகைகள் சுவையில் பலதரப்பட்டவர்களுக்குப் பயன்படுவது போன்று விதவிதமான விளையாட்டுக்கள் ஆற்றலில் பலதரப்பட்ட பிள்ளைகளுக்குப் பயன்படும். எந்தப் பள்ளிக்கூடத்தில் விளையாட்டு வகைகள் வெவ்வேறு வடிவெடுத்து அமைகின்றனவோ அந்தப் பள்ளிக்கூடமே பயிற்சி தருதலில் சிறந்த பள்ளிக்கூடம் ஆகிறது. இராணுவப் பயிற்சியின் சிறப்புக்களை இக்காலத்து இந்தியர்களாகிய நாம் இன்னும் அறியாதிருக்கிறோம். இராணுவப் பயிற்சி பெறுகின்றவர்களெல்லாம் தங்களுடைய வாழ்க்கையைத் தாங்களே ஆளுகின்ற மன்னர்கள் ஆகிறார்கள். தன்னை ஆளத் தெரிந்தவனே பிறகு பிறரை ஆளத்தகுதியுடையவன் ஆகிறான். பன்னிரண்டு வயதுக்கு மேல் ஒவ்வொரு சிறுவனுக்கும் பணச் செலவில்லாத முறையில் சீரிய இராணுவப் பயிற்சியளிப்பது ஒவ்வொரு பள்ளிக்கூடத்தின் கடமையாகிறது. பன்னிரண்டாவது வயதில் துவங்கி பள்ளிப்படிப்பு இருக்கும் காலமெல்லாம் இராணுவப் பயிற்சியும் தொடர்ந்தே இருந்து வரவேண்டும். கட்டுப்பாடான சமுதாயத்தை அமைப்பதற்கு மக்களனைவரும் இராணுவப்பயிற்சி பெற்றிருப்பது முற்றிலும் இன்றியமையாதது.

ஓலமிட்டு ஓடியாடி விளையாடுகின்ற சிறுவன் குறிப்பிட்ட வேளைகளில் மௌனமே வடிவெடுத்தவன் ஆகவேண்டும். அமைதியுற்று அமர்ந்திருக்கக் கற்றுக்கொள்ளுமளவு ஒருவனுக்கு ஆற்றல் அதிகரிக்கிறது.

ஆசிரியர் பக்கத்தில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒரு வகுப்புக்குரியவர் அனைவரும் குறிப்பிட்ட வேளைகளில் அமைதியே வடிவெடுத்து அவரவர் அலுவல்களைப் பார்த்து வருவார்களானால் அவர்கள் எதிர்காலத்தில் நாட்டின் நன்மக்கள் ஆவார்கள் என்பதற்கு அது அறிகுறியாகும். பிறரால் கட்டாயப்படுத்தப்பட்டு அமைதியுற்றிருப்பது நல்ல பயிற்சியாகாது. பேசாது இருக்கும் பயிற்சி, கூச்சல் போடாதிருக்கும் பயிற்சி இயல்பாகவே ஒவ்வொரு மாணாக்கனுக்கும் உண்டாகும்படியான சூழ்நிலையை அமைத்து வைப்பது அவசியம்.

பன்னிரண்டு வயதுக்கு மேற்பட்ட மாணாக்கர்களனைவரும் மற்றொரு பயிற்சியை மகிழ்வுடன் பழகியாகவேண்டும். மலஜலம் கழிக்கின்ற மக்களனைவரும் தங்கள் உடலைத் திரும்பவும் தூயதாக்கிக் கொள்வதற்குத் தங்களுக்குத் தாங்களே தோட்டிகள் ஆய்விடுகிறார்கள். பள்ளிக்கூடத்திலிருக்கும் கக்கூஸைத் துப்புரவுபடுத்துதலில் முறை வைத்துக்கொண்டு ஒவ்வொரு மாணாக்கனும் வாரத்தில் ஒரு தடவையாவது அந்தப் பணிவிடையைச் செய்து வர வேண்டும். அது இழிவான செயல் என்கின்ற எண்ணம் மனத்தில் தோன்றுதற்கு இடம் கொடுக்கலாகாது. இந்த அரும்பணிவிடையைச் செய்தற்கு ஆசிரியர்களும் பெற்றோர்களும் என்றைக்கும் முன்மாதிரியாக அமையக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இழிதொழில் போன்று தென்படுவதை இறைவணக்கம் போன்று செய்து பழகுகின்றவனுக்கு ஆற்றல் மிக உண்டாகிறது.

யந்திரங்களுக்கு இடையிடையே ஓய்வுகொடுப்பதால் அவை நீடித்து உழைக்கும் ஆற்றலைப் பெறுகின்றன. மனிதனுடைய உடல் ஒரு யந்திரம். அதில் உள்ள ஜீரணக்

கருவிகள் ஓயாது உழைத்து வருகின்றன. பட்டினிபோடும் பழக்கம் நம்மவர்களுக்கிடையில் முன்பு இருந்துவந்தது. இப்பொழுது அது பெரிதும் மறைந்து போய்விட்டது. மாணவர்களுக்கிடையில் அதைப் புதுப்பிப்பது அவசியமா கிறது. திருநாட்களில் சில மணி நேரமாவது அவர்கள் உண்ணாவிரதம் பழகவேண்டும். உணவைப்பற்றிய எண் ணம் சிறிதேனும் மனதில் வராது இருக்கும்படி பழகுமளவு உண்ணாவிரதம் வெற்றிபெறுகிறது. அப்பொழுது ஜீரணக் கருவிகள் ஓய்வுபெறுகின்றன. எண்ணியதை எண்ணி யாங்கு செய்யும் திட்பம் மனதுக்கு வருகிறது. இத்தனை வித நலன்கள் உண்ணாவிரதத்திலுண்டு. வருஷத்தில் இரண்டு மூன்று தடவையாவது மாணாக்கர்கள் அந்த நல்ல பயிற்சியில் ஈடுபடக் கடமைப்பட்டிருக்கின்றனர். தினந் தோறும் காலையில் இறைவணக்கம் செய்த பிறகே உணவு ஏற்றுப் பழகவேண்டும்.

அதிகாலையில் துயிலெழுந்திருத்தல் சிறந்த சாதனை மாகும். மனது பண்பாடு அடைதற்கு அது முற்றிலும் அவ சியமாகிறது. இக்காலத்திய மாணாக்கர்கள் சூரியோதயத் திற்குப் பிறகும் உறங்கிக்கொண்டிருக்கின்றனர். அப்படிச் செய்வதால் தமோகுணம் தலையெடுக்கிறது. அறிவு மழுங் கிப்போய்விடுகிறது. சூரியோதயத்திற்கு மிக முன்பே எழுந்துகொள்ளுகிறவர்களுக்கு உள்ளம் தெளிவடைகிறது. உறுதிப்பாட்டுக்கு அது உறுதுணை. கல்விப் பயிற்சியில் வைகறையில் துயில் எழுந்திருத்தல் முக்கியமான இடம் பெற்றிருக்கிறது. இச்சீரிய பழக்கமும் ஆற்றலைப் பெருக்கு தற்கு உற்ற உபாயமாகும். தனக்கும் பிறர்க்கும் பயன்படுகிற உடல் உழைப்பை நாள்தோறும் சிறிது நேரமாவது செய்து வருபவனுக்கு ஆற்றல் தானாக வளர்ச்சியடைந்து வருகிறது.

## அன்பு

மனிதன் உணர்ச்சி படைத்தவனாயிருக்கிறான். உணர்ச்சியும் உயிர்வாழ்வும் நன்கு பிணைக்கப்பட்டிருக்கின்றன. உணர்ச்சியில்லாது உயிர்வாழ்வு இல்லை; உயிர் வாழ்வு இல்லாது உணர்ச்சியில்லை. உணர்ச்சி ஓங்குமளவு உயிர்வாழ்வு உறுதிபெறுகிறது. பின்பு இந்த உணர்ச்சியில் இரண்டுவிதத் தோற்றங்கள் உண்டு. ஒன்று உடன்பாடானது. மற்றது எதிர்மறையானது. உடன்பாட்டு உணர்ச்சி வாழ்வைப் புனிதப்படுத்துகிறது. எதிர்மறை உணர்ச்சி வாழ்வை மலினப்படுத்துகிறது. அன்பு உடன்பாட்டு உணர்ச்சியாகும். வெறுப்பு அதற்கு எதிர்மறை உணர்ச்சியாகும். அனுதாபம் உடன்பாட்டு உணர்ச்சி. எதிர்ப்பு எதிர்மறை உணர்ச்சி. பிறர் முன்னேற்றத்தைப் பாராட்டுதல் உடன்பாட்டுணர்ச்சி. அவர்களுடைய முன்னேற்றத்தைக் கண்டு பொறாமைப்படுதல் எதிர்மறை உணர்ச்சி. இன்பம் உடன்பாட்டுணர்ச்சி துன்பம் எதிர்மறை உணர்ச்சி. கேடு விளைவிக்கின்ற எதிர்மறை உணர்ச்சிகளைத் தவிர்க்கவும் நலன் விளைவிக்கின்ற உடன்பாட்டு உணர்ச்சிகளை வளர்க்கவும் செய்வது நல்ல கல்வித்திட்டமாகும்.

நாள்தோறும் இறைவணக்கம் செய்வது தூய அன்பைப் பெருக்குதற்குற்ற உபாயம். உயிர்களுக்கிடையில் இணக்கத்தை உண்டுபண்ணுவது அன்பு. உயிர்களனைத்துக்கும் ஆதாரமாயிருக்கும் பேருயிரே இறைவன் என அழைக்கப்பெறுகிறார். அப்பேருயிரிடத்து அன்பு கொள்ளுதலால் சிற்றுயிர்க்கு நல்லியல்பு வளர்கிறது. நீராடி உடலைத் தூயது ஆக்குவதுபோன்று இறைவணக்கத்தின் மூலம் உள்ளத்தைத் தெளிவுடையதாகத் திருத்தியமைக்கிறோம். இறைவன் என்னும் பெரிய பொருளிடத்து அன்

பைப் பெருக்குமளவு மனத்தெளிவு மனிதனுக்கு வருகிறது. நாள்தோறும் பிரார்த்தனை பண்ணிப் பழகுவது நல்ல கல்வித்திட்டமாகும். நீர் என்னும் பொருளுக்கு வெவ்வேறு மொழிகளில் வெவ்வேறு பெயர்கள் அமைந்துள்ளன. அங்ஙனம் இறைவனுக்கு வெவ்வேறு சமயங்கள் வெவ்வேறு பெயர்களை வழங்கியிருக்கின்றன. அவரவர் விருப்பப்படி தெய்வத்துக்கு வேண்டுமென்கின்ற பெயரிட்டு அழைக்கலாம். பேரறிவே என்றும் பேரன்பே என்றும் பொதுப் பெயர்களாலும் அவரை அழைக்கலாம்.

உணர்வை உயர்நிலைக்குக் கொண்டு வருவதற்கு இசை பெருந்துணைபுரிகிறது. இசை பயிலுகின்றவர்களும் அதை ரசிப்பவர்களும் பேரின்பம் எய்துகின்றனர். கல்லையும் உருக்கவல்லது இசை. அதன் வசப்படாத மானுடன் கல்லினும் கடைப்பட்டவன் ஆய்விடுவான். உயிருக்கு இனிமை தருகிற இசையை வளர்ப்பது நல்ல கல்வித் திட்டமாகும்.

கவிதையில் சொல்லழகும் பொருள் அழகும் பொதிந்து கிடக்கின்றன. இசையோடு இணைந்திருக்கவும் கவிதைக்கு இயலுகிறது. கவிதை கற்பதும் அதை இசையுடன் இணைத்துப் பாடுவதும் நல்லுணர்வை வளர்ப்பதற்கு உற்ற உபாயமாகும். வாழ்நாள் எல்லாம் பயன்படுகிற நல்ல பாக்கள் பலவற்றைச் சின்னஞ் சிறுவயதிலேயே மனப்பாடம் செய்து வைப்பது நல்ல பழக்கமாகும். அப்பாடல்களைப் பாடும்பொழுதெல்லாம் உணர்வு தானாகவே ஊற்றெடுத்து உயர்நிலைக்கு வரும்.

படங்கள் வரைவதும் ஓவியங்கள் தீட்டுவதும் உணர்வை வளர்ப்பதற்கு உற்ற உபாயங்கள் ஆகின்றன. எப்பொழுதெல்லாம் உணர்வு உயர்நிலைக்குப் போகிறதோ அப்பொழுதெல்லாம் அது பலதரப்பட்ட கலைஞானங்களா

கத் தன்னைத்தானே விளக்கிக்கொள்கிறது. சித்திரங்கள் வரைவதாலும் படங்கள் பொறிப்பதாலும் மனதுக்கு மகிழ்ச்சி வருகிறது. மனத்தில் உண்டாகிற மலர்ச்சியே சித்திரமாக உருவெடுக்கிறது. எனவே, சித்திரங்கள் வரைந்து பழகப் பழக மனத்தின் உணர்ச்சி படிப்படியாக மேல்நிலைக்குப் போகிறது.

பஜனைகள் பாடுவது பொதுப்பட எல்லாச் சமயங்களுக்கும் பொதுவானது. பஜனை பாடும்பொழுது பலர் அதில் கலந்துகொள்கின்றனர். அப்பொழுது உயர்ந்த உணர்வுகளே சிறந்த சொற்கள் மூலம் உருவெடுக்கின்றன. இசை அதற்கு அணியாக வந்து அமைகிறது. குறிப்பிட்ட வேளைகளில் மாணாக்கர்கள் பக்தி நிறைந்துள்ள பஜனைகள் பண்ணுவதால் தங்களுடைய தெய்வீக உணர்வுகளை அவர்கள் வளர்க்கின்றனர். நல்ல கல்வித்திட்டத்தில் அது முக்கியமான இடம் பெற்றிருக்கவேண்டியது முற்றிலும் அவசியம்.

நாடகங்கள் நடிப்பது உணர்வை வளர்ப்பதற்கு மற்றதோர் உபாயமாகும். கடவுளுக்கே கூத்தன் என்று பெயர் வந்துள்ளது. அண்டங்களனைத்தையும் இயக்குவது அவன் ஆடுகின்ற கூத்து ஆகும். பராக்கிரமம் வாய்ந்த பெருமக்களுடைய வாழ்க்கை வரலாறுகளை நாடகமாக நடிக்கின்ற சிறுவர்கள் தாங்களே அப்பெருவாழ்வை வாழ்பவர்கள் ஆகிறார்கள். உணர்ச்சியை உச்சநிலைக்குக் கொண்டு போவதற்கு நாடகங்கள் சிறந்த கருவிகள் ஆகின்றன.

ஒவ்வொரு நாட்டிலும் மேன்மக்கள் பலர் தோன்றியிருக்கின்றனர். அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகள் நல்ல காவியங்களாக அமைந்திருக்கின்றன. ஊக்கத்துடன் அக்காவியங்களைப் படிக்கின்றபொழுதும் விளக்கிச் சொல்

வதைக் கேட்கின்றபொழுதும் மாணாக்கர்களுடைய உள்ளத்தில் உணர்ச்சி ததும்பிக் கொண்டிருக்கும். எல்லாவித மான ரசங்களும் நிரம்பப் பெற்றவைகளாகப் பெருமக்களுடைய வரலாறுகள் கவிதைகளில் அமைந்திருக்கின்றன. அவ்வரலாறுகளைச் சிரத்தையுடன் கேட்பதால் மாணாக்கர்கள் மன அமைப்பிலே மாண்புடையவர்கள் ஆகின்றார்கள்.

அன்னையும், பிதாவும், ஆசிரியனும் மாணாக்கர்களுக்கு நாள்தோறும் கண்கூடாகத் தென்படும் பெரியோர்களாகின்றனர். காயத்தால் அவர்களை வணங்குவதன் மூலம் மனதிலே நல்லுணர்வு ஓங்கி வளர்கிறது. தாய் தந்தையரை வணங்கத் தெரியாதவன் மேலோன் ஆகமுடியாது. கல்வி புகட்டுகின்ற குரு இடத்து பக்தி செலுத்தாதவன் ஒரு பொழுதும் பண்பாடு அடையமாட்டான். கண்கண்டதெய்வங்களாக இம்மூவரையும் நாள்தோறும் வணங்கி வருவது நல்ல கல்விப்பயிற்சியாகும். பண்டைக்காலத்தில் மாணாக்கர்களுடைய வாழ்க்கையில் இப்பயிற்சி முக்கியமான இடம் பெற்றிருந்தது. இக்காலத்தில் இது பெரிதும் மறைந்து போய்விட்டது. இதைத் திரும்பவும் புதுப்பித்தாலொழிய இக்காலத்து மாணாக்கர்களுக்கு மரியாதையோடு கூடிய சீரிய மனப்பான்மை வந்தமையாது. முதலில் தாய், தந்தை, குருவை வணங்கிப் பழகிவிட்டுப் பிறகு வயது வரவர மற்ற பெரியவர்களிடத்தும் மரியாதையாகப் பழகியும் பேசியும் பணிவிடை செய்தும் பழகிவருவது நல்ல பயிற்சியாகிறது. மனிதன் உலகத்தவரோடு வைக்கும் இணக்கத்தினின்றே அவனுடைய பண்பாடு விளங்குகிறது. மக்களுடன் நல்லிணக்கம் வைத்துப் பழகுகின்றவனே தன் உள்ளத்தில் நல்லுணர்வை வளர்த்து வருபவனாகிறான்.

அன்பு என்னும் நல்லுணர்வை வளர்ப்பதற்கு வேறு பல உபாயங்களிருக்கின்றன. ஏழையர்களுக்கு உணவு படைப்பது, நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வது, நாட்டுப்பாடல் பாடுவது, கும்மியடிப்பது, உல்லாசப் பிரயாணங்கள் போவது, களிமண்ணில் வடிவங்கள் அமைப்பது, புறா, மயில் போன்ற பறவைகளையும், நாய், பூனை, பசு போன்ற விலங்குகளையும் அன்புடன் வளர்த்துவருவது, உற்சாகத்துடன் தோட்டம் அமைப்பது, சிறு குழந்தைகளைப் பேணுவது ஆகிய செயல்கள் எல்லாம் அன்பை வளர்ப்பதற்கானவைகள் ஆகின்றன. இவைகளில் முறையாக ஈடுபடுவது நல்ல கல்வித்திட்டமாகும்.

## அறிவு

மனிதனிடத்து இயல்பாகவே அன்பு இருப்பதுபோன்று அறிவும் இருக்கிறது. அறிவை வளர்ப்பதற்கான சில உபாயங்களைப் பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் கையாண்டுவருகின்றன. எனவே அவைகளை விரிவாக ஈண்டு எடுத்து இயம்பவேண்டிய அவசியமில்லை. ஆனால் சுருக்கமாக அவைகளைப்பற்றிச் சிறிது சொல்லியாகவேண்டும். கணக்குப்போட்டுப் பழகுமளவு அறிவு வளர்ச்சியுண்டாகிறது. பௌதிக விஞ்ஞானம், வானசாஸ்திரம், பூகோள சாஸ்திரம், தேச சரித்திரங்கள் ஆகியவைகளை முறையாகக் கற்பதன் மூலம் அறிவு வளர்ச்சியடைகிறது. நல்ல கட்டுரை எழுதுகின்றவன் தன்போக்கில் மொழியை சிருஷ்டிக்கின்றான். அம்மொழியின் மூலம் சீரிய கருத்துக்களை வெளியிடுகின்றான். நல்லறிவு படைத்திருப்பவனுக்கே உயர்ந்த கருத்துக்கள் உள்ளத்தில் உதிக்கின்றன. பிறகு நல்ல மொழியிலே அவைகள் விளக்கப்பெறுகின்றன. எனவே கட்டுரைகள் எழுதிப் பழகுமளவு மாணாக்கன் ஒருவன் தன் அறிவை வளர்க்கின்றான்.

தர்க்க நூல் வாசிப்பதும் சீரிய கருத்துக்களைப்பற்றி ஒருவரோடு ஒருவர் முறையாகச் சம்வாதம் செய்வதும் அறிவைத் தீட்டுவதற்கு உற்ற உபாயங்களாகின்றன. சான்றோர்கள் தங்களுடைய மேலான எண்ணங்களை நூல்களாக அமைத்து நமக்குக் கொடுத்திருக்கின்றனர். அந்த நூல்களை ஆராய்வதும் அவைகளில் புதைந்து கிடக்கும் எண்ணங்களைப்பற்றிச் சிந்திப்பதும் நல்ல சாதனமாகிறது. அதன்மூலம் அறிவு வளர்ச்சி தானாக உண்டாகிறது. முறையாகக் கேள்வி கேட்க எல்லாருக்கும் இயலுவதில்லை. நன்கு எண்ணிப்பார்க்கின்றவனே நல்ல முறையில் கேள்வி கேட்க வல்லவனாகின்றான். பொருத்தமான கேள்விகளைக் கிளப்பிப் பழகுகின்றவன் தன் அறிவையே வளர்த்து வருகின்றான். மனிதன் செய்கின்ற செயல்களுள் சிந்தித்துப் பார்ப்பது மிகக் கடினமானது. ஒரு நாளெல்லாம் உடலைக் கொண்டு உழைக்கலாம். அதில் பெரிய ஆயாசம் உண்டாய்விடாது. ஆனால் முறையாக அரைமணி நேரம் சிந்திப்பது கடினமானது. ஆனால் சிந்தித்துப் பழகுமளவு சிந்தை தெளிவடைகிறது. அறிவுக்கு வளர்ச்சி உண்டாகிறது.

ஆற்றல், அன்பு, அறிவு ஆகிய மூன்று பகுதிகளும் மனிதனிடத்து அமைந்துள்ள தெய்வீக இயல்புகள் ஆகும். பேராற்றல் படைத்திருக்கிறவன் பெருவாழ்வுக்குத் தகுதியுடையவன் ஆகின்றான். அந்த ஆற்றல் மன உறுதியையும் செயல் வன்மையையும் உண்டுபண்ண வல்லதாகிறது.

**எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்ணியார்**
**திண்ணியர் ஆகப்பெறின்**

என்னும் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது ஆற்றல். வாழ்வுக்கு இனிமை தருவது அன்பு. இயங்கு

கின்ற யந்திரத்துக்கு எண்ணெய் போட்டால் அது தடங்கல் இன்றி இயங்குகிறது. அந்த எண்ணெய்க்கு நிகரானது அன்பு. அன்புடையவர்களே எங்குச் சென்றாலும் வாழ்வை நன்கு கொண்டு செலுத்துபவர் ஆகின்றனர். அதுமட்டுமல்ல.

**அன்பின் வழியது உயிர்நிலை, அஃது இலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு**

என்பது கோட்பாடு. அன்பு ததும்புகின்றவளவு மனிதனிடத்துப் பேருயிர் பொலிகிறது. அதினின்று பெருவாழ்வு உருவெடுக்கிறது. கண்ணில்லாதவனுக்கு வாழ்வே குறை வாழ்வு ஆய்விடுகிறது. இயற்கையானது எல்லாம் படைத்திருந்தாலும் அவைகளின் பண்புகளைக் கண்ணில்லாதவன் உள்ளபடி அறியமாட்டான். பின்பு ஊனக்கண்ணிலும் அரியது ஞானக்கண். நல்லறிவு படைத்திருக்கின்றவனே ஞானக்கண் படைத்திருப்பவன் ஆகிறான்.

**எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு**

என்பது கோட்பாடு. நல்ல கண்ணாடி பொருள்களின் பிம்பங்களையெல்லாம் உள்ளபடி காட்டி விடுவது போன்று நல்லறிவு படைத்திருக்கின்றவன் இயற்கையில் உள்ள அனைத்தையும் உள்ளபடி அறிகிறான். நல்லறிவு படைத்திருக்கின்றவன் மேலும் தன்னைப் பற்றிய மற்றோர் உண்மையைத் தெரிந்து கொள்கிறான். உடலிலுள்ள உறுப்புக்கள் எல்லாம் உடலுக்கு உரியவைகள் ஆகின்றன. ஒவ்வோர் உறுப்பும் தனக்கென வாழ்ந்திராது உடல் நலத்துக்கென உழைத்து வருகிறது. உடல் நலத்திலேயே உறுப்பின் நலம் அடங்கியிருக்கிறது. அதே விதத்தில் தனி மனிதன் சமுதாயத்துக்காக இருக்கிறான். சமுதாய நலத்திலேயே

தனது தனி நலன் அடங்கியிருக்கிறது. சமுதாயத்தைத் தனது தனி நலனுக்காகப் பயன்படுத்த முயலுகிறவன் நிறை கல்வி கற்றவனல்லன்; குறைகல்வி கற்ற கயவன் ஆகிறான் அவன். தான் வாழ்ந்திருப்பதே சமுதாயத்தின் பொது நலனுக்காகவென்று கருதி சமுதாயத்துக்குப் பணிவிடை செய்து வருகின்றவன் நிறைகல்வி கற்றவனாகிறான். நிறை கல்வி கற்றவனுக்கே மனப்பான்மையும் நிறைநிலையடை கிறது. அத்தகையவனுடைய உடல் வாழ்க்கைக்குத் தேவை யாயிருப்பவைகள் தாமாக வந்து அமைகின்றன. பொருளைத் தேடி அலைந்து திரியவேண்டிய அவசியம் அவனுக்கில்லை. நிறை மனிதனாயிருந்து நிறைவாழ்வு வாழ்ந்து மக்களுக்குப் பயன்படுவதிலேயே அவன் கண்ணுங்கருத்துமாயிருக்க வேண்டும். நிறை கல்வியின் விளைவு இதுவேயாம்.

உலக வாழ்க்கைக்கு உறுதுணையாயிருக்கின்ற நிறை கல்வி கற்கிற மனிதன் பிறகு பரஞானத்தைப் பெறவும் தகுதியுடையவனாகிறான். ஏனென்றால் உலக ஞானமும் பரஞானமும் வேறுபட்டவைகளல்ல. சீரிய உலக ஞானமே பரஞானமாக் வடிவெடுத்து விடுகிறது. எனவே நிறைகல்வி யானது இகம் பரம் ஆகிய இரண்டுக்கும் நல்ல சாதன மாகிறது.

பக்தனுடைய இதயபீடம் பகவானுடைய வாசஸ்தானம் என்பதை நீ நினைவில் இருத்தல் வேண்டும். பகவான் எல்லா ஜீவர்களிடத்தும் இருக்கின்ருர் என்பதில் ஐயமில்லை தான். ஆனல் பக்தனுடைய இதயத்தில் அவர் தம்மை விசேஷமாக ஆவிர்பவித்துக் கொள்கின்ருர். பக்தனின் இதயம் பகவானுடைய வாச அறை.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

இறைவனுடைய திருநாமத்தை ஓதியும் அவர் புகழ் பாடியும் இறைவனிடத்து மனதை இருத்தி வைத்தலே பக்தி யாகும். மேலே ஏதும் பூசப்பெருத கண்ணுடியின் மீது உருவமெதையும் பதியவைக்கமுடியாது. ஒரு கருப்பான கரையம் தடவப் பெற்ற கண்ணுடியின் மீதுதான் அதைப் பதிய வைக்கலாம். போட்டோ படமெடுப்பவர் இவ்வாறு தான் செய்வர். பகவத் பக்தி அந்தக் கருப்பான கரையம் போன்றது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

நீ பித்தனுக இருந்தேயாகவேண்டுமானல் உலக விஷ யங்களுக்காகப் பைத்தியம் பிடித்தவனுக ஏன் இருக்க வேண்டும்? பைத்தியம் பிடித்தவனுக இருந்தேயாகவேண்டு மானல் கடவுளுக்காக மட்டுமே பைத்தியம் பிடித்தவனுக இருப்பாயாக.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

முக்திக்குதவும் சாதனங்களுள் பக்திதான் தலைசிறந் தது. தன்னுடைய உண்மை நிலையில் நாட்டமே பக்தி யெனப்படும். விழிப்புநிலையில் கனவு பொய்யாகிறது; கனவு நிலையில் விழிப்புலகம் இல்லை; ஆழ்ந்த உறக்கத்தில் இரண் டும் இல்லை; உறக்கமும் மற்ற இரண்டு நிலைகளில் இல்லை.

— ஸ்ரீ சங்கரர்




# ஞானம்

ஆனந்த சொரூபமாகவும், அறிவு சொரூபமாகவும், நித்திய சொரூபமாகவும் தான் இருப்பதாக உணர்வது ஞானம் ஆகும். உலகில் வரும் இன்ப துன்பங்கள் ஞானம் அடைந்தவர்களுக்கு இல்லை. யாண்டும் திருப்தியுடையவனாக ஞானி இருக்கின்றான். வெறும் நூல்களைப் படிப்பதால் ஞானம் வந்துவிடாது. மனதைத் தூய்மைப்படுத்துகின்றவர்களுக்கே ஞானம் உண்டாகிறது.

குடும்பஸ்தர்களுடைய ஞானத்துக்கும் முற்றும் துறந்தவர்களுடைய ஞானத்துக்கும் இடையில் பெரிய வேற்றுமையுண்டு. ஒரு வீட்டுக்குள் ஏற்றி வைத்திருக்கும் தீபத்துக்கு ஒப்பானது குடும்பஸ்தனுடைய ஞானம். சூரியப் பிரகாசத்துக்கு ஒப்பானது துறவியின் ஞானம். சூரியப் பிரகாசம் வீட்டுக்கு வெளியில் மட்டுமல்ல வீட்டினுள்ளும் சென்று பொருள்களை விளக்குகிறது. அறைக்குள்ளிருக்கும் தீபமோ அங்கிருப்பதை மட்டும் விளக்குகிறது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

பிரம்ம ஞானம் பெறுவது எளிதன்று. ஜனகர் உலக வாழ்க்கையில் புகுதற்கு முன்பு கடுந்தவம் புரிந்து ஞானத்தைப் பெற்றார். ஆயினும் அவர் பெற்ற ஞானத்தில் கொஞ்சம் குறை இருந்தது. பைரவி ஒருத்தி ஜனகர் முன்னிலைக்கு வந்தாள். பெண்பாலை நேராகப் பார்க்கக் கூடாது என்று அவர் தலைகுனிந்தார். அப்பொழுது பைரவி பகர்ந்ததாவது: 'ஓ, தாம் இன்னும் நிறைஞானம் பெறவில்லை. ஏனென்றால் ஆண்பால், பெண்பால் என்னும் வேற்றுமை இன்னும் உமது மனதில் எஞ்சியிருக்கிறது.'

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

M. R J.J

## SOME OF OUR ENGLISH PUBLICATIONS

THE BHAGAVAD GITA
SRI LALITAMBIKA SAHASRANAMA STOTRAM
INDIAN NATIONAL EDUCATION
MIND AND SPIRITUALITY
TIRUKKURAL
SIVA SAHASRANAMA STOTRAM
MAN MAKING MESSAGE OF VIVEKANANDA
MAHABHARATA
SRI KRISHNA THE MANIFEST DIVINITY
THE BHAGAVAD GITA (POCKET SIZE)
DAILY DIVINE DIGEST
CHICAGO ADDRESSES
HINDUISM HOSTS CHRISTIANITY
SRI VISHNU SAHASRANAMA STOTRAM
HOLY BIBLE - IN THE LIGHT OF VEDANTA
INTRODUCING THE GITA
KEY TO HIGHER LIFE
THE STUDENT
THE TEACHER
THE SCHOOL
THE NURSERY SCHOOL

---

SRI RAMAKRISHNA TAPOVANAM
(PUBLICATION SECTION)
TIRUPPARAITTURAI - 639 115, TRICHY DT.

## SOME OF OUR ENGLISH PUBLICATIONS:

THE BHAGAVAD GITA
— do — (with plastic cover)
SRI LALITHAMBIKA SAHASRANAMA STOTRAM
INDIAN NATIONAL EDUCATION
TIRUKKURAL (with plastic cover)
RAMAKRISHNA LIVES VEDANTA
RAMAYANA (with plastic cover)
MAHABHARATA
SRI KRISHNA-THE MANIFEST DIVINITY
MAN MAKING MESSAGE OF VIVEKANANDA
THE BHAGAVAD GITA (pocket size)
DAILY DIVINE DIGEST (deluxe edn.)
DAILY DIVINE DIGEST (popular edn.)
HINDUISM HOSTS CHRISTIANITY
HOLY BIBLE — IN THE LIGHT OF VEDANTA

INTRODUCING THE GITA
THE STUDENT
THE NURSERY SCHOOL
KEY TO HIGHER LIFE
THE TEACHER
THE SCHOOL

